*உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.*

*நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. (பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)*

[illegible]

# சூஃபி மெய்ஞ்ஞானி
# குணங்குடி மஸ்தான் சாகிபு

உ. அலிபாவா



சாகித்திய அகாதெமி

**Sufi Meignani Gunangudi Masthan Sahib** - Monograph in Tamil by U. Alibava, Sahitya Akademi, New Delhi, (Re-Print 2017) Rs. 50/-



முதல் பதிப்பு : 2012
இரண்டாம் பதிப்பு : 2017

**தலைமை அலுவலகம்:**

சாகித்திய அகாதெமி, 'இரவீந்திர பவன்,' 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி - 110 001.

**விற்பனை அலுவலகம்:**

'ஸ்வாதி,' மந்திர் சாலை, புது தில்லி - 110 001.

**மண்டல அலுவலகங்கள்:**

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டடம், டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூரு - 560 001.

4, டி.எல். கான் சாலை, கொல்கத்தா - 700 025.

172, மும்பை மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை, தாதர், மும்பை - 400 014.

**சென்னை அலுவலகம்:**

குணா பில்டிங்ஸ், 443, அண்ணா சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018.

ISBN-978-81-260-3161-0

Rs. **50.00**

Visit our Website at http://www.sahitya-akademi.gov.in

Laser Execution: **van - Image Digital**, *Chennai - 17.*

Design: PSS Rao - Spectrum Graphics Studio - Chennai - 17.

Printer: MK Enterprises, Chennai - 14.

## குரு வணக்கம்

அறமாக நின்றும் அருளாக நின்றும்
ஆட்கொண்ட குருவானவன்
நிறமாலை போன்ற சமயங் களுக்குள்
சமரச உருவானவன்
திறமான ஞான மணிமாலை கண்ணி
சதகங்கள் பொழிவானவன்
நிறைவாக நெஞ்சில் குணங்குடி யண்ணல்
நினைவினைப் போற்றிநிற்பாய்

—சிற்பி

# முகப்புக் குறிப்பு

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய உலகில் எல்லோராலும் நன்கு அறியப்பட்ட பெரும்புலவர் சூஃபி மெய்ஞ்ஞானி குணங்குடி மஸ்தான் சாகிபு. அவர் தன்னலமற்ற தூய நெஞ் சினர்; தியாக சீலர்; மனித நேய மாண்பாளர்; உண்மையான சூஃபிகளின் உயர் பண்புகளையெல்லாம் ஒருங்கே பெற்ற ஒப்பற்ற பெருந்தகையாளர்; உயர்தகைமையுடையவர். குணங்குடி வாழ் இறைவனின் நற்பண்புகளையெல்லாம் தம்பால் குடிவைத்த குணங்குடியார் இறைவன் மீது அபார அன்பும் தீராக் காதலும் கொண்ட ஞானச் சித்தர். அவருடைய சொல், செயல், வாழ்வு அனைத்தும் மிகத்தூய்மையானவை. மனித குலத்தின் மீட்சியே அவரின் தலையாய குறிக்கோள்.

குணங்குடியாரின் இறைப் பற்றுக்கு ஈடு இணையில்லை. அவருடைய ஞானப் பாடல்கள் எல்லோரையும் ஈர்க்க வல்லவை. ஞான நெறியில் செல்வோரைத் தன்வயப்படுத்தும் ஆற்றல் உடையவை. எங்கும் எதிலும் இறைவனையே காணும் குணங்குடியாரின் பக்தி நெறி அனைவரும் உணர்ந்து பரவசமடையும் பக்தி நெறி. எல்லோரும் பின்பற்றத்தக்க பக்தி நெறி.

இராமலிங்க அடிகளாருக்கு முன்பே தமிழ்க் கவிதையை எளிமைப் படுத்திய பெருந்தகையாளரான குணங்குடியார், சாதி மத மொழி இன பேதமின்றி எல்லோரையும் நேசித்து வாழ்ந்த ஞான வள்ளல். அவருடைய தனித்துவமான சிந்தனையையும் படைப்பாளுமையையும் உலகறியச் செய்ய வேண்டியது தமிழர் தம் அருங்கடன். அவர் பாடல்களின் அடிநாதம் சமய சமுதாய சமரசம் காண்பதும் நிலையான பேரின்பப் பேற்றினை எல்லோரும் பெறுவதும் ஆகும்.

எவரையும் சுண்டி இழுக்கும் குணங்குடியாருடைய ஞானப் பாடல்களில் ஈடுபடும் வாய்ப்பு எனக்குக் கிடைத்த பெரும் பேறு. நூலை எழுதத் தொடங்கிய நாள் முதலாய்க் குணங்குடியாருடனேயே அலைந்து, திரிந்து, உண்டு, உறங்கிப் பாடிக் களித்த பேரனுபவம் நேர்ந்து பெருமகிழ்வு எய்துகிறேன்.

குணங்குடியார் என்னும் பெருமகனாரைப் பற்றி நூல் எழுதும் அரிய பெரிய வாய்ப்பினை எனக்கு அளித்த இந்திய அரசின் மிக உயர்ந்த இலக்கிய அமைப்பான சாகித்திய அகாதெமிக்கும், செம்மையாக நூல் அமைவதற்குப் பேருதவி புரிந்து நெறிப்படுத்திய தோடமையாது அம்மையப்பராய் இருந்து என்னை எப்போதும் ஆற்றுப்படுத்தியும் பல்லாற்றானும் எனக்கு உதவியும் வரும் 'சாகித்திய அகாதெமி'யின் தமிழ் ஆலோசனைக் குழு ஒருங்கிணைப்பாளர் என் அன்புக்கும் மரியாதைக்கும் போற்றுதலுக்குமுரிய பேராசிரியர் கவிஞர் **சிற்பி பாலசுப்பிரமணியம்** அவர்களுக்கும், அன்புக்குரிய அன்னையார் திருமதி அரங்க நாயகி சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்களுக்கும் நன்றி நவிலல் என் தலையாய கடன்.

சாகித்திய அகாதெமியின் தென் மண்டல முன்னாள் செயலர் திரு. ஜெ. பொன்னுதுரை, சாகித்திய அகாதெமி சென்னை அலுவலக தற்போதைய பொறுப்பு அலுவலர் திரு. **அ.சு. இளங்கோவன்**, பதிப்புத்துறை உதவியாளர் திரு. **சிந்தாலப்புடி சீனிவாஸ்** ஆகியோருக்கு நன்றி.

இந்நூலை இயற்றுவதற்கு அரிய கருத்து மணிகளைத் தெரிவித்தும், நூலை வரி விடாது படித்துச் செழுமைப் படுத்தியும் உதவிய பெருந் தகையாளர் பெருமதிப்பிற்கும் பாசத்திற்குமுரிய பேராசிரியர் கவிஞர் அபி அவர்களுக்கு நெஞ்சம் நிறைந்த நன்றி.

பேரன்புக்குரிய எழுத்தாளர் திரு. தோப்பில் முகம்மது மீரான், குணங்குடியாரின் வழித்தோன்றல் திரு. குணங்குடி சாகுல் ஹமீது மற்றும் அவர் தம் குடும்பத்தார், குணங்குடியார் தறுகா நிர்வாகி திருமதி ஆர். சாபிராபீ, தரவுகள் திரட்ட சென்னையில் பல நாட்கள் எனக்கு உதவிய இஸ்லாமிய ஐக்கிய முன்னேற்றக் கழக அமைப்புச் செயலர் திரு. அ. அப்துல் ரகுமான், நர்கிஸ் எஜுகேஷனல் டிரஸ்ட் நிர்வாகி திரு. எஸ்.என்.கே. யூசுப் ஆகியோருக்கு என்றும் நன்றிக் கடப்பாடுடையேன்.

அரிய பல நூல்களை அளித்து உதவிய திரு. கம்பம் எஸ். முகம்மது அலி, இலங்கைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் எம்.ஏ.நுஃமான், ஜமால் முகம்மது கல்லூரித் தமிழாய்வுத் துறைத் தலைவரும் எனதருமைச் சகோதரருமான பேராசிரியர் எம்.ஏ.எஸ். ஹபீபுர் ரஹ்மான், ஆங்கிலப் பேராசிரியர் ஒய். பர்வேஷ் ஷரீப்,

பேராசிரியர் க. இக்பால், பேராசிரியர் இரா. இராஜராஜன், உற்றுழி உதவிய அன்புத் தம்பி ச. சர்புதீன், எஸ்.மல்கர் ஒலி ஆகியோர்க்கும், அறபி விளக்கங்கள் அளித்த சிறிய தகப்பனார் மௌலவி எஸ்.முகம்மது அபுசாலிஹ் முனீரி அவர்களுக்கும், எப்போதும் ஆக்கமும் ஊக்கமும் நல்கி வரும் என் அன்பிற்குரிய அன்னையார் திருமதி எம்.ஜெயிலானி அவர்களுக்கும் என் அன்பின் நன்றி.

இந்நூலை அச்சக உலகம் மெச்சும் வண்ணம் கணினி ஆக்கம் செய்த (Lay-Out) '**இமேஜ் டிஜிட்டல்**' **வலங்கைமான் வி.எஸ். நாராயணன்** அவர்களுக்கும் என் அன்பு நன்றி.

எல்லாவற்றுக்கும் மேலாக நூல் செம்மையாக நிறைவுறப் பேரருள் புரிந்த, எங்கும் நிறைந்த, எல்லாம் வல்ல ஏக பராபரனுக்கு என் நிறைவான நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகிறேன்.

சமய சமரசம் பேசி வாழ்ந்த குணங்குடியாரின் வாழ்வையும் அவர் தம் படைப்புக்களையும் தமிழ் கூறும் நல்லுலகம் அறிந்து போற்ற வேண்டும் என்பதே இந்நூலின் நோக்கம்.

ஞானவான்களின் கருத்துக் குவியல்களையும் வாழ்வியல் விளக்கங்களையும் உணர்ந்து பின்பற்றி நடந்து நம் வாழ்வை நெறிப் படுத்திக் கொள்வதே குணங்குடியார் போன்ற பெருந்தகையாளருக்கு நாம் செய்யும் அஞ்சலியும் நன்றியும்.

திருச்சிராப்பள்ளி — உ. அலிபாவா

05-08-2011

# பொருளடக்கம்

# 1. வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள்

இஸ்லாமியத் தமிழ்த் தத்துவ இலக்கியப் படைப்பாளர்களுள் மிகச் சிறந்தவர் குணங்குடி மஸ்தான் சாகிபு. 'இஸ்லாமியத் தமிழ்ச் சித்தர்' என்றும் 'சூஃபி ஞானி' (மெய்ஞ்ஞானி) என்றும் இவர் தமிழ் இலக்கிய உலகில் எல்லோராலும் நன்கு அறியப்பட்டவர். ஞானப் பாடல்கள் பாடுவதில் வல்லவராகத் திகழ்ந்த இவர் சர்வ சமய சமரச நோக்குடையவர். இஸ்லாம் தந்த தாயுமானவர்.

குணங்குடி மஸ்தான் சாகிபு இராமநாதபுரம் மாவட்டம் தொண்டிக்கும் தேவகோட்டைக்கும் நடுவில் உள்ள குணங்குடி என்னும் சிற்றூரில் கி.பி. 1788-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் பிறந்த ஊர் தந்தையின் ஊரான தொண்டி என்றும் தாயின் ஊரான குணங்குடி என்றும் மதுரை என்றும் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. நயினார் முகம்மது, பாத்திமா ஆகியோர் இவர்தம் பெற்றோர் ஆவர். குணங்குடியாருக்குப் பெற்றோர் இட்ட பெயர் சுல்தான் அப்துல் காதிர்.

மதுரையில் வாழ்ந்த மின்னா நூருதீன் புலவர் குணங்குடியாரின் முப்பாட்டனார். திருக்குர்ஆனைத் தமிழில் மொழிபெயர்த்தவரான இவர் மாமேதை; இசை வல்லுநர்; கலைக் கடலின் கரை கண்டவர். நபிகள் நாயகத்தின் பொன்மொழிகளைத் தொகுத்துப் 'பொன்னரிய மாலை' என்னும் அருந்தமிழ்ப் பனுவலையும் இவர் இயற்றியுள்ளார். இல்லறம் துறவறம் ஆகிய இருவகை ஒழுகலாறுகளையும் நல்லறமாக நடத்தி வந்த குணங்குடியாருடைய தந்தையாரான நயினார் முகம்மது இவர்தம் வழிவந்தவர். இதேபோல் இவருடைய தாயார் பாத்திமா நபிகள் நாயகத்தின் குடிவழியில் வந்தவர் என்பர். இருவழிப் பெருமையும் ஒருங்கே பெற்ற குணங்குடியார் இச்செய்தியைத் தம் தாய்வழிப் பாட்டனாராகிய முல்லா ஹுசைன் மீது பாடிய அறபு இரங்கற்பாவில் 'வ நிஸ்ப ஹாதாஷைகி நஸ்ப முஹம்மதீ' (இவர் முகம்மது நபிகளின் குடிவழியில் வந்தவர்) எனப் பாடித் தெரிவிக்கிறார்.

இளமைப் பருவத்திலேயே உலக வாழ்க்கையை விரும்பாமல் இறைக்காதலில் மூழ்கித் திளைக்க விரும்பினார் குணங்குடியார். தொண்டியில் புகழுடன் வாழ்ந்து வந்த தம் தாய்மாமனார் கட்டை சாகிபு வீட்டிற்குச் சென்றார். தமக்கென உறுதிசெய்யப்பட்டு வைத்திருந்த மைமூன் என்னும் பெண்ணைச் சந்தித்தார். 'இறைவன் மீது ஆணையாக நான் உன்னை ஒரு போதும் திருமணம் செய்து கொள்ள இயலாது' எனத் தம் கருத்தைத் தெரிவித்தார். தம் தம்பி பீர் முகம்மதுவை மணந்துகொள்ள வேண்டினார். துறவு நெறி மேற்கொள்ள ஆயத்தமானார். இதனை மைமூனும் ஏற்றார். குணங்குடியார் 'நீ தானம்மா என் துறவொழுக்கத்தின் முதல் குரு' என்று மைமூனைப் போற்றினார்.

குணங்குடியார் இளம் வயதிலேயே தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார். இறை நினைவில் ஈடுபடத் திருமணம் தடையாக இருக்கும் எனக் கருதித் திருமணத்தை வெறுத்தார். பதினேழாம் வயதில் தவ ஒழுக்கம் மேற்கொள்ள வேண்டும் எனத் தீராத ஆவல் கொண்டார். தந்தையார் ஆசி பெற்றார். பின்னர்க் கீழக்கரை என்னும் ஞானபூமியை நோக்கி நடந்தார். அங்குக் கல்விக் கடல் எனப் புகழ் பெற்று விளங்கிய தைக்கா சாகிபு என்று அழைக்கப் படும் செய்கு அப்துல் காதிரி லெப்பையை அணுகினார். அவரிடம் மார்க்கக் கல்வி பயிற்றுமாறு கனிவுடனும் கண்ணியத்துடனும் வேண்டினார்.

குணங்குடியாரின் கமல வதனத்தையும் கருணை பொங்கும் கண்களையும் கண்ட தைக்கா சாகிபு அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். அங்கு இஸ்லாமிய மார்க்கக் கல்வி பயிலும் போது தான் பின்னாளில் புலவர் நாயகம் என்னும் புகழ்ப் பெயர் பெற்று ஒளிர்ந்த செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிமைக் (ஷேகனாப் புலவர்) கண்டார். அன்று முதற்கொண்டு இருவரும் இணைபிரியா நண்பர்களாயினர்.

**வியப்புச் செய்திகள்**

குணங்குடியார் கீழக்கரையில் மார்க்கக் கல்வி பயின்ற போது தம் நாஇச்சைகளை எல்லாம் அடக்கி ஆள நினைத்தார். சோற்றுக் கற்றாழையை உண்டு பசி போக்கினார். இதனையறிந்த தைக்கா சாகிபு அவர்மீது அன்பும் இரக்கமும் கொண்டு ஒரு செல்வரை அவருக்கு உணவளித்து வர வேண்டினார். அவரும் உணவளித்து வரலானார். ஒரு நாள் அவர் வீட்டில் கோழி சமைத்து எல்லோரும் உண்டுவிட்டுக் குணங்குடியாருக்கு மட்டும்

வெறும் சோற்றை வைத்தனர்.

பள்ளியிலிருந்து வந்த குணங்குடியார், அவர்களிடம் கோழி சமைத்துச் சாப்பிட்டுவிட்டுத் தமக்கு வெறும் சோற்றை வைத்திருப்பதனால் ஒன்றுமில்லை; தமக்கு எதனையும் மறைக்க வேண்டியதுமில்லை; தாங்கள் எதை வேண்டுமானாலும் சாப்பிடலாம்; தமக்கு அதைத் தர வேண்டிய அவசியமும் இல்லை; வெறும் சோறு மட்டும் தந்தால் போதும் என்றார். மறைத்து வைத்த செய்தி எவ்வாறு தெரியும் என அவ்வீட்டினர் வியப்பில் ஆழ்ந்தனர். இதன்பின் குணங்குடியாரை அவர்கள் பெரிதும் மதிக்கத் தொடங்கினர்.

தைக்கா சாகிபிடம் திறந்த வெளியில் அமர்ந்து குணங்குடியாரும், பிற மாணவர்களும் ஒரு நாள் பாடம் கேட்டுக் கொண்டிருந்தனர். அப்போது மழை பெய்யத் தொடங்கியது. எல்லா மாணவர்களும் நனையாத இடங்களில் ஒதுங்கினர். குணங்குடியாரும், தைக்கா சாகிபும் அவ்விடத்தை விட்டு எழ வில்லை; அவர்கள் மீது மழை ஒரு துளிகூட விழவுமில்லை; அவர்கள் இருந்த இடமும் நனையவில்லை.

இன்னொரு நாள் தைக்கா சாகிபு மாணவர்களுக்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அப்போது அவர் 'வாயை மூடியவர்கள் நிம்மதியடைந்தார்கள்; ஈடேற்றம் பெற்றார்கள்' என்னும் நபிகள் நாயகத்தின் பொன்மொழியான பெருமொழிக்கு அற்புதமாக விளக்கவுரை பகர்ந்தார். இதனைக் கேட்ட குணங்குடியார் ஈடேற்றம் பெற விரும்பி அன்று முதற்கொண்டு வாயைத் திறந்து யாதொரு மொழியும் பேசவில்லை.

**சுட்டிக் காட்டியும் எண்ணில் தொகுத்தும்**
**எட்டிக் காட்டியும் எழுதிக் காட்டியும்**

(செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை, வாயுறை வாழ்த்து)

தம் கருத்தை வெளிப்படுத்தினார்.

கீழக்கரையில் பாங்குறப் பயின்று ஆலிம் (மார்க்கக் கல்வி அறிஞர்) என்னும் பட்டத்தைப் பெற்ற குணங்குடியார் தமிழிலும் அறபியிலும் புலமை பெற்றார். பின்னர் ஒரு ஞான குருவைக் கண்டு தீட்சை பெற விரும்பினார்.

**திருச்சிராப்பள்ளியில் தீட்சை**

கி.பி. 1805 (ஹிஜ்ரி (இஸ்லாமிய ஆண்டு) - 1228)இல் பற்றற்று முற்றும் துறந்து கீழக்கரையினின்றும் நீங்கினார். தோளிலிருந்து கால் வரை கறுப்புக் கம்பளி உடையை அணிந்தார். திருச்சிராப்பள்ளி நோக்கி நடந்தார். அப்போது அவரின் பள்ளித் தோழரான புலவர் நாயகம் குணங்குடியாரின் கரத்தைப் பிடித்து, அவர் சமாதியடைய விரும்பும் இடத்தில் தமக்கும் ஓர் இடம் தர வேண்டினார். குணங்குடியாரும் சம்மதித்தார்.

ஞான குருவைத் தேடித் திருச்சிராப்பள்ளியை நோக்கி நடந்து கொண்டிருந்த குணங்குடியாரை ஒருவன் பின் தொடர்ந்தான். எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. மீண்டும் தொடர்ந்தான். அவனை அருகில் அழைத்து 'என்னைப் பின்தொடர்ந்தால் நான் செய்வதையெல்லாம் நீயும் செய்ய வேண்டி வரும்' என்று மணலில் எழுதிக் காட்டினார். அவனும் சரியென்றான்.

அப்போது ஓர் அழகிய மங்கை எதிர்ப்பட்டாள். கட்டியணைத்து முத்தமிட்டார் குணங்குடியார். அவனும் அவ்வாறே மகிழ்வோடு செய்தான். அதன்பின் கொல்லனின் உலைக்களம் ஒன்று எதிர்ப்பட்டது. அங்கிருந்த பழுக்கக் காய்ந்த நெருப்புப் பிழம்பைக் குணங்குடியார் முத்தமிட்டார். இதனைக் கண்ட அவன் அஞ்சி ஓடினான்.

தொடர்ந்து பயணித்தார். திருச்சிராப்பள்ளியை அடைந்தார். அங்கு அறிவொளி பெற்று உயர்ந்து விளங்கிய ஆலிம் ஷாம் சாகிபுவைச் சந்தித்தார். அவரிடம் தீட்சை பெற்றார். பகலெல்லாம் நோன்பாகவும், இரவெல்லாம் தொழுகை வணக்கமாகவும் தம் வாழ்நாளைக் கழித்து வரலானார்.

**நாடெல்லாம் தவப்பயணம்**

ஷாம் சாகிபிடம் இருந்து வரும் போது இறைவன்பால் இதயத்தை முற்றிலும் ஈடுபடுத்தும் 'ரியாலத்' என்னும் கல்வியைக் கற்றார். இதில் புகழ்பெற விரும்பி மக்கள் நடமாட்டம் மிகுந்த திருச்சிராப்பள்ளியை விட்டுப் புறப்பட்டு சிக்கந்தர் மலை என்றழைக்கப்படும் திருப்பரங் குன்றத்தை அடைந்தார். அங்குள்ள பொதும்பொன்றில் உலக எண்ணங்களை விட்டு நீங்கி இறைவனைப் பற்றிய ஒரே எண்ணத்துடன் 'கல்வத்' என்னும் யோகநிட்டையில் நாற்பது நாட்கள் இருந்தார்.

அங்கிருந்து அறந்தாங்கியை அடுத்த 'கலகம்' என்னும் ஊருக்குச் சென்று ஒரு மாத காலம் அங்கும் யோகநிஷ்டையில் இருந்தார். அதன் பின் தொண்டிக்குச் சென்றார். தம்முடைய மாமாவின் மறைவுச் செய்தியைக் கேட்டுணர்ந்தார். அங்குள்ள வாழைத் தோப்பிலும் மரைக்காயர் தோப்பிலும் பல நாட்கள் ஊண் உறக்கமின்றி யோக நிட்டையில் ஆழ்ந்தார்.

அதன்பின் பித்தர் போன்று தலைவிரி கோலத்துடன் சதுரகிரி, புறாமலை, நாகமலை, யானைமலை போன்ற மலைகளிலும் இருள் செறிந்த காடுகளிலும், கொடிய விலங்குகள் வாழும் இடங்களிலும் பல்லாண்டுகள் தன்னந்தனியராய்த் தியானத்தில் இருந்தார். அங்கு 'சருகும் கிழங்கும் தழையும் குழையும் கருகும் கனியும் காயும் புசித்து' (வாயுறை வாழ்த்து) உயிரைக் காத்து வந்தார்.

**மைசூர் மன்னனைக் காத்தல்**

நாகமலையின் ஒரு புறத்தில் பகைவருடன் போர் செய்த மைசூர் மன்னன் களைப்புடன் மயங்கிக் கிடந்தான். அவனைத் தோளில் தூக்கிக் குணங்குடியார் தம் குகைக்குள் கொணர்ந்தார். மயக்கத்தைத் தெளிவித்தார். அப்போதுதான் அவன் மைசூர் மன்னன் என்பதை அறிந்தார். அவனுக்குப் போரின் கொடுமையை எடுத்துரைத்தார்; அவன் மனத்தைத் திருத்தினார். பின்னர் அவன் குணங்குடியாரை வணங்கினான்.

தன்னால் ஆக வேண்டியது ஏதேனும் இருந்தால் அதனைத் தான் செய்வதாகக் கூறினான். குணங்குடியாரோ 'அமிழ்தத்தையும் விடத்தையும் ஒன்றெனக் கருதும் எம் போன்றவருக்கு உன்னால் ஆக வேண்டியது ஒன்றுமில்லை. குடி மக்களைச் சாதிவேறுபாடு காட்டாது சமமாக நடத்து; வறுமையை நீக்கி அவர்களை நிம்மதியாக வாழச் செய்' (தி.இரா.சின்னப்பன் (ப.ஆ.), குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் மூலமும் உரையும், முதற்பகுதி, ப.2) என அறிவாற்றுப்படுத்தி அனுப்பினார்.

**தஞ்சையில்**

அதன்பின் குணங்குடியார் நாகமலையிலிருந்து புறப்பட்டுத் தஞ்சை பெரிய கோவிலுக்குச் சென்று தங்கினார். அக்கோவிலில் சந்நியாசிகள் திரளாக இருந்தனர். ஆனால் குணங்குடியார் மட்டும் தனியாக இருந்தார். அப்போது அங்கு வந்த மன்னன் குணங்குடியாரைத் தம் அரண்மனைக்கு விருந்துண்ண

வருமாறு அழைத்தான். குணங்குடியாரும் ஏற்றுக் கொண்டு விருந்துக்குச் சென்றார். விருந்து முடிந்ததும் அவர் நடனமாடும் இருபெண்களின் நடனத்தைக் கண்ணுற்றார். இதைக் கண்ட துறவிகள் முதலில் அவரைத் தவறாகக் கருதினர். அவர் முகத் தருகே வந்து பார்த்தனர். ஜகன் (உலக) மாதாவே நடனமாடும் தோற்றம் அவர் கண்களில் தெரிந்தது. பின்னர் அவர்கள் இதனை மன்னனுக்குத் தெரிவித்தனர். அவனும் அக்காட்சியைக் கண்டு பரவச மடைந்தான். நடனம் முடிந்தவுடன் குணங்குடியார் மன்னனிடம் வாலை மனோன்மணியின் ஆட்டத்தைக் கண்டு மகிழ்ந்ததாகக் கூறினார்.

'மனைவி, மக்கள், உறவினர் என யாரும் இல்லை என்று முழு மனதுடன் எண்ணுவது சமாதி; செத்த பிணம் போல இருந்து ஜெபதபம் செய்வது சமாதி; அந்நிலையை அடைய நானும் முயல்கிறேன்' எனக் குணங்குடியார் மொழிந்து மன்னனை வாழ்த்தி அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டார்.

**பெயர்க்காரணம்**

சில சமயம் மரங்களில் 'மேலாம் காலும் கீழாம் தலையுமாகத் தொங்கி' சிரசாசனம் செய்து யோக நிலையில் இறைவனை வணங்கினார். இதுவேளை அவர் பெயர் குணங்குடி மஸ்தான் ஆயிற்று (வாயுறை வாழ்த்து).

"உயர்ந்த ஞான நிலையை இடையூறின்றி எளிதில் அடைகின்ற இறைக் காதலால் முற்றும் கவரப்பட்ட 'மஜ்ஸூப்' (கவரப்பட்டவர்) ஆகவும், அந்தத் தெய்வீகக் காதல் போதையில் வெறியேறிய 'மஜ்னூன்' (காதல் பித்தன்) ஆகவும் அவர் ஆகியிருந்ததால் இக்காலத்தில் அவர் உலகநடை நீங்கிப் பித்த நடை கொண்டார். குப்பைமேடுகள் கூட அவர் குடியிருக்கும் இடங்களாயின. அவருடைய பித்த நடையையும், அற்புதச் சித்துக்களையும் கண்ட மக்கள் அவரை 'மஸ்தான்' என அழைக்கலாயினர். அப்பெயரே அவருக்கு நிலைத்து விட்டது ('மஸ்த்' என்ற பாரசீகச் சொல்லுக்கு போதை, வெறி என்று பொருள். இறைக் காதல் போதையில் வெறி பிடித்த ஞானியரை 'மஸ்தான்' என அழைப்பது மரபு)" என அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார் (குணங்குடியார் பாடற்கோவை, அறிமுகவுரை, ப. vii).

இறைவன் மீது தீராக் காதல் கொண்டு, அவன் மீது மையலாகித் தம் உணர்வை இழந்து தம்மை இறைவனில் அழித்துக் கொண்டு அனைத்தையும் கடந்து இறை நினைவில் மூழ்கி அத்துவித நிலையை அடைந்தவரை, இறைக் காதல் பித்தரை 'மஸ்தான்' எனும் சொல் குறிக்கும். இச்சொல்லோடு 'குணங்குடி' என்னும் ஊர்ப் பெயர் இணைந்து குணங்குடி மஸ்தான் சாகிபு என்றாயிற்று.

**குணங்குடி – விளக்கம்**

'குணங்குடி என்னும் சிற்றூரின் பழைய பெயர் குறுந்தங்குடி. தம் பாடல்களில் குறுந்தங்குடியையே குணங்குடி எனச் சிலேடைப் பொருளில் பாடுகிறார். ஆதலின் இவ்வூர் இப்பெயர் பெற்றது' என்கிறார் எம்.ஆர்.எம். அப்துற்-றஹீம் (இஸ்லாமியக் கலைக் களஞ்சியம், தொகுதி. 2, ப.704). 'நற்குணம் குடி கொண்டவன் இறைவன்; அவன் இருக்கும் இடம் குணங்குடி' என்னும் பொருளிலேயே குணங்குடியார் இச் சொல்லைத் தம் பாடல்களில் கையாளுகிறார். நற்குணங்கள் அனைத்தும் உறையும் ஒன்றை உருவகமாக்கி அதற்கு உரியவனாக இறைவனையும், உரியவராகத் தம் குருநாதரையும் காட்டுகிறார். நற்குணங்குடி கொண்ட இறைவன் இருக்கும் இடமாகக் குணங்குடியார் தம் மனத்தையும் குறிப்பிடுகிறார்.

"'போவோம் குணங்குடிக்கெல்லோரும்' எனவும், 'அருள் ஓங்கும் குணங்குடி வாய்க்கும்' எனவும், குணங் குடிகொண்ட இடமாகிய சொர்க்கத்தையும், 'பரமுத்தன் குணங்குடித் தெருவில் வரும் பவனி பார்த்து வருவோம்' எனவும், 'கத்தன் குணங்குடி' எனவும், 'குணங்குடி ஆண்டவன்' எனவும், குணங்குடி கொண்டுள்ள இறைவனையும், 'நற் குணங்குடி கொண்ட பாதுஷாவான குருநாதன் முகியித்தீனே' எனக் குணங்குடி கொண்டுள்ள குருநாதரையும் போற்றித் தன் திருப்பாடல்களில் 279க்கும் மேற்பட்ட இடங்களில் குணங்குடி பற்றிக் குறிப்பிடுகின்றார்" என்கிறார் சி.நயினார் முகம்மது (மஸ்தான் சாகிபும் தாயுமானவரும் - ஓர் ஒப்புநோக்கு, பக். 18-19).

போவோம் குணங்குடிக்கு என்று குணங்குடியார் பாடுவது சுவனத்தை நோக்கிப் போவோம் என்பதையே குறிக்கிறது. குணங்குடி என்னும் ஊரில் பிறந்தமையாலும், குணங்குடி என்னும் சொல்லை இவ்வாறு சிலேடைப் பொருளில் பயன் படுத்தியமையாலும் இவரைக் குணங்குடியார் என அழைத்தனர்.

**நாகூரில்**

*இறை நினைப்பில் ஆழ்ந்து இருந்த குணங்குடியார் காடு மேடுகள், மலைப் பகுதிகள் என வாழ்ந்து ஏழாண்டுகளைக் கழித்தார். பின்னர்க் கானகம் நீங்கி நாகூர் வந்தார். நாகூர் ஆண்டகை ஷாகுல் ஹமீது அரசர் தறுகாவிற்கு முன் நின்று,*

**திக்குந் திகந்தமும் கொண்டாடி யேவந்து**
**தீன்கூறி நிற்பர் கோடி**
**சிங்காச னாதிபர்க ளடியேந்தி யேவந்து**
**ஜெயஜெயா வென்பர் கோடி**
**அக்கனருள் பெற்றபெரி யோர்களொலி மார்களணி**
**அணியாக நிற்பர் கோடி**
**அஞ்ஞான வேரறுத் திட்டமெய்ஞ் ஞானிகள்**
**அணைந்தருகு நிற்பர் கோடி**
**மக்கநக ராளும் முகம்மது றசூல்தந்த**
**மன்னரே யென்பர் கோடி**
**வசனித்து நிற்கவே கொலுவீற் றிருக்கும்உம்**
**மகிமைசொல வாயு முண்டோ**
**தக்கபெரி யோனருள் தங்கியே நிற்கின்ற**
**தவராஜ செம்மே ருவே**
**தயையைவைத் தென்னையாள் சற்குணங் குடிகொண்ட**
**சாகுல்க மீத ரசரே (தவராஜ மகிமை சாற்றல். 1)**

*என்று மரியாதையுடன் புகழ்ந்து பாடினார். அடைத்திருந்த கதவு அப்போது திறந்தது என்பர். இதனால் நாகூர் மக்கள் இவரைப் பெரிய ஞானியாகக் கருதி மதித்தனர். இதனைக் குணங்குடியார் விரும்பவில்லை. அதனால் நாகூரிலிருந்து காரைக்கால் சென்றார். அங்குள்ள குப்பை மேடுகளில் தங்கித் தம் காலத்தைக் கழித்தார். அப்போது குணங் குடியாரைச் சில ஆலிம்கள் அணுகினர். தொழாமல் தூய்மையற்ற இடத்தில் இருந்து கொண்டு போலித் துறவறம் மேற்கொண்டிருப்பதாகக் குறை கூறினர். பின்னர்த் தண்ணீர் கொணரச் செய்து உடலைச் சுத்தம் செய்தார். தொடர்ந்து மூன்று நாட்கள் உணர்வற்று நின்ற நிலையிலேயே நின்று தொழுதார். அதனைக் கண்ட ஆலிம்கள் அவரை உணர்ந்து போற்றிப் புகழ்ந்தனர். பின்னர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டுப் பரங்கிப்பேட்டை முதலான ஊர்களுக்குச் சென்றார். இதன்பின் வடநாடு சென்று அங்கும் பலருக்கு ஞான உபதேசம் செய்தார்.*

அஜ்மீர் சென்று அங்கு அடங்கியிருக்கும் ஹாஜா முயீனுத்தீன் ஜிஸ்தி எனும் மகானைப் புகழ்ந்து மகிழ்ந்தார். அங்கிருந்து குல்பர்க்காவிலுள்ள ஹாஜாபந்தே நவாஸ் ஒலியுல்லா தறுகா சென்று வழிபாடு செய்த பின் திருவனந்தபுரம் வந்தடைந்தார்.

**திருவனந்தபுரத்தில்**

திருவனந்தபுரத்தில் மந்திரவாதி ஒருவன் தன் மந்திர பலத்தால் பலரையும் தன் கட்டுக்குள் வைத்து ஆணவத்தோடு வாழ்ந்தான். அவன் குணங்குடியார் வருவதைத் தன் சக்தியால் அறிந்தான். முதலில் மரத்தால் ஆன தடியை ஏவினான். குணங்குடியார் அதனைப் பிடித்துத் தமக்கு ஊன்றுகோலாகப் பயன்படுத்தினார். அடுத்துப் பாம்புகளை ஏவினான். அவை குணங்குடியாரின் சொற்கேட்டுத் திரும்பிச் சென்றன. பின்னர், செல்லும் பாதையெங்கும் நெருப்பு எரியுமாறு செய்தான். குணங்குடியார் நெருப்பு மீதே நடந்தார். வீதியின் நடுவே தூண்களை நட்டு வளைவுகளை அமைத்து அதில் காவலுக்கு ஒருவனையும் வைத்தான். தன் குருநாதரின் கட்டளைப்படி உள்ளே யாரும் செல்லக் கூடாது என்று குணங்குடியாரை அவன் தடுத்தான். 'மீறிச் செல்ல வேண்டு மெனில் தூணில் கட்டப் பட்டிருக்கும் குடத்தில் உள்ள தேன் முழுவதையும் நீ பருகிட வேண்டும். பருகாவிட்டால் நீ என் குருநாதருக்கு அடிமை. பருகி விட்டால் என் குருநாதர் உனக்கு அடிமை' என்றான்.

குணங்குடியார் அதனை எடுத்துப் பருகினார். பருகப்பருக மந்திரவாதியின் வயிறு வீங்கியது. வலிதாளாத மந்திரவாதி குணங்குடியாரைத் தேடி வந்து சரணடைந்து மன்னித்தருள வேண்டினான். மன்னித்து அறிவுரை கூறிக் குணங்குடியார் அவனைத் திருத்தினார்.

அதன்பிறகு திருவனந்தபுரத்திலிருந்து புறப்பட்டுத் தக்கலை வந்து பீர்முகம்மது ஒலியுல்லாவைத் தரிசித்துப் பாடிப் போற்றினார். அங்கிருந்து காயல்பட்டணம் சென்று ரெட்டைக் குளத்துப் பள்ளியில் தங்கினார். பள்ளித் தோழர் புலவர் நாயகத்தைச் சந்தித்து மகிழ்ந்து அளவளாவினார். அவர் தம் இல்லறக் கடமைகளையெல்லாம் முடித்த பின் தாம் முன்கூறியபடி குணங் குடியாருடன் வருவதாகக் கூறினார்.

குணங்குடியார் "மனிதப் பிறவியெல்லாம் புனிதப் பிறவியாக மாற வேண்டுமானால் எல்லோரும் பற்றற்ற ஒரு நிலைக்கு

வந்து தான் ஆக வேண்டும். அதற்கு மனத்தை ஒரு வழிப்படுத்த வேண்டும். மனத்தை ஒரு வழிப்படுத்துவதே தவமாகும். மனத்தை ஒரு வழிப்படுத்தி நிற்கும் இறுதி நிலையே முத்தியாகும். நிட்டையின் முடிவு இது தான்!" (தி.இராசின்னப்பன் (ப.ஆ.), குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் மூலமும் உரையும், முதற்பகுதி, ப.6) என்று அறிவுரை பகர்ந்தார்.

குணங்குடியார் தம் தோழரிடம் இல்லறக் கடமைகளை முடித்த பின் அவர் விருப்பப்படி சென்னை வர வேண்டினார்.

**மதுரையில்**

காயல்பட்டணத்திலிருந்து புறப்பட்டு மதுரை வந்து மீனாட்சியம்மன் கோவில் துறவிகள் தங்கும் இடத்தில் தங்கினார். அப்போதுதான் வாலை மனோன்மணியை முன்னிலைப்படுத்திப் பாடினார் (தி.இராசின்னப்பன் (ப.ஆ), குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் மூலமும் உரையும், முதற்பகுதி, ப.7). இதுதான் 'மனோன் மணிக் கண்ணி' என்பர்.

மறுநாள் காலை சில துறவிகள் குணங்குடியாரை விசாரித்துப் பெயர் கேட்டனர். அப்துல் காதிர் என்றதும் அவர்கள் குணங்குடியார் இஸ்லாமியர் என்பதை உணர்ந்து தாங்கள் நேற்றிரவு பாடிய பாடலை உங்கள் மார்க்கம் ஏற்குமா என்று கேட்டனர். அதற்குக் குணங்குடியார், 'ஏற்காமல் என்ன? எல்லா மார்க்கங்களும் ஒரே பொருளைத் தான் குறிக்கோளாகக் கொண்டுள்ளன. அவற்றில் பேதம் பார்ப்பது தவறு. முழுதாக அறிந்தவன் பேதம் கற்பிக்க மாட்டான். அதனால் தான் இறைவனைப் புகழ்ந்து பாடினேன். எல்லாச் சமயங்களும் ஒன்றுதான்' என்று குறிப்பிட்டார்.

**தொண்டியில்**

பின்னர் மதுரையினின்று தொண்டி சென்றார். அங்குள்ள ஒலியுல்லா தறுகாவில் தம் தந்தையைக் கண்டார். 'பரமுத்தனாகிய உன்னைப் பார்த்ததே என் பாக்கியம்' என்று கூறிய தந்தை, தாயைக் காண வீட்டிற்கு அழைத்துச் சென்றார். மகனைக் கண்டதும் தாய் உச்சி மோந்து முத்தமிட்டார். அதன் பின்னர் அவர் தம்பி பீர்முகம்மதுவும் மைமூனும் அவர் காலில் விழுந்து வணங்க வந்தனர். இது இஸ்லாமிய மார்க்கத்திற்கு மாறுபட்டது எனத் தடுத்துப் போதனை செய்தார்.

தந்தை உணவுக்கு அழைத்தார். 'பசி என்னுடைய தேடயம்; மவுனம் என்னுடைய வாள்; உறக்கம் என்னுடைய விரோதி; வணக்கம் என்னுடைய காதலி' என்றுரைத்துக் குணங்குடியார் தம் பற்றற்ற தன்மையைப் புலப்படுத்தினார். அன்னை கையால் சோறு உண்டு எத்தனையோ ஆண்டுகளாகின்றன என்று கட்டாயப்படுத்தவே அவரும் ஆசையோடு உண்டார். குணங்குடியார் தம் குடும்பத்தாருக்கு முகமன் கூறி விட்டு மீண்டும் பயணமானார்.

## சென்னை செல்லக் கட்டளை

குணங்குடியார் கானகத்தில் ஒரு நாள் கால் மேலும் தலை கீழுமாக மரத்தில் தொங்கித் தவமேற்கொண்டிருந்தார். அவ்வழியே சென்ற ஒருவன் இதனைக் கண்ணுற்றான். அருகிலிருந்த சிற்றூரில் கூறினான். அங்கிருந்தோர் நாளும் அதிக எண்ணிக்கையில் வந்து பார்த்த வண்ண மிருந்தனர். அப்போது குணங்குடியாரின் ஆசான் காட்சி நல்கி இங்கு வதிய வேண்டாம்; மக்கள் முத்திய டைய விடமாட்டார்கள்; ஆதலின் சென்னை செல் என்று கட்டளையிட்டு மறைந்தார். அதனை ஏற்றுச் சென்னை மாநகர் நோக்கிச் சிறப்புடன் புறப்பட்டார். செல்லும் வழியில் திருச்சிராப்பள்ளியிலுள்ள தப்லே ஆலம் பாதுஷா எனும் நத்ஹர் ஒலி தறுகாவிற்குச் சென்று தங்கினார். அங்கு தம் அருமைத் தோழர் புலவர் நாயகத்தைப் பார்க்க நேர்ந்தது. புலவர் நாயகமும் குணங்குடியாரும் இணைந்தே சென்னை சென்று தவமியற்றி வந்தனர்.

சென்னைக்கு வந்த ஆரம்ப நாட்களில் இராயபுரத்தில் முட்புதர்களும் மூங்கிலும் சப்பாத்திக்கள்ளிகளும் நிறைந்த ஓரிடத்தில் தங்கி நாற்பது நாட்கள் யோகநிட்டையில் இருந்தார். இதனைக் கண்ட அவ் விடத்தின் உரிமையாளரான பாவா லெப்பைக்குக் குணங்குடியாரின் மீது அளவிறந்த அன்பும், பற்றும், ஈடுபாடும் ஏற்படலாயிற்று.

குணங்குடியார் அங்கு வந்து கால் பதித்த நாள் முதலாய் அங்கிருந்த நச்சுப் பூச்சிகளெல்லாம் அவ்விடத்தைவிட்டு அகன்றன. அங்கேயே சிறிது பால் மட்டும் அருந்தியவராய்த் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் யோகநிட்டையில் இருந்தார்.

## சென்னையிலும் அற்புதம்

சென்னையிலும் குணங்குடியார் பல அற்புதங்களைச் செய்தார். குணங்குடியாரைக் கப்பல்கார மீறாப் பிள்ளை

என்பார் விருந்துக் கழைத்தார். காவலாளிகள் விருந்துக்குச் சென்ற குணங்குடியாரின் அலங்கோல நிலைகண்டு அனுமதிக்க மறுத்தனர். எனினும் யாரும் அறியாமல் குணங்குடியார் உள்ளே சென்றார். பலருக்கும் சமைத்து வைத்திருந்த உணவு முழுவதையும் உண்டார். இன்னும் பசிக்கிறது சோறு போடு என்று கேட்டார். அதன்பின் கப்பல் மீறாப்பிள்ளை குணங்குடியாரின் மகாத்மியத்தை உணர்ந்து பெருமதிப்பளித்தார். மன்னிப்புக்கோரி அவர் மறுநாள் குணங் குடியாருக்கு விருந்தளித்தார் என்பர்.

இதனைக் கேள்வியுற்ற சென்னையில் வாழ்ந்த ஆற்காடு நவாப் குணங்குடியாரின் மகாத்மியத்தை நேரில் சோதிக்க விரும்பினார். அந்நேரத்தில் நவாப் தம் படுக்கையில் அமர்ந்திருந்தார். அரண்மனைக் கட்டுக் காவல்களை எல்லாம் கடந்து நள்ளிரவில் குணங்குடியார் கம்பளிப் போர்வை போத்தியவராய் நவாப்பின் முன் நின்றார். நவாப் வியந்து போனார். காவலர்களைப் போகச் சொன்னபின் நவாப் குணங்குடியாரை ஆசனத்து இருத்தி அவரிடம் தீட்சை பெற்றார்.

குணங்குடியாரின் பேரும் புகழும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்த வண்ணம் இருந்தது. அழுக்காறு கொண்டு சிலர் குணங்குடியாரின் நற்பெயருக்குக் களங்கம் கற்பிக்க விழைந்தனர். இளம் பெண்களை அனுப்பி வழிகெடுக்க நினைத்தனர். சென்ற பெண்களோ நேர்வழி பெற்றனர்.

சென்னையில் வீதி வழியே ஒருநாள் குணங்குடியார் சென்று கொண்டிருந்தார். அவ்வீதியில் ரொட்டிக் கிடங்கு வைத்திருந்தவனிடம் ஒரு சிமிட்டா நெருப்புத்தர வேண்டினார். அவனோ 'உம்மைத் தான் மக்கள் பெரிய மஸ்தான் என்று கூறுகின்றார்களே. நீர் உண்மையான மஸ்தானாக இருப்பின் உமக்குச் சிமிட்டா எதற்கு? கையினாலேயே நெருப்பை எடுக்கலாமே' என்று நகைத்தான். அதற்குக் குணங்குடியார் 'நாளை இந்நேரம் உன் அடுப்பு இங்கு எரியாது' என்று சமிக்ஞையால் கூறிவிட்டுச் சென்றார். மறுநாள் அவன் மாரடைப்பால் இறந்தான். அடுப்பும் அணைந்தது.

குணங்குடியார் சென்னையில் வாழ்ந்தபோது முகியித்தீன் ஆண்டகை அப்துல் காதர் ஜீலானி அவர்களின் பெயரால் விருந் தோன்றுக்கு ஏற்பாடு செய்தார்.

"அதற்குச் சென்னையிலிருந்த செல்வர்களும், வறிஞர்களும் 'நான் முந்தி நீ முந்தி' என்று வந்து விருந்துண்டனர். எல்லாரும் விருந்துண்டு முடிந்ததும்,

**பரமுத்தன் குணங்குடி தெருவில் வரும்பவனி**
**பார்த்து வருவோம் வாருங்கள் (கீர்த். 1)**

என்ற கீர்த்தனையைப் பாடிய வண்ணம் வீதிகளெல்லாம் சுற்றி இறுதியாக அங்கப்ப நாயக்கன் தெருவிலுள்ள மஸ்ஜிதெ மஃமூர் என்ற பள்ளிவாயிலை வந்தடைந்தனர். அங்கு மக்களெல்லாம் அவர்களைச் சூழ்ந்து கொண்டு அவர்களுக்குப் பெரும் மரியாதை செய்து தங்களுக்காக இறைவனிடம் இறைஞ்சுமாறு வேண்டி நின்றனர். அவ்விதமே அவர்களும் செய்துவிட்டு மீண்டும் தம் தபோவனத்தை நண்ணி அங்கு வணக்கத்தில் ஈடுபட்டனர். தொழுதவர்களாகவும் நோன்பு வைத்தவர்களாகவும், இறைவனளவிலேயே முற்றிலும் சாய்ந்தவர்களாகவும் இருந்தனர். அவர்களின் தபோவனம் மக்களுக்கு மன ஓய்வு தேடும் இடமாக அமைந்திருந்தது. இரவு பகல் எந்நேரமும் மக்கள் அங்குக் குழுமி யிருந்தனர். தங்களின் நாட்டங்களை அவர்களிடம் தெரியப்படுத்து வதற்காக மக்கள் கூட்டம் காணிக்கைகளைச் சுமந்து கொண்டு அங்கு வந்து குவிந்த வண்ணமாகவே இருந்தது. அவற்றை அங்கு வந்து குழுமியிருந்த ஏழை எளியவர்களுக்கு மஸ்தான் அவர்கள் பகிர்ந்தளித்து வந்தனர்" என்று எம்.ஆர்.எம். அப்துற்-றஹீம் (முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள், ப.507) குறிப்பிடுகிறார்.

சிலகாலம் மக்களோடு மக்களாக ஒன்றியும், சில காலம் மக்களின் கண்களை விட்டு மறைந்தும் வாழ்ந்து வந்த குணங்குடியார் அந்நாளில் தச்சு வேலை செய்து வந்தார் என்பது அபூர்வமான செய்தி. அதன் மூலம் கிடைக்கும் வருவாயை ஏழை எளியோர்க்கு மகிழ்வோடு வழங்கினார். இயேசு பெருமான் ஆடு மேய்த்தார்; திருவள்ளுவர் நெசவு வேலை செய்தார்; நபிகளார் ஒட்டகமும் ஆடும் மேய்த்தார்; வாணிபம் செய்தார்; தக்கலை பீர்முகம்மது தறிநெசவு செய்தார் என்றெல்லாம் சொல்லப்படும் செய்திகள் ஆன்ம ஞானியர் தொழில் செய்து வாழும் உலக வாழ்விலிருந்து முற்றிலுமாகத் தங்களை அப்புறப்படுத்திக் கொள்ள வில்லை என்பதைக் காட்டுகிறது.

இங்ஙனம் அன்பர்களின் அகஇருள் போக்கி ஞான விளக்கேற்றி, சீடர்களின் தவத்துறைக்கு வேண்டிய நெறிமுறைகளை வகுத்துத் தந்த குணங்குடியார் வெறும் கற்கண்டும் பாலும் சில

நாட்கள் மட்டும் உண்டு யோக நிட்டையில் ஆழ்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் சென்னையில் வாழ்ந்தார்.

**சமரச மெய்ஞ்ஞானி**

"குணங்குடியாரின் துறவு நிலையில் ஐயுற்ற சிலர் அவரது அரிய சித்துக்களைக் கண்டு அவர்தம் ஆற்றலுணர்ந்து அடங்கி அவரை மதித்துப் போற்றலாயினர். பலரும் அவரிடம் தீட்சை பெற்றுப் பக்குவம் பெற்றனர். அவ்வாறு தீட்சை பெற்றவர்களுள் அக்காலத்துச் சென்னையிலிருந்த ஆற்காடு நவாபும் ஒருவர் எனக் கூறுவர். அவர்தம் சீடர்களாக இஸ்லாமியர் மட்டுமல்லர், இந்துக்களும் இருந்தனர். இரு சமூகத்தவரும் இரண்டு உதடுகளாக இணைந்து அவர்தம் கீர்த்தனங்களை இசைத்தனர். அவரது ஆஸ்ரமம் சமரசக் கோயிலாயிற்று. அவருடைய சமரச ஞான வெளிச்சத்தால் அமாவாசைக்கும் அப்துல்காதருக்கும் இருந்த சம்பந்தம் புரிந்தது; ரம்ஜானுக்கும் ராஜா ராமனுக்கும் இருந்த கூட்டுறவு தெரிந்தது. அட்டமாசித்து வல்ல குணங்குடியார் புரிந்த ஒன்பதாவது சித்து இது" (அப்துல் ரகுமான், குணங்குடியார் பாடற்கோவை, அறிமுகவுரை, ப. viii)

பேதம் அகற்றிப் போதம் பரப்பிய ஞானமகான் குணங்குடியார் கி.பி. 1835-ஆம் ஆண்டு ஹிஜ்ரி 1254 ஜமாதில் அவ்வல் 14-ஆம் நாள் திங்கள் கிழமை அதிகாலைப் பொழுதில் பரிபூரணம் அடைந்தார். அப்போது அவருக்கு வயது நாற்பத்தேழு. இதனைக் குணங்குடியார் புலவர் நாயகத்தின் கனவில் தோன்றித் தம்முடைய வாழ்க்கை பூர்த்தியாகி விட்டது; தம் உடல் காவாந்தோப்பு மைதானத்தில் இருக்கிறது எனக் கூறியதுடன் அன்றிரவு முடிவதற்குள் தம் உடலை அடக்கம் செய்யு மாறும் வேண்டினார். புலவர் நாயகம் கனவாக இருந்த போதும் காவாந்தோப்பு சென்றார். அங்குக் குணங்குடியாரின் உடல் இருந்தது. பாவா லெப்பையும் அவருடைய சீடர்களும் இணைந்து இராயபுரத்தில் அடக்கம் செய்தனர்.

குணங்குடியாரின் ஒப்பற்ற வாழ்க்கை வரலாற்றைக் குணங் குடியாரின் வித்தையில் தோழர் புலவர் நாயகம் (காயல்பட்டணம் செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை) பாடியுள்ள வாயுறை வாழ்த்தில் இருந்து ஓரளவு அறிந்து கொள்ள முடிகின்றது. பாலயோகி குணங்குடிதாசன் எழுதியுள்ள 'ஞானக் களஞ்சியம் குணங்குடி மஸ்தான் வரலாறு' எனும் நூலும், எம்.ஆர்.எம். அப்துற்-றஹீம் இயற்றிய இஸ்லாமியக் கலைக் களஞ்சியமும், முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள் என்ற நூலும், பலர் எழுதிய

கட்டுரைகளும் சிறிதளவு உதவி புரிகின்றன.

**தண்டையார் பேட்டை**

குணங்குடியாரை மக்கள் 'தொண்டியார்' என அழைத்து வந்தமையால் அவரிருந்த இடம் தொண்டியார் பேட்டை என அழைக்கப்பட்டது. அதுவே காலப் போக்கில் தொண்டையார் பேட்டை என மருவி இன்றைக்குத் தண்டையார் பேட்டை என வழக்கிலிருக்கிறது. ஆனால் ஆங்கிலத்தில் இன்றும் TONDIYAR-PET என்றே இருந்து வருகிறது.

**குணங்குடியாரின் வேறு பெயர்கள்**

சுல்தான் அப்துல் காதிர் என்னும் இயற்பெயருடைய குணங்குடியாருக்கு மக்கள் பல்வேறு பெயர்களை இட்டு அழைத்தனர். குணங்குடியார், தொண்டியார், மஸ்தான் சாகிபு, ஆரிபுபில்லா (இறை ஞானி), ஒலியுல்லா (இறையன்பர்) என்றெல்லாம் இஸ்லாமியர்கள் அழைக்க, இந்து சமயத்து அன்பர்களோ 'மஸ்தான் சாமி' என்று அன்போடு அழைத்தனர்; போற்றினர்; துதித்தனர்.

**தோற்றப் பொலிவு**

கரிய நிறமும், கமல முகமும், கருணையே வடிவான கண்களும், காலில் பாதுகையும், கலைந்து விரிந்த முடிசடையும், கக்கத்தில் கம்பளி ஆடையும் கொண்டு குணங்குடியார் காட்சியளித்தார் என,

**நயமேவு கஞ்ச முகமுங் கருணை நயனமுஞ்சீர்**
**பயமேவு செம்பொ னுறழ்மேனி யும்மெழிற் பாதுகைசேர்**
**சயமேவு தாளுந் தலைவிரி கோலமுஞ் சார்ந்தன்பரி**
**தயமேவு மென்றுங் குணங்குடி யானெனுஞ் சற்குருவே**

(நான்மணிமாலை. 18)

எனும் பாடலில் சரவணப்பெருமாளையர் பாடுகிறார். இதனை எம்.ஆர்.எம்.அப்துற்-றஹீமின் குறிப்பும் தெரிவிக்கின்றது. பிற சீடர்களின் பாடல்களிலும் தோற்றப் பொலிவு பற்றிய குறிப்புகள் காணக்கிடைக்கின்றன.

**குணங்குடியார் காலம்**

குணங்குடியாரின் காலம் பற்றிப் பல்வேறு கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. இவரது காலம் 1800-1847 எனக் குறிப்பிடுகிறது தமிழ்க் கலைக்களஞ்சியம். குணங்குடியாரின்

கொள்ளுப்பேரன் பாலயோகி குணங்குடிதாசன் கி.பி. 1790-1838 என்கிறார் (ஞானக்களஞ்சியம் குணங்குடி மஸ்தான் வரலாறு). கி.பி. 1792-க்கும் கி.பி. 1838-க்கும் இடைப்பட்ட காலம் எனக் கணிக்கிறார் சி.நயினார் முகம்மது (மஸ்தான் சாகிபும் தாயுமானவரும் - ஓர் ஒப்பு நோக்கு, ப.32). இதனையே அப்துல் ரகுமானும் சுட்டுகிறார் (குணங்குடியார் பாடற்கோவை, ப. vi). கி.பி. 1788-க்கும் கி.பி. 1835-க்கும் இடைப்பட்ட காலம் என்கிறார் சிலம்பொலி சு.செல்லப்பனார். புலவர் நாயகம் (செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம்) இயற்றிய வாயுறை வாழ்த்தில்,

**அருள்நபி கிசுறத்து ஆயிரத்து இருநூற்று**
**இருபதோடு இருநான்கு ஆண்டினில் உலகம்**
**முற்றும் துறந்து (77–79)**

எனப் பாடுகிறார். இதிலிருந்து குணங்குடியார் ஹிஜ்ரி 1228-இல் (கி.பி. 1805) துறவறம் பூண்டார் என்று தெரியவருகிறது. அப்போது அவருக்கு வயது பதினேழு என்னும் குறிப்பும் உள்ளது. இதனை வைத்துப் பார்க்கும்போது குணங்குடியாரின் காலம் 1788-1835 என்னும் சிலம் பொலியாரின் கணிப்பே பொருத்தமாகத் தெரிகின்றது. இருப்பினும் குணங்குடியாரின் பிறப்பையும் இறப்பையும் அறுதியிட்டுக் கூற இயலாது.

கி.பி. 1805-ஆம் ஆண்டு தம் பதினேழாம் வயதில் கீழக்கரை சென்று கி.பி. 1809-ஆம் ஆண்டு வரை நான்கு ஆண்டுகள் மார்க்கக் கல்வி பயின்று, அவ்வாண்டே திருச்சிராப்பள்ளி வந்திருப்பார். திருச்சிராப்பள்ளியில் தீட்சை பெற்றுப் பல்வேறு ஊர்களில் சுற்றித் திரிந்து தவம் புரிந்தது பதினான்கு ஆண்டுகள். இறுதியாகச் சென்னையில் வாழ்ந்தது பன்னிரண்டு ஆண்டுகள் எனக் குணங்குடியாரின் நாற்பத்தேழு ஆண்டுக் கால வாழ்க்கையைக் கணக்கிடலாம்.

**தண்டையார்பேட்டை தறுகா**

குணங்குடியாரின் அடக்க இடமான 'தறுகா' (அரசவை; இறைஞானி களின் புனிதத் தலங்களை இவ்வாறு அழைப்பது சூஃபி மரபு) சென்னை தண்டையார் பேட்டையில் உள்ள இராயபுரம் பிச்சாண்டித் தெரு எண் 50-இல் இன்றும் இருந்து வருகிறது. குணங்குடியாரின் வாக்கிற்கு இணங்க அவரின் வித்தையில் தோழர் புலவர் நாயகத்தின் அடக்க இடமும் இங்குதான் உள்ளது. இங்குதான் குணங்குடியார் தங்கித்

தவமியற்றினார். இவர்கள் இருவரின் அடக்க இடத்தை ஒட்டி ஊமையப்பா என்கிற ஹஜ்ரத் ஷேக் இப்ராகீம் என்பாரும், பணிவிடை செய்து வந்த காதர் மஸ்தான், அவரது மனைவி மதார்பீ ஆகியோரும் அடக்கம் செய்யப்பட்டுள்ளனர். இதுதான் பாவா லெப்பையின் தோட்டம். இத்தோட்டத்தை முன்னாளில் முனியப்ப பிள்ளை விலைக்கு வாங்கினார். முனியப்ப பிள்ளை இறந்தபின் அவர் மகன் கேசவப் பிள்ளை மிகவும் வறுமையுற்றார். ஆகவே அவ்விடம் அவரால் விற்க நேரிட்டது.

திருத்துறைப்பூண்டியிலிருந்து சென்னை வந்து பஞ்சு வணிகம் செய்து வந்த காதர் மஸ்தான் குணங்குடியாருக்கு அவ்வப்போது தொண்டும் பணிவிடையும் செய்தார். அவர் இறந்து போனார். இவருடைய மனைவி மதார்பீ கேசவப்பிள்ளை விற்ற இடத்தை 1860-இல் விலைக்கு வாங்கினார். இவர் அதில் ஏற்கெனவே இருந்த கட்டடத்தைச் சிறிது விரிவுபடுத்திக் கட்டினார். மதார்பீயின் பேரப்பிள்ளைகள் தான் இன்று குணங்குடியாரின் தறுகாவைப் பராமரித்து வருகின்றனர். அவர்களுள் ஆர். சாபிராபீ என்பார் இன்றைக்கு முன்னின்று பார்த்து வருகிறார்.

இஸ்லாமிய ஆண்டு ஜமாத்துல் அவ்வல் மாதம் முதல் பிறை அன்று ஆண்டு தோறும் கொடியேற்றப்படுகிறது. அன்றிலிருந்து பதினான்கு நாட்கள் தொடர்ந்து மௌலீது ஓதப்பெறுகிறது. நிறைவு நாளான பதினான்காம் பிறை அன்று சந்தனக்கூடு உரூஸ் கந்தூரி விழா நடந்து வருகிறது.

**சமயம் கடந்த பெருமை**

குணங்குடியார் இஸ்லாமிய மெய்ஞ்ஞானியாக இருந்தபோதும் அவரிடம் அன்பு பூண்ட இந்து சமயத்து அன்பர் பலர் இருந்தனர். சீடர்களாகவும் திகழ்ந்தனர். அவ்வாறு அன்பு பூண்டவர்களுள் மகாவித்வான் திருத்தணிகை சரவணப் பெருமாள் அய்யர், நான்மணி மாலை என்னும் பெயரில் நாற்பது பாடல்கள் பாடியுள்ளார். அய்யா சுவாமி முதலியார், வேங்கடராயப்பிள்ளைக் கவிராயர் ஆகியோர் தோத்திரப்பா பாடியுள்ளனர். அய்யாசுவாமி முதலியார் 'குணங்குடி நாதர் பதிற்றுப்பத்தந்தாதி' எனும் நூல் ஒன்றையும் பாடியுள்ளார். கோவளம் அருணாசல முதலியார் குமாரர் சபாபதி முதலியார் பஞ்சரத்தினம் பாடியுள்ளார். சரவணப் பெருமாள் ஐயர்,

> **பரம யோகியைப் பற்றொன்றி லான்றனைக்**
> **கரவி லாத கருணைக் கடலினைக்**

**குரவ னாகுங் குணங்குடி யான்றனைப்**
**பரவி னார்க்குப் பவப்பிணி யில்லையே** *(நான்மணிமாலை. 35)*

எனப் பாடிப் பரவுகிறார். வேங்கடராயப் பிள்ளைக் கவிராயரோ,

**நீயே யீன்ற தாய்தந்தை**
**நீயே குருவி னொடுதெய்வம்**
**நீயே யடியார்க் குதவுபொருள்**
**நீயே சமய மறியும் வஸ்து**
**நீயே ஞான நெறிவிளக்கம்**
**நீயே விளங்கும் குணக்குன்றம்**
**நீயே எங்கும் குணங்குடியாய்**
**நிறைந்திவ் வடியைக் காப்பதுவே** *(தோத்திரப்பா. 11)*

என்று அனைத்தும் நீயே எனக் குணங்குடியாரிடம் சரணடைகிறார். இவை குணங்குடியாரின் மீது பிற சமயத்து அன்பர்கள் கொண்டிருந்த ஆழ்ந்த அன்பையும், பற்றையும் புலப்படுத்துகின்றன.

இவர்களைத் தவிர்த்துக் குணங்குடியாருடைய ஆருயிர் நண்பர் காயல்பட்டணம் செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் புலவர் (புலவர் நாயகம்) குணங்குடியார் மீது ஒருபாவொருபஃது, தோத்திரப்பா, வாயுறை வாழ்த்து ஆகியனவும் இயற்றியுள்ளார். இவர் குணங்குடியார் பாடல்களுக்கு உரை எழுத விரும்பியதைக் குணங் குடியாரே தடுத்தார் என்னும் கருத்தும் நிலவுகிறது.

குணங்குடியாரின் அற்புதமான வாழ்க்கை வரலாற்றை அவருடைய கொள்ளுப் பேரன் பால யோகி குணங்குடிதாசன் என்ற ஜமால் முகம்மதுவும் ஒரு பாமாலையாக எழுதியுள்ளார். அவரது பிறப்பு முதலாக ஞானப் பெருவெளியில் கலந்தது வரை பாடியுள்ளார். அவரை அடைந்தோர் அடையும் பெறற்கரும் பேற்றையும் விரிவாகக் கூறியுள்ளார்.

இவ்வாறு பலராலும் போற்றிப் பாடப்பட்டுள்ள ஒப்பற்ற வாழ்க்கை வரலாற்றுக்குச் சொந்தக்காரரான குணங்குடியார் சாதி, மத, இன, மொழி பேதமின்றி எல்லோரையும் நேசித்து வாழ்ந்த ஞான வள்ளல். அவர் ஒப்பிலா வாழ்க்கை வாழ்ந்ததோடு மட்டுமின்றித் தமிழ் ஞான இலக்கிய உலகிற்கும் தம் பங்களிப்பைத் திறம்படச் செய்துள்ளார். அப்படைப்புகள் 'இஸ்லாமியத் தமிழ் இலக்கியம்' என்கிற எல்லையைக் கடந்து இன்றும் எல்லோர் நெஞ்சங்களையும் ஈர்க்கும் தன்மையுடன் திகழ்கின்றன. ◉

## 2. படைப்புகள்

ஞான வள்ளல் குணங்குடி மஸ்தான் சாகிபு ஒரு துறவி மட்டுமல்லர். மிகச் சிறந்த இலக்கியப் படைப்பாளராகவும் திகழ்ந்தார். அவர் பாடல்கள் படிப்பார்க்கு நிறை பயன் நல்குபவை. ஞானக் கருத்துக்களை எளிய நடையில் அள்ளித் தரும் ஆற்றல் வாய்ந்தவை.

"குணங்குடி மஸ்தான் அவர்களின் பாடல்கள் எளிய தமிழில் உயரிய ஞானக் கருத்துக்களை விளக்கும் அருட்பாக்களாக விளங்கு கின்றன. அவற்றில் காணப்படும் சொற்களின் எளிமையும், பொருளின் இனிமையும் ஞான வழியில் ஈடுபட்டுள்ளவர்களைப் பெரிதும் பரவசப் படுத்துபவை" என்கிறார் எம்.ஆர்.எம். அப்துற்-றஹீம் (முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள், ப. 510).

### அச்சும் பதிப்பும்

குணங்குடியாரின் சீடர்களில் புகழ் பெற்றுத் திகழ்ந்த சீயமங்கலம் அருணாசல முதலியார், குணங்குடியார் இறையருளில் மூழ்கிப் பரவச மடைந்த பாடல்களை எல்லோரும் அறிந்து பயனுற வேண்டும் என விழைந்தார்.

குணங்குடியார் பாடிய பாடல்களை அவர் மாணவர் முகம்மது ஹுசைன் என்பார் எழுதிக் கொண்டு வந்தார். இவ்வாறு எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதியைச் சீயமங்கலம் அருணாசல முதலியார் அச்சில் பதிப்பிக்க நாடி குணங்குடியாரிடம் காட்டி அனுமதி பெற்றார். பின்னர் அதனை அவர் புலவர் நாயகத்திடம் கொடுத்தார்; நன்கு கண்ணோட்ட மிட்டுப் புலவர் நாயகம் கி.பி. 1847-இல் பதிப்பித்தார். இதனைப் புலவர் நாயகம் தம் வாயுறை வாழ்த்தில் குறிப்பிடுகிறார்.

"இன்று காணப்படும் அமைப்பில் குணங்குடியாரின் பாடல்களைத் தொகுத்து அமைத்ததன்றித் தம் பாடல்களையும் இடையிடையே வைத்திருக்கிறார் புலவர் நாயகம். முகியித்தீன் சதகம், அகத்தீசர் சதகம் ஆகியவற்றில் ஒவ்வொரு பத்துப் பாட்டிற்கும் முன்னால் துறை விளக்கமாக அமைந்துள்ள ஆசிரியப்பாக்களும், அகத்தீசர் சதகத்தின் இறுதியில் அமைந்திருக்கின்ற ஆசிரியப்பாக்கள் இரண்டும், மனோன் மணிக் கண்ணியின் இறுதியில் இடைச் செருகலாகச் சிலரால் கருதப்படும் சர்ச்சைக்குரிய - 'ஆதியந்தம்' என்ற விருத்தமும், நந்தீஸ்வரக் கண்ணியின் இறுதியில் உள்ள கட்டளைக் கலித்துறையும், கீர்த்தனங்களுக்கு இடையிடையே அவற்றைத் தொகுத்துக் காட்ட அமைந்திருக்கும் விருத்தங்களும், கொச்சகக் கலிப்பாக்களும், ஆனந்தக் களிப்பு (2)இன் முன்னுரையாக அமைந்திருக்கும் விருத்தமும், நூலின் இறுதியில் உள்ள 'வாழி' விருத்தமும் புலவர் நாயகத்தின் பாடல்களாம்.

**குறிப்பின் துறையும் கோத்த அதிகாரமும்**
**பெறப்படச் செய்தலும், பின்முன் கவிகளை**
**மாலை புணர்க்க மாட்டலும், குறைந்த**
**காலை நிலைக்கக் கட்டலும், வெறாத**
**பாலும் பழமும் தேனும் பருகுதல்**
**போலும் சேரப் பொருத்தலும் திருத்தலும்**
**... ... ... கொண்டொழு கினன்**

எனப் புலவர் நாயகம் அவர்களே 'வாயுறைவாழ்த்'தில் கூறுவது கொண்டு இவ்வாறு துணியலாம். மேலும் இப்பாடல்கள் புலவர் நாயகத்தின் நடையமைதி கொண்டிருப்பதும், அமைந்த இடத்தில் குணங்குடியார் பாடல் யாப்பினின்றும் வேறுபட்டுத் தனித்து நிற்பதும், விளக்கம் தருவது போலவும், முன்பின் பாடல்களைத் தொடுப்பது போலவும் அமைந்திருப்பதும் இக்கருத்தை உறுதிசெய்யும்" என நிறுவுகிறார் அப்துல் ரகுமான் (குணங்குடியார் பாடற்கோவை, அறிமுகவுரை, பக். xxi-xxii).

**பதிப்புகள்**

குணங்குடியாரின் திருப்பாடல் திரட்டை கி.பி. 1847ஆம் ஆண்டு தொடங்கி இன்றளவும் பதிப்பித்தும், உரை வரைந்தும், குறிப்புரை எழுதியும் பலர் வெளியிட்டுள்ளனர். அவர்கள்

நைனா முகம்மது பாவலர் (1870), ஆறுமுக சுவாமிகள் (1873), நாராயணசாமி முதலியார் (1875), வேலாயுத முதலியார் (1887), வைத்தியலிங்கம் பிள்ளை (1889), காஞ்சிபுரம் இராமஸ்வாமி நாயுடு (1905), மா.வடிவேலு முதலியார் (1908), ஷாஹுல் ஹமீது லெப்பை (1912), கா.ப.செய்குத்தம்பிப் பாவலர் (1914), துரைசாமி முதலியார் (1923), நெயினா முகம்மதுப் பாவலர் (1925), திருத்தணி என்.ஏ.ரஷீத் (1977), அப்துல் ரகுமான் (1980), தி.இராசின்னப்பன் - துரை.இராசாராம் (1998), ஜெகாதா(2005) ஆகியோர் முப்பதுக்கும் மேற்பட்ட பதிப்புகளை வெளியிட்டுள்ளனர்.

இவர்களுள் சென்னை தொண்டைமண்டலம் கல்விச்சாலைத் தமிழ்ப் பண்டிதர் வித்வான் கு.அப்பன் செட்டியாரின் மாணவர் மா.வடிவேலு முதலியார் உரைவரைந்து பதிப்பித்துள்ளார். இந்நூலைச் சென்னை முல்லை நிலையம் 'குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் (உரையுடன்)' என இன்றும் வெளியிட்டு வருகிறது.

திருத்தணி என்.ஏ.ரஷீத் என்பார் 'ஞான வள்ளல் குணங்குடி மஸ்தான் சாகிபு பாடலும் உரையும்' என உரையுடன் பதிப்பித்துள்ளார். அப்துல் ரகுமான் சிவகங்கை அகரம் பதிப்பக வெளியீடாகக் குறிப்புரையுடன் 'குணங்குடியார் பாடற்கோவை' எனும் நூலை வெளியிட்டுள்ளார்.

துரை.இராசாராம் 'குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் மூலமும் உரையும்' எனும் தலைப்பில் இரண்டு பகுதி நூல்களை உரை வரைந்து சென்னை முல்லை நிலையத்தின் வாயிலாக வெளியிட்டுள்ளார். இவை தவிர இவற்றிற்கெல்லாம் முன் பல பதிப்புகளும் வெளிவந்திருக்கின்றன. அவற்றினைப் பற்றிய முழு விவரங்களை அறிய முடியவில்லை. இருக்கின்ற பதிப்பு விவரங்கள் பின்னிணைப்பில் தரப் பட்டுள்ளன.

இதுவரை வெளிவந்துள்ள குணங்குடியார் பாடல்கள் பதிப்புக்குப் பதிப்பு வேறுபடுகின்றன. அவற்றினை ஆய்ந்து அறிந்து தொடர் எண்கள் இட்டு ஒரு செம்பதிப்பாக வெளிக்கொணர வேண்டும்.

**2. படைப்புகள்**

குணங்குடியாரின் படைப்புகளை,

1. குரு வணக்கம்
2. ஆநந்தப் பத்து
3. சதக நூல்கள்
4. முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம்
5. மகுமூது நபியாண்டவரைச் சுகானுபவமுறத் துதித்தல்
6. தவமே பெறவேண்டுமெனல்
7. குறையிரங்கி யுரைத்தல்
8. தவராஜ மகிமை சாற்றல்
9. வானருள்பெற்றோர் மனநிலை உரைத்தல்
10. ஆனந்தக் களிப்பு 1, 2.
11. கண்ணிகள்
12. கீர்த்தனைகள்

என்னும் தலைப்புகளில் அடக்கலாம். இவை அனைத்தும் சேர்ந்து மொத்தம் 1079 பாடல்கள் உள்ளன.

இப்பாடல்களை முகியித்தீன் சதகம், அகத்தீசன் சதகம், கண்ணிப் பாடல்கள் என முப்பெரும் பிரிவுகளுள் அடக்கலாம்.

**1. குரு வணக்கம்**

ஆநந்தப் பத்தில் ஒரு பாடல், முகியித்தீன் சதகத்தில் மூன்று பாடல், அகத்தீசன் சதகத்தில் ஒருபாடல் எனக் குணங்குடியார் ஐந்து குரு வணக்கப் பாடல்களைப் பாடியுள்ளார். இப்பாடல்களில் அவர் குருபரனை ஒருபரனாகக் கொண்டு பாடுகிறார்.

மெய்ஞ்ஞானமாகிய பேரின்பக் கடலின் இனிமையாகிய அமிர்தத்தை எடுத்துக் கொடுப்பவர், பாசமா மாயைகளைப் பேர்த்தெறிபவர், தம்மை வணங்கித் தவம் செய்பவர்களுக்குத் திருவருள் செய்யும் வள்ளல், குணங்குடி என்னும் திவ்விய இடத்தில் வாழ்கின்ற முகியித்தீன் ஆகிய எம்முடைய குரு அவரின் திருவடிகளை எம் தலை மீது வைத்துப் போற்றுவோம் என்னும் பொருளில்,

**இணங்குமெய்ஞ் ஞானப் பேரின்பக் கடலின்**
**இன்னமு தெடுத்தெமக் களிப்போன்**

**பிணங்கிய கோச பாசமா மாயைப்**
**பின்னலைப் பேர்த்தெறிந் திடுவோன்**
**வணங்கிய தவத்தி னோர்க்கருள் புரிய**
**வள்ளலாய் வந்தமா தவத்தோன்**
**குணங்குடி வாழு முகியித்தீன் ஆம்என்**
**குருபதம் சிரத்தின்மேற் கொள்வாம்**

*(ஆநந்தப்பத்து, குரு வணக்கம்)*

என்று பாடுகிறார். இது போன்று இன்னும் நான்கு பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் தம் முன்னிலைக் குரு குணங்குடி வாழும் முகியித்தீன் ஆண்டவர் அப்துல் காதர் ஜீலானி என்பார் என்பதை உணர்த்துகிறார்.

### 1.1. முகியித்தீன் ஆண்டவர் அப்துல் காதர் ஜீலானி

உலகில் வாழ்கின்ற மக்களை நேர்வழியில் இறை அச்சத்துடன் வாழ்க்கை நடத்தும்படித் தூண்டுவோர்களே இறைநேசச் செல்வர்கள். இவர்களை இஸ்லாம் மார்க்கம் 'வலிமார்கள்' என்றும், 'அவுலியாக்கள்' என்றும் குறிப்பிடுகிறது. இத்தகைய இறைநேசச் செல்வர்கள் இறைவனின் ஆணைக்கேற்பக் காலந்தோறும் தோன்றி உலக மக்களின் வாழ்க்கையை நெறிப்படுத்துவர் என்பது இஸ்லாம் கூறும் போதனை. இம்முறையில் தோன்றி மக்களை நெறிப்படுத்தி வாழ்ந்து மறைந்த சான்றோர்கள் தமிழகத்திலும் பலர் உள்ளனர். இவ் இறைநேசச் செல்வர்களுக்கெல்லாம் தலைவராக விளங்கக் கூடியவர் குணங் குடியாரின் முன்னிலைக் குருவான முகியித்தீன் ஆண்டவர் அப்துல் காதர் ஜீலானி ஆவார்.

இவர் ருஷிய நாட்டிலுள்ள 'ஜீலான்' நகரிற்கு அருகிலுள்ள 'நீப்' என்னும் சிற்றூரில் கி.பி. 1078 மார்ச் 19 (ஹிஜ்ரி 470 ரமலான் மாதம் முதல் நாள்) திங்கட் கிழமை இரவு பிறந்தார். இவரைப் பற்றி இளைஞர் இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் "'முஹ்ய்யுத்தீன் ஆண்டகை' என உலக மெய்ஞ்ஞானச் செல்வர்களில் போற்றப் படுபவர் முஹிய்யுத்தீன் அப்துல் காதர் ஜீலானி (ரஹ்) அவர்கள். அவர் 'சூஃபிகள்' எனப்படும் மெய்ஞ் ஞானிகளின் தலைவர் ஆவார்" (ப.4) என்று குறிப்பிடுகிறது.

இளமையிலேயே கல்வி கேள்விகளில் முதன்மை பெற்றுத் திகழ்ந்த இவர் 'பக்தாத்' சென்று நிஜாமியாக் கல்லூரியில்

ஏழாண்டுகள் பயின்றார். பின்னர் 'ஹம்மாது' என்ற பெரியவரை ஞானகுருவாகக் கொண்டு ஆத்ம அனுபவம் பெற்றார். பிறகு 'மக்கா' நகரம் சென்று ஹஜ்ஜுச் (புனிதப் பயணம்) செய்தார். அப்பயணத்திலே 'மதீனா' செல்ல விரும்பாமல் பக்தாத் சென்றபின் நபிகளாரின் அடக்க இடத்தைத் தரிசிப்பதற்காக மீண்டும் கால் நடையாகவே மதீனா வந்து தரிசித்தார்.

'இராக்' நாட்டுக் கானகத்தில் உள்ள 'கர்க்' என்ற இடத்தில் அமர்ந்து கடுமையான தவம் செய்த இவர் சில நேரங்களில் அங்கும் இங்கும் ஓடிக் கானகமே அதிரும்படிப் பெரும் சத்தமிடுவார். சில நேரம் தம்மை மறந்த நிலையில் சிறிது தூரம் ஓடுவார். ஆனால் உணர்வு பெற்றுப் பார்க்கும் போது வெகுதூரம் ஓடி இருப்பதை அறிவார். சில நேரங்களில் களைப் புற்றுப் பிணம்போல் கிடப்பார். இவ்வாறு 'ஃபுருஜுல் அஜமி' என்னும் பாழடைந்த கோட்டையில் தங்கிப் பதினோராண்டுகள் கடுந்தவம் புரிந்தார். இப்போது திருக்குர்ஆன் முழுவதையும் ஓதி இரவு முழுவதும் தொழுவதைத் தம்முடைய வழக்கமாகக் கொண்டிருந்தார். தீனுக்குப் புத்துயிர் ஊட்டியவர் என்னும் பொருளில் மக்கள் இவரை 'முகியித்தீன்' என்று அழைத்தனர்.

'பக்தாத்' நகரில் 'பாபுல் அஸஜ்' என்ற இடத்தில் கல்லூரி நிறுவிக் கல்வி போதித்து வந்த ஷைகு அபூஸயீத் முக்ரமியிடம் ஆத்மீக மாணவராகிப் புனிதப் போர்வை (கிர்கா) போர்த்தப்பட்டார். இவ்வாறு இவர் அப்பெரியாரின் பிரதிநிதி (கலிபா) ஆனதிலிருந்து அந்த ஞானவழி 'காதிரிய்யா தரீக்கா' எனப் பெயர் பெற்றது.

உலகப் பற்றுகளைப் பெரிதாகக் கருதாமல் வாழ்ந்த இவர் நபிகளாரின் மீது ஆழ்ந்த ஈடுபாடுடையவர். நற்பண்புகள் நிரம்பியவர். மார்க்க ஞானம் மிகுந்தவர். எல்லோரையும் தம் அறிவாலும் ஆற்றலா லும் கவரும் பேருரையாளர். இவர் தம் தொண்ணூற்றாறாவது வயதில் கி.பி. 1166 பிப்ரவரி 14 (ஹிஜ்ரி 561-ஆம் ஆண்டு ரபியுல் ஆகிர் பிறை 11) ஆம் நாள் திங்கட்கிழமை இறப்பெய்தினார். இவரின் அடக்க இடம் 'பக்தாத்' நகரில் இருக்கின்றது. இவரைத் தம் ஆத்மீகக் குருவாகக் கொண்டு இவரின் அரும் பண்புகளையெல்லாம் அப்படியே பின்பற்றிய ஞான நெறிச் செல்வரே குணங்குடியார். இவரை முன்னிலைப்படுத்தியே குணங் குடியார் குரு வணக்கம் பாடுகிறார்.

## 2. ஆநந்தப் பத்து

குரு வணக்கப் பாடல் நீங்கலாக ஆநந்தப்பத்து பத்துப் பாடல் களைக் கொண்டுள்ளது. ஒவ்வொன்றும் ஒரு தலைப்பைப் பெற்றுள்ளன. அவை: 1. வஸ்து உதயத்தின் ஆநந்தம், 2. வஸ்து உதய நிலத்தின் ஆநந்தம், 3. விளையாட்டின் ஆநந்தம், 4. தன் இயலின் ஆநந்தம், 5.மகிமையின் ஆநந்தம், 6. வலிமையின் ஆநந்தம், 7. இரக்கத்தின் ஆநந்தம், 8. பெருமையின் ஆநந்தம், 9. தன்னிலையின் ஆநந்தம், 10. காரணத்தின் ஆநந்தம் என்பன வாகும்.

இறைவன் ஆன்மாக்களின் ஆணவத்தை நீக்குதற்பொருட்டுத் தன்னை உலகப் படைப்புகளாக வெளிப்படுத்துகிறான் (வஸ்து உதயத்தின் ஆநந்தம்); இறைவன் தன்னிலையிலிருந்து இறங்கிவந்து ஆன்மாக்களுக்காக இவ்வுலகைப் படைத்து, படைத்தவற்றைக் காத்து அழிக்கிறான் (வஸ்து உதய நிலத்தின் ஆநந்தம்); எச்செயலையும் எளிமையாகச் செய்யும் இறைவன் பேராற்றல் உடையவன் (விளையாட்டின் ஆநந்தம்); தன் இயல்புகளின் கீழ்மையை எண்ணி வருந்தி, அடியவனாக வேண்டும் என்ற தம் ஏக்கத்தை வெளிப்படுத்தல் (தன்னியலின் ஆநந்தம்); தான் இறைவனின் அடிமை; என்றைக்கும் நிலையான எல்லாமுமான பொருளான இறைவனைச் சார்ந்திருக்க வேண்டும் (மகிமையின் ஆநந்தம்); இறைவன் அண்ட சராசரங்களையும் ஆளும் வல்லமையுடையவன் (வலிமையின் ஆநந்தம்); இறைவன் இரக்கமும் கருணையுமுடையவன் (இரக்கத்தின் ஆநந்தம்); வேதம் உரைத்த வாயானாகிய இறைவனின் திருவடிகளில் அண்ட பகிரண்டங்கள் அனைத்தும் அடங்கியுள்ளன (பெருமையின் ஆநந்தம்); பொய்யான மெய்யுடலைப் பொய்யானது என உணர வேண்டும்; மலை போன்றவன் இறைவன்; அவனை அடைதலே தனது இறுதி இலக்கு (தன்னிலையின் ஆநந்தம்) எனப் பாடும் குணங்குடியார் 'காரணத்தின் ஆநந்தம்' எனும் தலைப்பில் அமைந்த இறுதிப் பாடலில் 'இறைவன் தனது பாதபங்கயங்களை எளியனான தமக்கு அருளினான் என்று எண்ணிய காரணத்தினால் ஏற்பட்ட இன்பநிலை'யைப் பாடுகிறார்.

ஆநந்தப் பத்துப் பாடல்கள் அனைத்தும் இறைவனின் திருவிளையாடல்கள், அருட்பெருங் குணங்கள், ஆன்மாவின்

இயல்பு, நிலையாமை, குருவின் இன்றியமையாமை, குரு வழியாக இறைவனை அடைந்து முத்திப் பேறடைதல் போன்ற உயர்ந்த தத்துவக் கருத்துக் களைக் கூறுகின்றன. இறைவனின் அருட்பெருங்குணத்தைக் குணங்குடியார்,

**வேதநீ வேதவே தாந்தநீ எனையாளும்**
**வித்தகன் தானு நீயே**
**மெய்ஞ்ஞான வீடுநீ வீட்டின் விளக்குநீ**
**விரிகதிர்ச் சுடரு நீயே**
**நாதன்நீ நவநாத சித்தன்நீ முத்தன்நீ**
**நாதாந்த மூர்த்தி நீயே** *(ஆநந்தப் பத்து. 5)*

எனத் தம் குருவாயிலாகக் கண்டு போற்றுகிறார்.

ஆநந்தப் பத்து என்னும் பகுதியின் வழி உள்ளத்தில் உறைகின்ற இறைவனை ஞானத்தால் வழிபடுவதால் நிலையான இன்பம் பெற முடியும்; இறை இன்பத்தைச் சொற்களால் அளவிட முடியாது; அவ் வின்பத்தைப் பெறக் குருவின் துணை தேவை என்கிறார் குணங்குடியார்.

குருவின் அருமை பெருமைகளையும், எளிமையையும் நினைத்துப் பார்க்கிறார். குருவின் அருளின்றி ஆன்மாக்களுக்கு மெய்ஞ்ஞானம் கிட்டாது எனக் கருதுகிறார். ஆதலால் ஆநந்தப் பத்தில் உள்ள பத்துப் பாடல்களின் ஈற்றடியிலும்,

**நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு**
**நாதன் முகியித் தீனே**

என்னும் ஒரே அடியை மீண்டும் மீண்டும் பாடிக் குருவின் மேன்மையைச் சிரத்தின் மேற்கொண்டு போற்றுகிறார்.

**3. சதக நூல்கள்**

சதகம் நூறு பாடல்களைக் கொண்ட சிற்றிலக்கியமாகும். இவ்வகை இலக்கியம் இறைவனையோ அல்லது தாம் விரும்பிய ஏனையோரையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பெறும். நூறு பாடல்களும் ஒரே யாப்பில் பாடி முடிக்கப் பெறும். நூறு பாடல்களும் ஒரே முடிவை அல்லது ஈற்றடியை மகுடமாகப் பெற்று இருக்கும். இது சதக இலக்கியத்தின் பொதுப் பண்பாகும். பாட்டுடைத் தலைவரின் பெயரோ அல்லது பாடப்படுகின்ற பொருள்களின் - மண்டலங்களின் -

தலங்களின் பெயர்களோ அல்லது நூலில் பாடல் தோறும் ஈற்றடியாக இடம்பெற்றுள்ள சொல்லோ சதகம் எனும் சொல்லுடன் இணைந்து நூலின் பெயராக வரும். அறிவுரைகள் கூறுதல், ஒழுக்கங்களை விரிவாக எடுத்துரைத்தல், பெருமை தருவனவற்றைச் சுட்டல், நற்குணம் தீக்குணம் பற்றிக் குறிப்பிடல், உபமானம் முதலியவற்றால் கருத்துக் களைப் புலப்படுத்துதல், பழமொழிகளைக் கையாளுதல் என்பனவற்றைச் சதக இலக்கியங்களின் உள்ளடக்க, வெளிப்பாட்டு அமைப்பு களாகக் குறிப்பிடலாம். இவ்வமைப்புகளை எல்லாச் சதகங்களும் கொண்டுள்ளன என உறுதியாகக் கூற இயலாது. ஒவ்வொரு சதகமும் ஒவ்வொரு வகையில் சிலவற்றை ஏற்றும் சிலவற்றை விடுத்தும் பாடப் பட்டுள்ளன. தமிழில் 238-க்கும் மேற்பட்ட சதக நூல்கள் உள்ளன. இதுவரை வெளிவந்துள்ள இஸ்லாமியச் சதக நூல்களின் எண்ணிக்கை முப்பத்து மூன்று என்பது பெயரளவில் தெரிய வருகின்றது. அவற்றுள் பதினொரு சதக நூல்கள் மட்டும் கிடைக்கின்றன. இவற்றுள் இரண்டு சதக நூல்கள் குணங்குடியார் பாடியன. அவை:

அ. முகியித்தீன் சதகம்
ஆ. அகத்தீசன் சதகம்

என்பன. இவை இரண்டும் சூஃபித்துவக் கொள்கை விளக்கச் சதகங் களாகும்.

**3. அ. முகியித்தீன் சதகம்**

இந்நூல் நபிகள் நாயகத்தின் (வள்ளல் இறசூல்) அருளைப் பெறும் பொருட்டுக் குணங்குடி வாழும் தம் முன்னிலைக் குருவாகிய முகியித்தீன் ஆண்டகையைத் தொழுது குறையிரந்து அருளை வேண்டும் நூறு பாடல்களைக் கொண்டது. இந்நூறு பாடல்களும் பதினான்கு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களால் அமைந்துள்ளன.

முகியித்தீன் சதகத்தில் எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த மூன்று குரு வணக்கப் பாடல்கள் உள்ளன. இதனை அடுத்து நூன்முகம் என்று ஒரு பாடல் உள்ளது. நூன்முகம், அடுத்துவரும் பத்துப் பாடல்களின் உள்ளடக்கத்தை அறிமுகம் செய்விப்பதாக உள்ளது. இவ்வறிமுகப் பாடல்கள் ஒவ்வொரு பத்தின் தொடக்கத்திலும் உள்ளன. இப்பத்து அறிமுகப்

பாடல்களும் புலவர் நாயகம் பாடிச் சேர்த்தவை என அப்துல் ரகுமான் குறிப்பிட்டுள்ளார். நூல் முழுவதும் பதிகம் போன்ற அமைப்பில் பத்துப் பத்துப் பாடல்கள் ஒரே விதமாய் அமைந் துள்ளன. இச்சதகத்தில் உள்ள நூறு பாடல்களிலும்,

**... ... ...நீர் பின்தொடர**
**வள்ளல்இற சூல்வ சூகவே**
**வளருமருள் நிறைகுணங் குடிவாழும் என்னிருகண்**
**மணியே முகியித் தீனே**

என்ற தொடர் மகுடமாக - இறுதியடியாக அமைக்கப்பட்டுள்ளது. பாடலில் ஒவ்வொரு அடியின் ஆறாம் சீரும், பதினான்காம் சீரும் பத்துப் பாடல்களிலும் ஒரே சொல்லாக வந்துள்ளது. சொல் விளையாட்டுக்களும், பரிபாஷைகளும், வந்த சொல் மீண்டும் மீண்டும் வருதலும் காணப்படுகின்றன.

மாயை முதலான செயற்கை மறைந்து இயற்கை தோன்ற அருளுமாறு வேண்டுவது முதல் பத்துப் பாடல்களின் குறிக்கோளாக உள்ளது.

மெய்ப் பொருளாகிய இறைவனைத் தரிசிக்கக் குருவின் துணையை நாடுவதாக இரண்டாவது பத்துப் பாடல்கள் அமைந்துள்ளன.

மூன்றாவது பத்துப் பாடல்களில் குருவிடம் அருள் ஒளி விளக்கான இறைவனைத் தமக்கு அருள வேண்டுகிறார்.

உலக ஆசாபாச வலைகளிலிருந்து தம்மை விடுவித்து அருள நான்காவது பத்துப் பாடல்களில் குறையிரக்கிறார்.

இறைவனும் தாமும் வேறல்ல என்னும் நிலையை அருள ஐந்தாவது பத்துப் பாடல்களில் வேண்டுகிறார்.

ஆறாவது பத்துப் பாடல்களில் பாசத்தில் கலந்து மாய்ந்து போகும் உள்ளத்தை மாயாது காக்கவும், உலகியல் நாட்டத்தை நசுக்கவும் குருவிடம் வேண்டுகிறார்.

அருளுள்ளத்தை மறைக்கும் பாவப் பெருஞ்சுமையை அறவே அகற்றுமாறு குருவிடம் இரந்து ஏழாவது பத்துப் பாடல்களில் வேண்டு கிறார்.

*பாசத்தாலும் பாவத்தாலும் வருந்தியழும் அழுகையை அகற்றக் குருவிடம் இரப்பதாக அமைகின்றன எட்டாவது பத்துப் பாடல்கள்.*

*இறந்து போவதற்குமுன் இறைவனுடன் ஒன்றிவிட அருளுமாறு ஒன்பதாவது பத்துப் பாடல்களில் அழுதிரக்கிறார்.*

*இறுதிப் பத்துப் பாடல்களில் கோடானு கோடி சீடர்கள் குருவின் பெருமை கண்டு பரவி நிற்கின்றனர். அவர்களுள் தம்மையும் ஒருவராக இருக்க அருளுமாறு வேண்டுகிறார்.*

*முகியித்தீன் சதகத்தின் ஒவ்வொரு பாடலிலும் குருவினைப் புகழ்ந்து பாடும் தொடர்கள், 'மாதாவினும் கருணையுள்ள நீர்' (மு.ச.1), 'மத்தமத யானை நிகருள்ள நீர்' (மு.ச.11), 'வானோரும் அடிபணிதலுள்ள நீர்' (மு.ச.22) எனக் காணக் கிடக்கின்றன. இவை குணங்குடியாரின் குரு பக்தியை வெளிப்படையாகக் காட்டுகின்றன.*

*பாவத்தில் வீழாமல் தம்மைக் காத்தருளுமாறு வேண்டும் பத்துப் பாடல்களில் குணங்குடியார் தம்மைப் பாவி எனக் குறிப்பிடுகிறார்.*

**கைக்குள்வெண் ணெயைவைத்து நெய்க்கழுத பாவிகலை**
**கற்றுஅறி வற்ற பாவி**
**கற்பக விருக்ஷத்தின் அடியிலே காஞ்சிரங்**
**காய்தேடி நின்ற பாவி**
**கொக்குப் பிடிக்கநாய்க் குத்தெரியு மோஎன்ற**
**கொள்கைகுடி கொண்ட பாவி**
**குருடர்கள் யானையைக் கண்டகதை போலசற்**
**குருவையறி யாத பாவி**
**சர்க்கரை கரும்புகற் கண்டுஅமு திருக்கக்**
**கசங்குடிக் கின்ற பாவி**
**தலைகெட்ட பாவிஅடி யேனுமுமை நம்பினேன்**
**தயையைவைத் தாளு தற்கே**
**மக்கநக ருக்குமண முள்ளநீர் பின்தொடர**
**வள்ளல்இற சூல்வ ருகவே (மு.ச.69)**

*எனும் இப்பாடலில் சொல்ல வரும் கருத்தை விளக்குவதற்குத் தகுந்த உவமைகளையும், வழக்கிலுள்ள பழமொழிகளையும் கையாளுகிறார். நல்லது இருக்க அதனை விரும்பாமல் தீயதை*

விரும்புபவனையே குணங்குடியார் பாவியாகக் கருதுகிறார். வெண்ணெயிலிருந்து தான் நெய் வருகிறது. கைக்குள் வெண்ணெயை வைத்துக் கொண்டு அதனை அறியாமல் நெய்க்கழுதவனைப் போன்றவனையும் பாவி என்கிறார். நல்ல குருவை ஒருவன் பெற்றிருந்த நிலையிலும் அவரிடமுள்ள உயர் தகைமைகளைப் பின்பற்றாமல் அவரினும் குறைந்த இன்னொருவரைத் தேடுவது தவறு. இதனை உணர்த்துவதற்குத் தான் வேறு பல உவமை உருவகங்களைக் குணங்குடியார் ஆளுகிறார்.

வேண்டியவர்களுக்கு வேண்டும் பொருள்களைக் கொடுக்கும் தன்மையுடையது கற்பக மரம். காஞ்சிரங்காய் ஒருவருக்கும் பயன் படாதது. கற்பக மரம் இருக்கும் போது காஞ்சிரங்காயை யாரும் விரும்பார். இதுபோன்று தான் 'கொக்குப் பிடிக்க நாய்க்குத் தெரியுமோ,' 'குருடர்கள் யானையைக் கண்ட கதை போல,' 'சர்க்கரை கரும்பு கற்கண்டு அமுது இருக்கக் கசங் குடித்தல்' ஆகியனவும்.

இவ்வாறு தவறானவற்றை விரும்புவதை, சற்குருவை அறிய முடியாத பாவியின் இலக்கணங்களாகக் குணங்குடியார் குறிப்பிடு கிறார். இப்படிப்பட்ட பாவியைக் காத்தருளவும், உள்ளத்தை உண்மைப் பொருளில் இருந்து மறைக்கும் பாவங்களை அணுக விடாமல் தடுக்கவும் வேண்டும் குணங்குடியார் இம் மாதிரியான கருத்து வளமும் நயமும் மிகுந்த பாடல்களை முகியித்தீன் சதகம் முழுவதும் படைத்துள்ளார்.

### 3. ஆ. அகத்தீசன் சதகம்

இறைவன் இறைப் பற்றாளர்களின் உள்ளத்தில் நீங்காது இருப்பான். அவன் குணங்குடியாரின் உள்ளத்துக்குள்ளும் இருக்கிறான். அவர் உள்ளத்தில் இறைவன் மட்டுமல்லன்; அவரது ஞான குருவாகிய முகியித்தீன் ஆண்டவர் அப்துல் காதர் ஜீலானியும் இருக்கிறார். எனவே தான் குணங்குடியார் இறைவனையும், தம் குருநாதரையும் அகத்தீசனாகக் காண்கிறார். குணங்குடி என்பதை நற்குணம் குடி கொண்ட இறைவனும் குருவும் இருக்குமிடத்திற்குக் குறியீடாகக் கொண்டு பாடுகிறார்.

இந்நூலும் முகியித்தீன் சதகம் போலவே பத்துப் பத்தாக அமைந்த நூறு பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களால்

அமைந்த தாகும். ஒவ்வொரு பத்தின் தொடக்கத்திலும் அப்பத்துப் பாடல்களின் உள்ளடக்க நோக்கத்தைப் புலப்படுத்தும் ஒவ்வோர் ஆசிரியப்பா உள்ளது. முதல் பத்தின் அறிமுகப் பாடலுக்குப்பின் எழுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த ஒரு குரு வணக்கப் பாடல் உள்ளது. இறுதிப் பத்தின் முடிவில் நூலைக் கற்பார்க்கு அறிவுரையாக ஒரு நேரிசை ஆசிரியப்பாவும், நூலின் சாரத்தைத் தொகுத்துரைக்கும் ஒரு நிலைமண்டில ஆசிரியப்பாவும் உள்ளன.

அகத்தீசன் சதகத்தில் உள்ள ஒவ்வொரு பத்துப் பாடல்களும் ஒவ்வொரு தலைப்புகளைப் பெற்றுள்ளன. குருவருணிலை, தவநிலை, துறவிநிலை, நியம நிலை, வளிநிலை, பொறைநிலை, காட்சிநிலை, தியான நிலை, சமாதி நிலை என்பன அத்தலைப்புகளாம்.

நூல் முழுமையும் பாடல்களில் அடிதோறும் இறுதிச் சீர் 'அருள் புரியவும்' என்று வந்துள்ளது. பதிக அமைப்பில் அமையப் பெற்று ஒவ்வொரு பதிகத்திற்கும் தனித்தனித் தலைப்புகள் உள்ளதுடன் ஒவ்வொரு பாடலுக்கும் தனித் தனித் தலைப்புகள் உள்ளன. நூறு பாடல்களிலும்,

**... ... ...தவராஜ சிங்கமே**
**வரவேண்டு மென்ற ளருகே**
**மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே**
**மவுனதே சிகநா தனே**

என்ற தொடர் இறுதியடியாக - மகுடமாக அமைந்துள்ளது.

தம் மனத்தைத் தழுவித் தற்காத்துத் தம்மை ஆதரித்துச் சமீபத்தில் எழுந்தருளி வரவேண்டும் என்று 'குருவருள் நிலை'யில் வேண்டுகிறார். அடுத்த பகுதியில் தவநிலையையும் முச்சுடர் பரப்பி ஜெயமடைதலையும் வேண்டுகிறார். மேன்மையையுடைய துறவறத்தை மூன்றாவது பகுதியில் கேட்கிறார். நான்காவது பகுதியில் பொய், கொலை, களவு, காமம், பொருள் நசை ஆகியவற்றை அடக்குதல் ஆகிய இயமத்தையும், பெற்றதற்கு உவத்தல், பெருந்தவம், தூய்மை, அறிவையுணர்தல், வழிபடல் போன்ற நியமத்தையும், நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் எனும் நால்வகை ஆசனத்தையும் அருள்புரிய வேண்டுகிறார்.

'பிராணாயாமம்' என்பது மூவகையாகச் சுவாசத்தை அடக்கி யாளும் முறைகளுள் ஒன்றாகும் அஷ்டாங்க யோகத்துள் ஒன்றெனவும் படுகிறது. இரேசகம், பூரகம், கும்பகம் என்பனவற்றுள் இரேசகம் என்பது வாயுவை நாசியால் புறத்தே கழித்தலாகும்; வாயுவை உள்ளே இழுக்கும் செயல் பூரகமாகும்; பூரித்த வாயுவை உள்ளே நிறுத்தும் பிராணாயாம வகை கும்பகம் எனப்படும். இதுதான் வளிநிலை ஆகும். 'வளிநிலை' எனும் பகுதியில் பாடப்பட்ட பாடல்கள் அனைத்தும் யோக நிலையின் உச்சத்தை அடைதலைக் கருத்தில் கொண்டு பாடப்பட்ட பாடல்களாகக் காட்சியளிக்கின்றன.

பொறியுணர்வுகள் ஐம்புலன்களின் வழியில் செல்கின்றன. அப்படிச் செல்லாமல் பொறியுணர்வுகளெல்லாம் ஒருவழியேயாகு தலையே தொகை நிலை என்பர். இதனை விளக்கும் வண்ணம் இப்பகுதியைக் குணங்குடியார் பாடியுள்ளார். நினைத்த நினைவை நினைவாகக் கொண்டு, மனத்தை ஒருவழியில் நிறுத்திப் பொறுக்கும் நிலையை அருளப் 'பொறை நிலை' என்னும் பகுதியில் வேண்டுகிறார். காற்றில் அலைக்கழிக்கப்படும் சிறு துரும்பைப் போல் ஐம்புலன்களை அடக்காத மனிதனுடைய மனமும் அலைக்கழிக்கப்படும். இக்குறைகளை நீக்கி ஈடேற்றம் பெற அருளும் பொருட்டுத் தம் ஞான குருவிடம் உண்மைக் காட்சியை அருளக் 'காட்சிநிலை' என்னும் பகுதியில் வேண்டுகிறார்.

இடைவிடாத சிந்தனையே தியானமாகும். இதனைத் தொல்காப்பியர் 'நினைவு' என்று குறிப்பிடுகிறார். தடைசெய்யப்பட்ட பொருட்களின் வழி செல்லவொட்டாமல் மனத்தை உண்மைப் பொருளுடன் நிறுத்த விரும்புதல் தியானமாகும். இதனை அருள வேண்டும் என எண்ணி எண்ணி ஆசையுடன் இரந்து 'தியான நிலை' என்னும் பகுதியில் வேண்டுகிறார்.

அகத்தீசன் சதகத்தில் உள்ள இறுதிப் பத்துப் பாடல்கள் 'சமாதி நிலை'யைக் கூறுகின்றன. அஷ்டாங்க யோகத்துள் மனத்தைப் பரம் பொருளோடு ஐக்கியப்படுத்தி நிறுத்துதல் 'சமாதி' ஆகும். முகியித்தின் சதகத்திலும் சமாதி நிலை பற்றிப் பத்துப் பாடல்கள் உள்ளன. அதில் 'சாதி பேதத்தையும் மாதர் போகத்தையும் தள்ளி நிற்பது சமாதி' (மு.ச.45). 'எனது யான்

என்பதை இடம் பொருளொடு ஏவல் முதல் ஈடழிப்பது சமாதி' (மு.ச.46) எனப் பலவாறு விளக்குகிறார்.

இவ்வுலகில் உள்ள உறவுகளைப் பேரின்ப உறவான இறைவனோடு இணைத்துப் பார்க்கின்றார். இறைவனோடு இரண்டறக் கலக்க விரும்புகிறார். 'மனத்தைக் கட்டுப்படுத்திக் கரங்கொடுத்து அணைக்கவும், தீயவற்றிலிருந்து தடுக்கவும், குறை தீர்த்துக் குணமேற்றவும் இறைவன் வரவேண்டும்' எனக் குணங்குடியார் வேண்டுகிறார்.

**காலுக்கு எரித்தநிலவு ஆகாத வண்ணம்**
**கடாக்ஷித்து னருள்பு ரியவும்**
**கல்லுக்கு இரங்குமழை ஆகாத வண்ணம்**
**கரங்கொடுத் தருள்பு ரியவும்**
**ஆனைவாய்க் குள்கரும் பாகாத வண்ணமும்**
**அணைத்தாண்டு னருள்பு ரியவும்**
**ஆழித் துரும்பெனவும் ஆகாத வண்ணமும்**
**அடுக்கவைத் தருள்பு ரியவும்**
**கோனைப் பழித்தகுடி ஆகாத வண்ணமென்**
**குறைதீர்த்து னருள்பு ரியவும்** (அ.ச. 32)

இதுபோன்ற சுவைமிக்க பாடல்களால் நிறைந்துள்ளது அகத்தீசன் சதகம். சைவ சமயக் கலைச் சொற்களும் இதில் குணங்குடியாரால் கையாளப்பட்டுள்ளன.

**4. முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம்**

கொச்சகக் கலிப்பாவாலான நான்கு பாடல்களைக் கொண்டுள்ளது முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம். இதில் 'குணங்குடி' என்னும் புகழ் மிக்க இடத்தில் வாழும் தம் முன்னிலைக் குருவிடம் தாமும் குணங்குடிக்கு வருவதாகவும், ஏழையாகிய தம்மை ஏற்று அருள வேண்டும் என்றும் வேண்டுகிறார். இதனை,

**அழுக்கைத் துடைத்தணைத்து அணைத்துமடி மீதுவைத்தும்**
**புழுக்கைக் குணமெனக்குப் போவதிலை ஆகையினால்**
**தழைக்குங் குணங்குடிக்கென் தந்தையே வந்திடுவேன்**
**பழிக்காமல் ஏழைமுகம் பாரும்முகியித் தீனே** (1)

என்னும் பாடலில் புலப்படுத்துகிறார்.

**5. மகுமூதுநபியாண்டவரைச் சுகானுபவமுறத் துதித்தல்**

நபிகள் நாயகத்தை மகுமூது நபியாண்டவர் எனக் குணங் குடியார் குறிப்பிடுகிறார். நபிகளாரைத் துதித்து 112 சீர்களால் ஆகிய நீண்ட அடிகள் கொண்ட ஆசிரிய விருத்தத்தில் பாடி யுள்ளார்.

**கூர்குணம் அகத்துநிற் கின்றபர வெளியெலாம்**
**குடிகொண் டிருந்த குருவே**
**கொடியகெடு மாயையைக் கூடா திருக்கின்ற**
**குறியருள்வது என்று புகலாய்**
**கோடானு கோடிமறை யானுமறி யாக்குணம்**
**குடிகொண்ட கருணை வடிவே**
**கூலாயி லாகஇல் லல்லாகு என்பதற்கு**
**உரியமகு மூது நபியே**

என நபிகளாரைப் பாடும் குணங்குடியார், பாச வினையென்ற பெரிய முட்காட்டினை வெட்டி நிர்த்தூளி செய்து, வேண்டாத வற்றைக் களைந்து, சமனாக்கி, அறிவுழவு செய்து, பக்தி நீர் பாய்ச்சி, முக்திப் பயிர் விளைவிக்கும் அருளாளராகிய நபிகளாரை இன்பம் பொங்கப் போற்றுகிறார். தம் நெஞ்சமானது தீமைகளைப் பற்றாதிருக்க அருள வேண்டுகிறார். அவரைக் கதிர் முதிர்ந்து முற்றிப் பலனடைந்த சமுசாரி எனவும் அருமையாகக் குறிப்பிடு கிறார். இதனை,

**பத்திவை ராக்கியக் கடல்மடை திறந்துகால்**
**பாய்ச்சியது பயிரா கவே**
**பரிபாக பக்குவக் காலமது பிசகாது**
**பார்த்துப் பதம் தன்னிலே**
**பற்றிப் படர்ந்ததொண் ணூற்றாறு தத்துவம்**
**பலகளை அறப்பி டுங்கிப்**
**பரிபூர்ண மாகவே நாளுக்கு நாள்கதிர்ப்**
**பலகோள் அறுப்ப நித்து**
**பாளையென், னும்பருவ முற்றியே முத்திப்**
**பலன்பெற்ற சமுசாரிநீ**

எனும் அடிகள் இயம்புகின்றன.

**6. தவமேபெற வேண்டுமெனல்**

'தவமேபெற வேண்டுமெனல்' எனும் பொருண்மையில் குணங்குடியார் பதினான்கு பாடல்களைக் கட்டளைக் கலித்துறையில் பாடியுள்ளார். இதில் குணங்குடி என்னும் சொல்லை 'நற்குணம் குடி கொண்ட இறைவன் வாழுமிடம்,' 'சொர்க்கலோகம்' எனும் பொருள்களில் பயன் படுத்துகிறார். இப்பாடல்களில் இறுதியடிகளில் இச்சொல் தப்பாது இடம்பெறுகிறது.

இப்பாடல்கள் அனைத்தும் மனத்தை அடக்கும் பொருட்டு மனத்திற்குச் சொல்லியதாக நெஞ்சொடு கிளத்தலாக இருக்கின்றன.

ஓடியலைந்து சேர்த்த செல்வமும் உறவும் இறந்த பின்பு உடன் வருவதில்லை. இருந்தபோதும் பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை எனும் பேய்கள் மக்கள் மனங்களைப் பற்றிக் கொண்டிருக்கின்றன. பொய்யான வாழ்வை மெய்யென்று நம்பி வாழ்கின்றனர். இவ்வாறு வாழ்தல் தகாது; அப்படி வாழ்வோருக்குக் குணங்குடிப் பதம் வாய்க்காது என்னும் வாழ்வியல் தத்துவக் கருத்துக்களை,

**பெண்ணாசை என்கின்ற பேய்பிடித்து ஆடிய பேதைநெஞ்சே**
**கண்ணா லதில்வருங் கன்மங்கள் யாவையும் கண்டிலையோ**
**எண்ணாத பாவங்கள் எண்ணாமற் செய்யுமிப் பேருடம்பு**
**மண்ணாக நற்றவம் செய்வாய் குணங்குடி வாய்த்திடுமே (2)**

**நாளைக் கிருந்திட லாமென வெண்ணி நடுநெஞ்சமே**
**நாளைக் கிருப்பதை நம்புவ தோவில்லை நானிலத்தில்**
**நாளைக்கும் பின்னைக்கும் நாமிருப் போமென்னு நாட்டமற்றெவ்**
**வேளைக்கு நல்ல குணங்குடி வாழ்ந்திரு வேளையிதே (12)**

எனும் பாடல்களில் மனம் கொள்ளுமாறு பதிவு செய்கிறார்.

**7. குறையிரங்கி உரைத்தல்**

நேரிசை வெண்பாவில் அமைந்த 'குறை இரங்கி உரைத்தல்' ஏழு பாடல்களைக் கொண்டது. இதில் உள்ள ஏழு பாடல்களிலும் 'குணங்குடி' என்னும் சொல்லைக் குறியீடாகவே பயன்படுத்துகிறார். மக்களிடம் ஏராளமான குறைகள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் எடுத்துரைத்து மக்களின் குறைகளுக்காக இரங்கி உரைக்கும் பாடல்கள் தாம் இப்பகுதியில் உள்ளன.

கள் குடித்தல், பாவையரையே நினைத்து மனம்பதைத்தல், என்ன சொன்னாலும் எள்ளளவும் ஏற்காமல் பயமின்றித் திரிதல், புன்மையையே நினைத்தல் ஆகிய பல குறைகள் மக்களிடம் காணக் கிடக்கின்றன. அவற்றை நீக்கி அருளுமாறு குணங்குடியாரை வேண்டுவதாக இப்பகுதி அமைந்துள்ளது.

கள் குடிப்பவர்களைக் கழுதைகள் என்கிறார். என்ன சொன்னாலும் கள்ளுண்பவர்களின் உள்ளத்தில் பதியவில்லை. அதனால் கள்ளுண்பவர்களுக்குத் தான் குறையே தவிர குணங்குடியார்க்கு யாது ஒரு குறையும் ஏற்படப்போவதில்லை என்பதைக் குறையிரங்கி யுரைத்தல் தெளிவாகப் புலப்படுத்துகிறது. குணங்குடியார்,

**கள்ளினங்க ளுண்ணுங் கழுதைகாள் என்சொலினும்**
**எள்ளளவும் உம்மிதயத் தெய்திலதே – உள்ளம்**
**இணங்கா மடமாந்தர் எக்கேடு தான்கெடினுங்**
**குணங்குடியார்க் குண்டோ குறை** (1)

எனும் பாடலில் இதனை எடுத்துரைக்கிறார்.

**8. தவராஜ மகிமை சாற்றல்**

நாகூர் மீரா சாகிபுவின் மகிமையைப் புகழ்ந்து குணங்குடியார் நாகூர் சென்ற போது இப்பாடலைப் பாடியுள்ளார்; பாடியதும் அடைத்திருந்த நாகூர் தறுகா கதவு திறந்ததாகக் கூறுவர். ஆசிரிய விருத்தத்தில் அமைந்த இப்பாடல் முதல் பகுதியில் கொடுக்கப் பட்டுள்ளது (ப.20).

**9. வானருள் பெற்றோர் மனநிலை உரைத்தல்**

வஞ்சகத்தால் வேல் கொண்டு மார்பில் எறிந்தாலும், தீ மூட்டி எரித்தாலும், கொடும் நாகம் நஞ்சை உமிழ்ந்தாலும் வானருள் பெற்றோர் அச்சம் கொள்ளாமல் ஆனந்தம் அடைவர் எனும் பொருள்பட,

**வஞ்ச வேல்கொடு மார்பி லெறியினும்**
**விஞ்ச வேதழல் மூட்டி எரிக்கினும்**
**நஞ்சி னாரழல் நாகம் நலியினும்**
**அஞ்சி டாதவர் ஆனந்த மாவரே** (1)

என்ற கலிவிருத்தப் பாடல் ஒன்று மட்டும் வானருள் பெற்றோர் மனநிலை உரைத்தல் எனும் இப்பகுதியில் அமைந்துள்ளது.

## 10. ஆனந்தக் களிப்பு

பேரின்பத்தில் திளைத்துச் செருக்குற்றுப் பக்தியால் பாடும் பாடலை ஆனந்தக்களிப்பு என்பர். அதே போல் ஒரு ஞானி தம்முடைய பெருமகிழ்ச்சியைக் குறித்துப் பாடும் பாடலையும் ஆனந்தக் களிப்பு எனக் கூறுவர். இறைவனை அறிந்து அவனுடன் இரண்டறக் கலக்கும் நினைவில் சற்றும் சலிப்படையாமல் உழைக்கும் ஞானியர் அத்தகைய ஞான அனுபவங்களை ஆனந்தக் களிப்பில் வெளிப்படுத்துவர்.

குணங்குடியாரும் தம்முடைய சூஃபி மார்க்கத்தின் இறுதியை அடைந்து பாடிய பாடல்கள்தாம், ஆனந்தக் களிப்பு என அமைந் துள்ளன. இப்பெயரில் குணங்குடியார் இரண்டு பாக்களைப் பாடியுள்ளார். அப்பாடல்கள் பல்லவி, அதைத் தொடர்ந்து சரணங்களாய் அமைந்துள்ளன.

தாயுமானவரும் ஆனந்தக் களிப்பு பாடி இருக்கிறார். "சங்கர சங்கரசம்பு -சிவ சங்கர சங்கர சங்கர சம்பு" எனும் பல்லவியுடன் அவர் தொடங்குகிறார். குணங்குடியார்,

**இரக்கத் துணிந்துகொண் டேனே – எனக்**
**கிருக்குங் குறைமுழுதும் நிகழ்த்திக் கொண்டேனே**

என்ற பல்லவியுடன் முதல் ஆனந்தக் களிப்பைத் தொடங்குகிறார். அதைத் தொடர்ந்து 38 சரணங்கள் வருகின்றன.

**மாளிகை மேல்வீடு கட்டி – மனை**
**வாழ்வை நிலையென்று வாழ்கின்ற மட்டி**
**நாளைஎமன் வந்து அதட்டிக் – கொண்டு**
**நடப்பானென் றறியானை அடுப்பதை வெட்டி** (1:6)

**காமக் குரோதங்க ளற்று – சூழுங்**
**கருவி கரணஞ் சகலமு மற்று**
**நேமநிட்டை களையு மற்று – நின்ற**
**நிலையு மறந்து குருவடி பெற்று** (1:8)

**இன்றைக் கிருப்பதும் பொய்யே – இனி**
**என்றைக் கிருப்பது மெய்யென்ப தையே**
**என்று மிருப்பது மெய்யே – என**
**எண்ணி எண்ணி அருள் உண்மையைப் போற்றி** (1:30)

எனும் இவ் ஆனந்தக் களிப்பில் உலக இச்சைகளைத் தள்ளித் துறந்து குருவடி பெற்றுப் பணிந்து இரக்கும் வேட்கை இசைத்

துடிப்போடு வெளிப்படுகிறது. இரண்டாவது ஆனந்தக் களிப்பு,

**எங்கள் குணங்குடி யானே – நமக்கு**
**இன்னும் அருள்புரி வானடி மானே**

என்ற பல்லவியுடன் தொடங்குகிறது. பல்லவிக்கு முன்பு அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த ஒரு பாடலும் உள்ளது.

**எங்கள்குணங் குடியானே எண்ணரும்பேர் அருளாய்நின்று**
**இலங்கை யாலே**
**எங்கள்குணங் குடியானே எண்ணரும்பேர் அருளேயென்று**
**இறைஞ்ச வேண்டும்**
**எங்கள்குணங் குடியானே எண்ணரும்பேர் அருளேயென்று**
**இறைஞ்சி நின்றால்**
**எங்கள்குணங் குடியானே எண்ணரும்பேர் அருளாய்நின்று**
**இரங்கு வானே**

என்ற இப்பாடல், 'எங்களுடைய குணங்குடியானவன் நினைத்தற்கு அருமையான பேருருளாய் விளங்குகிறான். எனவே எண்ணுதற்கரிய அருளாகக் கருதி அவனை வணங்க வேண்டும். அவ்வாறு வணங்கினால் அவனே எண்ணுதற்கரிய பேரருளாக இருந்து மனம் இரங்குவான்' என்னும் பொருள் தருகிறது. தொடர்ந்து வரும் சரணங்களின் பொருள் முன்னுரை போல் அமைகிறது.

**மூலக் கனலினை மூட்டும் – ஒளி**
**மூக்கு முனையில் திருநடனங் காட்டும்**
**பாலைக் கறந்துனக் கூட்டும் – என்று**
**பட்சம்வைத் தென்னைப் படைத்தரு ளித்தான்** *(2:8)*
**பூட்டை உடைத்திட வேணும் – மனப்**
**பூட்டை உடைக்கவை ராக்கியம் வேணும்**
**ஓட்டை உடைத்துக்கொள் காணும் – என்றே**
**ஒருவர்க்கு மாகா உரையரு ளித்தான்** *(2:25)*

என்ற இந்தச் சரணங்கள் குருவருளால் கிட்டும் யோகப் பேரானந்த நிலையைக் கனல், மூக்குமுனை, பால், பூட்டு போன்ற குறியீடுகள் கொண்டு உணர்த்துகின்றன. ஆனந்தக் களிப்பு - 2 'வாழி விருத்தம்' எனும் ஒரு விருத்தத்துடன் முடிவடைகிறது.

## 11. கண்ணிகள்

தமிழில் செழித்து வளர்ந்துள்ள தொண்ணூற்றாறுக்கும் மேற்பட்ட சிற்றிலக்கியச் செல்வங்களுள் 'கண்ணி' இலக்கியமும் ஒன்று. இரண்டிரண்டு பூக்களால் ஆனது ஒரு 'கண்ணி.' அதேபோல் இரண்டடிப் பாக்களால் ஆனது 'கண்ணி இலக்கியம்' என்பர். குணங்குடியார் பாடியுள்ள 798 கண்ணிகள் ஏழு தலைப்புகளில் அமைந்துள்ளன. இவற்றுள் 280 கண்ணிகளைக் கொண்ட நிராமயக் கண்ணி பெரிய கண்ணியாகும். 17 கண்ணிகளைக் கொண்ட எக்காலக் கண்ணி மிகச் சிறியதாகும்.

### 11. அ. நிராமயக் கண்ணி

குணங்குடியாரின் கண்ணி இலக்கிய வகைகளுள் முதலில் அமைந் துள்ளது நிராமயக் கண்ணி. நிராமயம் என்பதற்கு நோயற்றது என்பது பொருள். நோய்களிலிருந்து விடுதலை பெறுவது நிராமயம் எனப் படுகிறது. ஒவ்வொரு கண்ணியும் 'நிராமயமே' என முடிவடைகிறது. தமது குருவான குணங்குடிவாழ் முகியித்தீனையே குணங்குடியார் 'நிராமயம்' என்று குறிப்பிடுகிறார். நோயற்ற நிராமயப் பொருளாகக் குணங்குடியார் தம் ஞான குருவையே பார்க்கிறார். இங்ஙனம் காட்சி நல்கும் தம் குருவைக் குறையிரந்து வேண்டுவதாக இக்கண்ணி அமைந்திருக்கிறது.

அகங்காரம், மமகாரம் போன்றன மனிதனை அழிக்க வல்ல தீய குணங்கள். இவற்றை விட்டொழிக்கக் குணங்குடியார் வற்புறுத்துகிறார். வஞ்சம் அழிந்து ஆணவம், கன்மம், மாயை எனும் பாசத்தையும் விட்டு ஒழித்தவரே நெஞ்சம் தெளிய நிற்பவர் என்கிறார்.

**வஞ்சம் அழிந்து வரும்பாசம் விட்டொழிந்து**
**நெஞ்சந் தெளியநெறி நிற்பார் நிராமயமே** (24)

பித்தம் பிடித்துத் திரிகின்ற பேய்க் குரங்கு போலப் புத்தி அலையக் கூடாது என்பதை,

**பித்தம் பிடித்தலையும் பேய்க்குரங்கு போற்கரணம்**
**புத்தி தனையலைக்கப் போமோ நிராமயமே** (30)

எனும் பாடலில் குறிப்பிடுகிறார்.

பொய்மையும் கபடத்தையும் உள்ளே வைத்துப் பூட்டப்பட்ட பெட்டகமாக உடல் இருக்கிறது. இவ்வுடலை,

**பொய்யுங் கவடுமுள்ளே பூட்டிவைத்த பெட்டகமாய்**
**நையு முடலெடுத்தேன் நான்காண் நிராமயமே** *(74)*

எனச் சுட்டுகிறார்.

இறைவனைப் புகழ்தல், தன்னிலையை எடுத்தியம்பல், இறைவனிடம் வேண்டுதல் எனும் நிலைகளில் நிராமயக் கண்ணியைக் குணங்குடியார் பாடியுள்ளார்.

**11. ஆ. பராபரக் கண்ணி**

'பராபரம்' என்னும் சொல்லுக்குப் பரம்பொருள் என்பது பொருளாகும். ஏக வல்ல இறைவன் ஒருவனையே குணங்குடியார் 'பராபரம்' என்கிறார். பராபரக் கண்ணியில் 100 கண்ணிகள் உள்ளன. குணங்குடியார் தம்முடைய பராபரப் பொருள் மீது அபாரமான அன்புடையவர். எப்போதும் அப்பரம்பொருள் தம்முடனேயே இருக்க வேண்டுமென விரும்பக் கூடியவர். அப்பரம்பொருள் தம்முடன் இல்லாத நிலையுணர்ந்து அங்கு மிங்கும் ஓடுவார். எல்லா இடங்களிலும் ஓடி ஓடித் தேடுவார். ஓடி ஓடித் தேடி அலைந்தும் அப்பொருளைக் காண இயலாமல் தவிப்பார். அப்பொருளைக் காண இயலாவிட்டாலும் பரம் பொருளின் திருவடிகளையாவது காண வேண்டுமென விரும்புவார். அத்திருவடிகள் தமக்குக் காணக்கிடைக்காவிட்டால் தமது மனம் வாடி வருந்தும் என்பார். அவ்வாறு மனம் வருந்தாமல் இருப்பதற்குப் பராபரப் பொருளிடம் வேண்டுகோள் விடுக்கிறார். ஓடிச்சென்று பராபரப் பொருளிடம் ஏழையாகிய தம்முன் எழுந்தருளி வர வேண்டும் என்று வேண்டுகிறார். இதனை,

**ஓடித் திரிந்தலைந்தும் உன்பாதங் காணாமல்**
**வாடிக் கலங்குகிறேன் வாராய் பராபரமே** *(13)*

எனும் கண்ணி குறிப்பிடுகிறது. இதே கருத்தை, "ஆடி ஓய் பம்பரம் போல் ஆசையுடன் எங்கும் உனைத் தேடி ஓய்கின்றேன் என் செய்வேன் பராபரமே!" (பரா.205) எனத் தாயுமானவரும் பாடியுள்ளார்.

பரம்பொருளைப் புகழ்ந்து பாடும் குணங்குடியார் பரம் பொருளைக் 'கண்ணே, கருத்தே, கருமணியே, கண்ணுக்குள்

நிறைந்திருக்கும் விண்ணிற்கெல்லாம் அடங்காத வெட்ட வெளியே என்றெல்லாம் புகழ்ந்து பாடுகிறார். பராபரக் கண்ணியில் பக்தி மணம் பரப்பும் கண்ணிகள் பலவற்றைத் தாயுமானவர் போன்றே குணங்குடியாரும் பாடியுள்ளார்.

**11. இ. றகுமான் கண்ணி**

'றகுமான்' என்பது இறைவனின் திருநாமங்களுள் ஒன்றாகும். இதற்கு அளவற்ற அருளாளன் என்பது பொருள். றகுமான் கண்ணியில் 100 கண்ணிகள் இருக்கின்றன. இதில் குணங்குடியார் தம் குறைகளை எடுத்துரைத்து, இறைவனைத் துதித்து இரந்து பாடுகிறார். தம் குறைகளையெல்லாம் போக்க வேண்டுமெனப் பணிந்து கேட்கிறார். இறைவனை இவர் இறைவனே, கண்ணே, றகுமானே எனப் புகழ்ந்து மன்றாடி அகம் மகிழ்ந்து வாழ்த்துகிறார். தாழ்ந்து பணிந்து தம்மை ஆண்டருள் வேண்டுகிறார். இன்று இருப்பவர்கள் நாளைக்கு இருப்பதில்லை. ஆகையால் தம்மை ஆண்டருள வேண்டும் என,

> **இன்றுள்ளோர் நாளைக் கிருப்பதுபொய் யென்பதையான்**
> **கண்டுகொண்டேன் ஐயாவென் கண்ணே! றகுமானே!** (37)

என்ற கண்ணியில் வேண்டுகிறார்.

வேதியர்களுக்கும் மாதவர்களுக்கும் மெய்யடியார்களுக்கும் உன்னைக் காதலிப்பவர்களுக்கும் நீ அருள் பாலிக்க வேண்டும் என,

> **வேதியர்க்கும் மாதவர்க்கும் மெய்யடியார் கட்குமுனைக்**
> **காதலிப்போ ருக்குமருள் கண்ணே றகுமானே** (83)

எனும் கண்ணியில் வேண்டுகிறார்.

**11. ஈ. எக்காலக் கண்ணி**

'எந்நாள் கண்ணி' எனத் தாயுமானவர் பாடியுள்ளதைக் குணங்குடியார் 'எக்காலக் கண்ணி' என்று பாடியிருக்கிறார். இருவர் பாடல்களிலும் ஒற்றுமைகள் இருக்கின்றன. எக்காலக் கண்ணியில் 17 கண்ணிகள் உள்ளன. இதில் ஆறு கண்ணிகள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. இக்கண்ணிப் பாடல்களின் இறுதிச்சீர் எக்காலம் எக்காலம் என முடிவடைகின்றது. காமக் கடலைக் கடக்க விழையும் குணங்குடியார் 'பங்கப் பழிப்புகளை

உடைய நான் மாதரது கொங்கை களைப் பாராது குருடாவது எக்காலம்' எனக் கேட்கிறார்.

**பங்கப் பழிப்பு ஏய்ந்த பையன்யான் தையலர்கள்**
**கொங்கையைநான் பாராக் குருடாவது எக்காலம்** (4)

**கொங்கைதனைப் பாராக் குருடாய் இருப்பதுடன்**
**அங்கம்உடமிழ் மோகம் அழிவதினி எக்காலம்** (5)

எனும் கண்ணிகளில் உடல் மீதுள்ள மோகம் அழிய வேண்டும் என்ற தம் விருப்பத்தை வெளியிடுகிறார்.

பொய்யே மிகுந்த பாவியான நான் ஐயோ என்று அழுது உன் திருவடிகளை வணங்குவது எந்தக் காலம் என்றும், என்னுடைய பொய்யான உடலின் குற்றத்தை ஐயோ என்று கூவியலறிப் போக்குவது எந்தக்காலம் என்றும்,

**பொய்யே மிகுந்த புதர்ப்பாவிப் பையல்யான்**
**அய்யோஎன் றேஅழுதுன் அடிபணிவது எக்காலம்** (12)

**அய்யோகூ என்றே அலறஅடி யுண்ட என்றன்**
**பொய்யான மெய்யின் பிழையறுவது எக்காலம்** (13)

எனும் கண்ணிகளில் குணங்குடியார் வினாத் தொடுக்கிறார். இதன் மூலம் இறைவனின் திருவடிகளைத் தாம் சரண்புக வேண்டும் என்னும் தம் உள்ளக் கருத்தினையும் பதிவு செய்கிறார்.

பாவம் மிகுந்த உலக வாழ்வை வெறுப்பது, பெண்ணாசையைத் தவிர்ப்பது, இறைநாட்டத்தை மிகுவிப்பது போன்ற பண்பு நிலைகளில் குணங்குடியார் எக்காலக் கண்ணியைப் படைத்துள்ளார்.

**11. உ. கண்மணி மாலைக் கண்ணி**

மனித உடல் ஐம்புலன்களை உள்ளடக்கியது. அந்த ஐம்புலன் களிலும் பிரதான இடத்தைப் பெறுவது கண்ணாகும். கண்ணே மனித உடம்பின் ஒளியாகும். அக்கண்களில் கண்மணியே மனிதர் களுக்குப் பார்வையைக் கொடுக்கும் கருவியாகும். குணங்குடியார் இக்கண்ணியில் பரம்பொருளாகிய இறைவனைக் கண்களிலுள்ள 'மணி' எனக் குறிப்பிடுகிறார். மனிதப் பிறவியைப் பெரிய கடலுக்கு ஒப்பிடுகிறார். மனிதன் ஐம்புலன்களை அடக்க முடியாமல் பெரும் பாவங்களில் ஈடுபடுகிறான். எனவே மனிதப்பிறவி பாவக்கடலை

விட்டு ஒதுங்க வேண்டும் என்கிறார். நன்மை புரிந்தவர்கள் பாவக் கடலில் தத்தளிக்க வேண்டியதில்லை. கடலைக் கடக்க மரக்கலன் தேவை. அம்மரக்கலன் கவிழாமல் இருத்தல் வேண்டும். அத்தகைய மரக்கலத்தைப் பெறுவதற்கு எப்போதும் நன்மை செய்தல் வேண்டும். நன்மை செய்தால் பரம்பொருள் கவிழாத மரக்கலனாய் உதவும் என்கிறார்.

**பவக்கடலை நீக்கிப் பரிவாய்க் கரையேற்றும்**
**கவிழா மரக்கலமே கண்ணே பராபரமே** (13)

என்று இதனைக் கூறுகிறார். இக்கண்ணியில் 'தற்பரமே சிற்பரமே தானென்று நின்றுதவும் கற்பகமே அற்புதமே' (2), 'உடலே உயிரே உளங்குளிர்ந்த செந்தேனே கடலே நிறை யமுதே' (3), 'கொட்டி வைத்த முத்தே குவித்தநவ ரத்தினமே கட்டிப்பசும் பொன்னே என் கண்ணே' (4), 'செல்வப் பெருக்கே திரண்டமணிப் பொக்கிசமே கல்விக் களஞ்சியமே' (6) என்றெல்லாம் இறைவனைப் போற்றும் குணங்குடியார்,

**இன்னமுதே கண்டே எனக்கேற்ற முக்கனியே**
**கன்னலரும் பாகேஎன் கண்ணே பராபரமே** (7)

**பட்டைக் கருப்புவட்டே பானைகொண்ட சர்க்கரையே**
**கட்டிக் கரும்பேஎன் கண்ணே பராபரமே** (10)

எனும் கண்ணிகளில் மேலும் மேலும் உள்ளம் உருகி இறைவனுடன் ஒன்றுபடும் நோக்கில் நா ததும்பப் புகழ்ந்து பாடுகிறார்.

இவை போன்ற 100 கண்ணிகள் கண்மணிமாலைக் கண்ணியில் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கண்ணியின் இறுதியும் கண்ணே பராபரமே என்று முடிவடைகின்றது.

**11. ஊ. மனோன்மணிக்கண்ணி**

'மனோன்மணி' என்னும் சொல் சிவபெருமானின் வாமபாகமாகிய உமாதேவியெனும் பார்வதியைக் குறிக்கும். குணங்குடியார் மனத்தினுள் உறைகின்ற மணி போன்ற இறைவனையே மனோன்மணி என்கிறார். மனம்+உன்+மணி = மனோன்மணி. அதாவது மனம் உன்னும் (நினைக்கும்) மணி என விளக்கலாம். குணங்குடியார் இம்மனோன் மணியை விளித்து 100 கண்ணிகள் பாடியுள்ளார். மனோன்மணிக் கண்ணியில்

*இறைவனைப் பெண்ணாகக் கொண்டு புகழ்ந்து நாயக நாயகி பாவனையில் பாடுகிறார். இவ்வாறு இறைவனைக் காதலியாகப் பாவித்துப் பாடும் குணங்குடியாரின் நாயக நாயகி பாவனையின் பாற் பட்ட பக்தி நெறி தனித்துவமானது.*

**மலர்ந்திருக்கும் பொற்கமல மணவறையில் இருவருங்கை**
**கலந்திருக்க வும்கனவு கண்டேன் மனோன்மணியே** *(4)*

*மனோன்மணியைத் தம் கனவில் கண்டதாகவும், அக்கனவில் மனோன்மணியும் தாமும் கைகலந்து மணவறையில் இருக்கக் கண்டதாகவும், அந்த மணவறை மலர்ந்திருக்கும் பொன்னிறமான தாமரை மலர்களால் ஆனது என்றும் வருணிக்கும் குணங்குடியார், 'கட்டிலினுங் கூடிக் களிகூர்ந்து கொண்டிருப்போம் தொட்டிலினும் ஆடிச் சுகிப்போம்' (49) என்றும் மனோன்மணியிடம் கூறுகிறார். 'முடிமன்னர் தம்வாழ்வு முதல் எவையும் எங்கள்குணங் குடிமன்னர் தம் வாழ்வும் கொடுப்பேன்' (50) என்கிறார்.*

*இறையாகிய மனோன்மணி எல்லோர்க்கும் அருளும் இயல் புடையவள். இப்பாடலில் அவளை,*

**உத்தமிப் பெண்ணென்று உவந்தேனிப் போதுன்றன்**
**பத்தினித் தனத்தைநன் றாய்ப் பார்த்தேன் மனோன்மணியே** *(61)*

*என மறைபுகழ்ச்சியாகப் பாடும் குணங்குடியார் உலகங்கள், உயிர்களுக் கெல்லாம் பொதுவான எல்லோர்க்கும் அருளும் இறையியல்பைப் போற்றுகிறார். 'வேசைக் குணத்தை விரும்புவாய் என்றறிந்தால் காசைப் பணத்தை நான் காட்டேன்' (59), 'உள்ள மணவாளன் உனக்கெவனோ என்னை விடக் கள்ளமண வாளனிச்சை கடிதோ' (63) என்பனவும் காதலி எனக் கண்ட கருத்தின் விரிவுகளே. பின்னர் 'தாயினும் மிக்க கருணைத் தயாநிதி' (88), 'வற்றா அருட்செல்வ வாழ்வேகரு ணாநிதியே' (94) என்றெல்லாம் புகழ்கிறார்.*

*பொற்றாமரைக் கமலப் பொகுட்டே, அல்லி மலரே, அலர் செங்கழுநீர் மலரே, மன்மத பாண மாமலரே, பொன் மலரே, பன்மலரே, புகழ்தரு பன்னீர் மலரே, கொத்தலரிச் செம்மலரே, மடலவிழ்ந்த செந்தாழை மலரே, பூக்கும் அருள் மலரே, புளிக்காத மாமலரே, வாக்கு மலரே, கண்மலரே என்றெல்லாம் அழைத்தும் அலங்கரித்தும் மனோன்மணியிடம் அருள் வேண்டி நிற்பது குணங்குடியாரின் அப்பழுக்கற்ற புதிய பக்தி நெறியாகும்.*

**11. எ. நந்தீஸ்வரக் கண்ணி**

'நந்தீஸ்வரன்' என்ற சொல் சைவநெறியில் நந்தியின் தலைவனான சிவபெருமானைக் குறிக்கும். குணங்குடியார் தொடக்கமும் முடிவும் இல்லாத ஏக இறைவன் ஒருவனையே நந்தீஸ்வரன் எனக் குறிப்பிடுகிறார். 51 கண்ணிகளைக் கொண்ட நந்தீஸ்வரக் கண்ணியின் ஒவ்வொரு கண்ணியும் 'நந்தீஸ் வரனே' என முடிவடைகின்றது. இறை அருளை வேண்டும் நோக்கில் இக் கண்ணி பாடப்பட்டுள்ளது.

இறைவனை ஆதி அந்தம் கடந்தவன், ஒளியின் இறுதியை அடைந்தவன், ஒப்பாரும் மிக்காரும் இல்லாத இறைவனுக்கு ஈடு இணை யில்லை என்பதைக் குணங்குடியார்,

**ஆதிஅந்தம் கடந்தஉமை யாள்அருள்நா தாந்தச்**
**சோதிஅந்தங் கடந்தசெழுஞ் சுடரேநந் தீஸ்வரனே** (1)

என்று வெளிப்படுத்துகிறார்.

**மகத்தோனே ஞான மழையே அருள்வெள்ள**
**முகத்தோனே மோன முளையேநந் தீஸ்வரனே** (6)

எனும் கண்ணியில் இறைவனை மகத்துவம் மிக்கவன், ஞான மழை, அருள் வெள்ள முகத்தோன் என்றெல்லாம் பாடுகிறார். அதோடு இறை அருளையும் வேண்டுகிறார். அவ் இறைவனிடம் சமுதாயச் சீர்கேடுகளையும் சுட்டிக் காட்டுகிறார்.

**12. கீர்த்தனைகள்**

குணங்குடியார் பாடல் திரட்டின் இறுதிப் பகுதியாக அமைவன கீர்த்தனைப் பாடல்கள். இக் கீர்த்தனைப் பாடல்கள் மக்களின் மனங்களை வெகுவாக ஈர்க்க வல்லவை. கீர்த்தனைப் பாடல்கள் பல்லவி, அநுபல்லவி, சரணம் எனும் அமைப்புடையவை. தமிழில் இதனை எடுப்பு, தொடுப்பு, முடிப்பு எனக் கூறுவர். பல்லவி கருத்தை எடுத்துரைக்கும்; அநுபல்லவி அதனை விரித்துரைக்கும்; சரணம் அக்கருத்தைப் பலவாறு விளக்கியுரைக்கும். இவை இராகம், தாளம் என்பனவற்றுக்கு உட்பட்டு அமைக்கப்பட்டிருக்கும். இசைப் புலமை இருந்தால் தான் கீர்த்தனைகள் பாடமுடியும்.

குணங்குடியார் தம் இசைப் புலமைக்குச் சான்று பகரும் வண்ணம் இருபத்திரண்டு கீர்த்தனைகளைப் பாடியுள்ளார்.

அவை யோகம், ஞானம், தோத்திரம் என்னும் மெய்யுணர்வுப் படிநிலைகளில் இருக் கின்றன.

புன்னாகவராளி, சௌராஷ்டிரம், செஞ்சுருட்டி, ஆனந்தபைரவி ஆகிய இராகங்களில் முறையே இரு கீர்த்தனைகளைப் பாடியுள்ள குணங்குடியார், இந்நான்கு இராகங்களுடன் பந்துவராளி, கல்யாணி, பைரவி, சாவேரி, கேதார கௌளம், அசாவேரி, பியாகடை, ஆகிரி, பரிசி, காம்போதி, தன்னியாசி, அடாணா, பரிசு, தோடி எனப் பதினெட்டு இராகங்களில் பாடியுள்ளார்.

அடசாப்புத் தாளத்தில் இரண்டு, சாப்புத் தாளத்தில் பதினைந்து, ஆதி தாளத்தில் மூன்று, ரூபக தாளத்தில் இரண்டு என இருபத்திரண்டு கீர்த்தனைகளையும் நான்கு வகைத் தாளங்களில் பாடியுள்ளார். இவற்றில் இசையோடு உணர்வையும் ஊட்டுகிறார். இவர் கீர்த்தனைகளில்,

**பரமுத்தன் குணங்குடி தெருவில் வரும்பவனி**
**பார்த்து வருவோம் வாருங்கள்** **(கீர்த்.1)**

**பெண்கொண்ட பேர்பட்ட பாட்டையும் கேட்டையும்**
**பேசுவோமே நெஞ்சமே** **(கீர்த்.3)**

**தாய்மார்களே பாவி சொல்வதைத்தான் சற்றும்**
**தள்ளாமற்கேட்டுக் கொள்வீர்** **(கீர்த்.19)**

என்பன போன்ற எல்லாக் கீர்த்தனைகளும் எல்லோரையும் ஈர்க்க வல்லவை; மயக்கவல்லவை; பிரபலமானவை.

தெய்வத்தை முன்னிலைப் படுத்தியும், நெஞ்சொடு கிளந்தும் சிறந்த சொற்களை, எளிய சொற்களைக் கையாண்டும் பாடியுள்ள குணங்குடியாரின் ஒட்டுமொத்தப் படைப்புகள் அனைத்தும் தனித்துவமானவை. அவை காலத்தை வென்று வாழும் வல்லமையுடையவை. என்றும் நிலைபேறுடைய குணங்குடியாரின் பாக்களும், கீர்த்தனைகளும் குணங்குடியின் பெருமையையும், குணங்குடி ஆண்டவனின் பெருமையையும் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பறை சாற்றும் பான்மை மிக்கவை.

☯

## 3. ஸூஃபித்துவம்

'ஸூஃபித்துவம்' என்பது இஸ்லாமிய மெய்ஞ்ஞானத் தத்துவமாகும். இதனை 'ஸூஃபித் தத்துவம்' என்றும் கூறுவர். இஸ்லாமிய ஞான வழியில் செல்பவரை 'ஸூஃபி' என்று அழைப்பது மரபு.

**தஸவ்வுஃப்**

'ஸூஃபி' என்னும் அறபுச் சொல்லுக்குப் பல்வேறு விளக்கங்கள் இருக்கின்றன. ஆன்மீக ஞானத்திற்கு அறபியில் 'தஸவ்வுஃப்' என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர். 'தஸவ்வுஃப்' என்னும் சொல் 'தூய்மை' எனப் பொருள்படும் 'ஸஃபாவத்' என்னும் அறபு அடிச் சொல்லில் இருந்து வந்தது என்பர். 'ஸஃபாவத்துல் கல்பு' என்றால் 'உள்ளத் தூய்மை' என்று பொருள். இதிலிருந்து தோன்றிய 'தஸவ்வுஃப்' எனப்படும் இஸ்லாமிய ஆத்ம ஞான வழியில் அடியெடுத்து வைப்பவர் 'ஸூஃபி' என்று அழைக்கப் பட்டார்.

'தஸவ்வுஃப்' என்பதற்கு "உள்ளத்தைப் புடமிட்டுத் தூய்மைப் படுத்தி, மாசற்ற உயர் பண்புகளை வளர்த்து, அகத்தையும், புறத்தையும் ஒரு சேரப் பரிபக்குவப் படுத்துவதற்கான வழி வகைகளை அறிந்து கொள்ள உதவும் ஞானமே 'தஸவ்வுஃப்' ஆகும். நிலையான பேரின்பப் பேற்றைப் பெறுவது தான் அதன் நோக்கம்" என்று ஷைகுல் இஸ்லாம் ஜகரிய்யில் அன்ஸாரி விளக்கம் தருகிறார். இஸ்லாத்தில் ஆத்ம ஞானத்தை வளர்த்து இறைவனை அடைவதற்கு உருவாக்கப்பட்ட அமைப்பு 'தஸவ்வுஃப்' எனப்பட்டது.

"'ஸூஃபித்துவம்' என்பது வாழ்க்கையின் அகப்புறத் தூய்மை யாகும்" என்கிறார் இமாம் குஷைரி. இறைவன் மனிதனை அவனளவில் இறந்து விடும் படிச்செய்து, அவன் பொருட்டு அவனை வாழும் படிச் செய்தலே 'தஸவ்வுஃப்' எனப்படும் ஸூஃபித்துவமாகும் எனச் சுருக்கமாகக் கூறலாம்.

**ஸூஃபி**

'ஸூஃபி' ஆங்கிலத்தில் 'Muslim Mystic'' எனப்படுகிறார். 'முஸ்லிம் சித்தர்,' 'ஆத்ம ஞானி,' 'மெய்ஞ்ஞானி' எனத் தமிழில் ஸூஃபி குறிப்பிடப் படுகிறார்.

"இஸ்லாமிய ஆத்ம ஞானி (Muslim Mystic) ஸூஃபி எனப்படுவார். தமிழில் ஸூஃபியை முஸ்லிம் சித்தர், ஆத்ம ஞானி, மெய்ஞ்ஞானி, இறைநேசர், இறையடியார் என்று கூறலாம்" (இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் ஓர் அறிமுகம், ப.1) என்கிறார் எஸ்.எம்.சுலைமான்.

"தூய்மையின் மேல் கம்பளி அணிபவர்; ஆசைகளுக்கு அச்சமூட்டு பவர்; உலகைத் துறந்து நபியின் வழியில் நடப்பவர்" என்று ஸூஃபியை வருணிக்கிறார் அபுஅலி குத்பாரி.

**ஸூஃபி – சொற்பொருள் விளக்கம்**

'ஸூஃபி' என்னும் சொல்,

1. 'தூய்மை,' 'பரிசுத்தம்' என்னும் பொருள் கொண்ட 'ஸஃபா' (safa) என்ற அறபு மூலச் சொல்லில் இருந்து பிறந்தது.
2. அணி (வரிசை) என்னும் பொருள் கொண்ட 'ஸஃப்' (sauf) எனும் சொல்லில் இருந்து தோன்றியது.
3. திண்ணை என்று பொருள்படும் 'ஸுஃப்பா' என்ற சொல்லில் இருந்து வந்தது.
4. 'அறிஞன்' என்னும் பொருள்படும் 'சோபாஸ்' (sophos) என்ற கிரேக்க அடிச் சொல்லில் இருந்து உருவானது.
5. அறபு மொழியில் 'ஸூஃப்' என்பதற்கு முரட்டுக் கம்பளி என்பது பொருள். ஆடம்பர வாழ்வைத் துறந்து, மன இச்சைகளை அடக்கி, எளிய வாழ்வின் சின்னமான கம்பளியை விரும்பி அணிந்து கொண்ட இஸ்லாமிய ஆத்ம ஞானியர் 'ஸூஃபிகள்' எனப் பெயர் பெற்றனர்.

இங்ஙனம் 'ஸூஃபி' எனும் சொல்லாக்கத்துக்குப் பலவாறு அறிஞர்கள் விளக்கமளிக்க முயன்றுள்ளனர். இவற்றைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது ஸூஃபி என்னும் சொல் தமிழில் ஆத்ம ஞானியைக் குறிப்பதாகத் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். ஞானம் என்னும் சொல்லுக்கு அறிவு, கல்வி, பரஞானம், தெளிவு, நல்லொழுக்கம் எனும் பல பொருள்கள் உள்ளன.

**யார் ஸூஃபி?**

*யார் சூஃபி என்பதற்கு 'ஆர்பெரி' ஆங்கிலத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள ஆர்.ஏ.நிக்கல்சன் என்பாரின் மொழிபெயர்ப்புப் பாரசீகக் கவிதை,*

**ஸூஃபி ஞானி, யார் அவன்?**
**இதயத் தூய்மையன்**
**அவன் பெயரைத் திருடும்**
**நாணமற்ற உலக மனிதனின்**
**கிழிந்த மேலாடை அல்லன்**
**முறையற்ற ஆசையா? அல்லன்**
**குப்பை கூளத்தில் தூய்மையைத் தேர்பவன்**
**துன்பங்களால் துவளான்**
**தொல்லைகளில் மகிழ்வான்**
**கரத்தில் குறுந்தடி கொண்ட காவலன்**
**அழகின் கதவையும் திரைப் புதரையும் காத்து**
**அவனுக்கு வழிவிடுபவன்**
**அச்சமின்றி நடப்பவன்**
**இறைவனின் அம்புகளைக் காட்டி**
**அகத்தே நுழைபவன்**
**அவனே ஸூஃபி**

*என்று விளக்கம் தருகிறது. இக்கவிதையின் தலைப்பே 'உண்மையான சூஃபி' என்பதாகும்.*

*இறைவனை அறிய விரும்பி ஞானப்பாதையில் செல்வோர் சூஃபி, மஸ்தான், தர்வேஷ், ஆரிஃபு, சாலிஹு என்றெல்லாம் அழைக்கப்படுகின்றனர்.*

**ஸூஃபிகளின் இயல்புகள்**

*'சூஃபிகள் தன்னலம் பாராதவர்கள்; தியாக உள்ளம் கொண்டவர்கள்; அவர்களின் சொல், செயல், சிந்தனை ஆகியவை மிகத் தூய்மையானவை; இறைவன் பால் நாட்டமும் தேட்டமும் கொண்ட சூஃபிகள் தங்கள் உள்ளத்தை அவனளவிலேயே நிலை நாட்டுவதற்காக இறை சந்நிதானத்தில் முதல் வரிசை (அணி - ஸஃப்) யில் இடம் தேடிக் கொள்வார்கள்.'*

*நபிகளாரின் காலத்தில் 'திண்ணைத் தோழர்கள்' என்றழைக்கப் பட்ட சூஃபிகள் எப்போதும், வணக்கத்திலும், தியானத்திலும் ஈடு*

பட்டிருப்பார்கள். பிறரைக் கெடுக்கும் போலித்தனமான வாழ்வு அவர்கள் வாழ்வல்ல.

'நானுமில்லை நீயுமில்லை இருப்பது இறைவன் ஒருவன் மட்டுமே' என்னும் உணர்வு கொண்டவர்கள் ஸூஃபிகள். தம்மைத் தாமே கட்டுப் படுத்திக் கொண்டு இறைவனது பாதையில் முடுகி அவனில் கலப்பதே இவர்களின் வேணவா. "ஸூஃபி 'தான்' என்பதில் அழிந்து இறைவன் அளவில் நிலையாகி இருப்பார்" என்று ஜுனைத் பக்தாதி குறிப்பிடு கிறார்.

ஸூஃபிகள் தெள்ளிய மதியுடையவர்கள். இறைவனுக்கும், மனிதனுக்குமிடையே உள்ள தொடர்பை - பந்தத்தை - துல்லிய மாகத் தெரிந்தவர்கள். இறைவனளவில் அழிந்து விடும் இவர்களுக்கு அகத்தும் புறத்தும் இறைக்காட்சியே மிளிரும். ஸூஃபியின் வாழ்வின் நோக்கமும் இலட்சியமும் அல்லாஹ் தான்.

**திருக்குர்ஆன், நபிமொழிகளில் 'ஸூஃபி'**

இஸ்லாமியர்களின் புனித வேதமான திருக்குர்ஆனில் 'ஸூஃபி' என்னும் சொல் இடம்பெறவில்லை. எனினும் திருக்குர்ஆன் 56-ஆவது அத்தியாயத்தில் 'அல்லாஹ்வுடன் நெருக்கமுடையோர்' என்னும் பொருள் படும் 'முகர்ரிபூன்' என்ற சொற்றொடர் இடம் பெறுகிறது. 'முகர்ரிப்' எனும் சொல்லின் பொருளே 'ஸூஃபி' என்பதற்கும் உரியதாகும். ஸூஃபிகளைப் பற்றிய நேரடியான தடயங்கள் திருக்குர்ஆனில் இல்லையென்றபோதும்,

> **ஆதியும் அவனே; அந்தமும் அவனே; தோற்றுவதும் அவனே; மறைந்திருப்பவனும் அவனே; அவன் சகலத்தையும் நன்கறிந்தவன் (57:3)**
>
> **அல்லாஹ் மண், விண் இவ்விரண்டில் ஒளியாய் இருக்கிறான் (24:35)**
>
> **நான் (மனிதனை) பூமியில் (எனது) பிரதிநிதியாகப் படைத்திருக்கிறேன் (2:30)**
>
> **நான் அவனை (மனிதனை) உருவாக்கி அதில் என் உயிரைப் புகுத்தினேன் (15:29)**
>
> **நான் உங்களின் உயிர் (நப்ஸ்) களிலே இருக்கிறேன். என்னை நீங்கள் பார்க்க வேண்டாமா? (51:21)**
>
> **அல்லாஹ் எவனுக்கு ஒளி ஊட்டவில்லையோ அவனுக்கு (எங்கிருந்தும்) எவ்வித ஒளியும் கிட்டாது (24:40)**

**(நபியே) நீர் (மண்ணை) எறிந்தபோது அதை நீர் எறியவில்லை;**
**அல்லாஹ்தான் (அதனை) எறிந்தான் (8:17)**

*என்பன போன்ற வசனங்களில் அதற்கான சாயல்கள் இருக்கின்றன. இதே போன்று,*

**சன்மார்க்க நெறியின் தலையாய பொருள் இறைவனை அறியும் மெய்ஞ்ஞானமாகும்.**

**உன்னில் இறைப்பண்புகளை உண்டாக்கிக் கொள்.**

**நீ இறப்பதற்கு முன் இறந்து விடு.**

**தன்னை அறிந்தவன் தலைவனை அறிவான்.**

**எந்த மனிதனை நான் நேசிக்கிறேனோ அவன் கேட்கிற கேள்வியாக நான் ஆகிவிடுகிறேன்; மேலும் அவன் பார்க்கிற பார்வையாக நான் ஆகிவிடுகிறேன். மேலும், அவன் நடக்கிற காலாக நான் ஆகி விடுகிறேன் என்று இறைவன் கூறுகிறான்.**

**அல்லாஹ்வில் இணைந்துவிடு; இல்லாவிட்டால், அல்லாஹ்வை அடைந்தவர்களோடு ஒன்றாகிவிடு; அவர்கள் உன்னை அல்லாஹ்வுடன் சேர்த்து விடுவார்கள்**

*என்னும் நபிமொழிகளும் அமைந்திருக்கின்றன. நபிகளாரின் வாழ்க்கையும், அவர்களின் தோழர்களின் வாழ்க்கையும் இறைவனோடு ஒன்றுவதற்கு முன்மாதிரியாய் இருக்கின்றன.*

**ஞான வழி**

*உலகப் பற்றுகளையெல்லாம் முற்றும் துறந்து, இன்பதுன்பங்களைச் சமமாகப் பாவித்து வாழும் மன இயல்புடையோர் இறைவனை அடைய ஆறு வழிகள் இருக்கின்றன. அவை:*

1. **தாஅத் (கீழ்ப்படிதல்)**
2. **ஷரீஅத் (சட்டம்)**
3. **தரீக்கத் (வழி)**
4. **ஹகீக்கத் (உண்மை ஞானம்)**
5. **மஃரிபத் (இறை ஞானம்)**
6. **அகீதத் (இறைவன் மீது கொள்ளும் அளவிலா அன்பு)**

*என்பனவாகும்.*

*உண்மையான ஸூஃபிகள் இந்த ஆறு வழிமுறைகளையும் முறையாகப் பின்பற்றி இறைவனிடம் தங்களை முழுமையாக ஒப்படைத்து விடுவார்கள்.*

சூஃபி இறைவனிடம் நேசம் கொள்கிறார். அவனுடைய நேசத்திற்காகவே எதையும் செய்கிறார். இறை நினைவில் திளைத்து இருக்கும் போதெல்லாம் அவருடைய உள்ளம் தெளிவு பெறும். இறை நினைவே அகத்தின் வாழ்வு; அவனை மறந்திருப்பதே அதன் சாவு. இந்த நிலையில் அவர் இறைவனின் நெருக்கத்தைப் பெற்று, உலகமாயையிலிருந்து விடுதலை அடைகிறார். இத்தகைய ஞான வழி 'தரீக்கத்' எனப்படுகிறது.

'தரீக்கத்' என்பது பயிற்சி நிலை. இதற்கு அடுத்து 'ஹகீக்கத்' (தெளிவு-உண்மை) எனும் உயர்ந்த நிலை. இதன்பின் ஆன்மீகத் துறையில் இறை ஞானத்தைக் குறிக்கும் 'மஃரிபத்' எனும் உன்னத நிலை.

இஸ்லாமிய மார்க்கச் சட்டமான ஷரீஅத், ஞானத்திற்கு இட்டுச் செல்லும் ஆன்மீக வழியான தரீக்கத், இறைவனின் உண்மை நிலை அறியும் ஹகீக்கத், இறை ஞானத்தைக் குறிக்கும் 'மஃரிபத்' ஆகியன சைவ சித்தாந்தத்தில் சுட்டப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவற்றுக்கு இணையானவை.

வணக்க வழிபாட்டிலும், இறைத் தியானத்திலும் ஈடுபடும் சூஃபிகளின் மெய்ஞ்ஞான வழியான சூஃபித்துவத்தை வளர்த்து வளமடையச் செய்த பெருமை முகியித்தீன் ஆண்டவர் அப்துல் காதர் ஜீலானி என்பாரையே சாரும். இவர்தான் சூஃபித்துவத்தின் தந்தையாகவும் தலைவராகவும் போற்றப்படுகிறார்.

'மனிதர் எத்தனை பேர் உண்டோ அத்தனை ஞான வழிகள் உண்டு' என ஓர் அறபுப் பழமொழி இருக்கிறது. ஞான வழிகள் பலவாக இருந்தபோதும் அவற்றுள் பதினான்கு வழிகள் புகழ்பெற்று விளங்கின. இந்தப் பதினான்கு நெறிகளுள் இந்தியாவில் நான்கு நெறிகள் பரவியுள்ளன. அவை:

1. **சிஸ்தியா நெறி**
2. **காதிரிய்யா நெறி**
3. **ஸுஹ்ரவர்திய்யா நெறி**
4. **நக்ஷ பந்தியா நெறி**

என்பனவாகும்.

ஆன்மவழிப் பயணிகள், தாம் சார்ந்துள்ள தரீக்காவின் ஞான குருவிடம் 'முரீது' எனும் தீட்சை பெற்றுத் தம் பயணத்தைத் தொடங்குவர்.

**சூஃபித்துவத்தின் வளர்ச்சி**

நபிகளாரின் காலத்தில் தோன்றிய சூஃபித்துவம் நபிகளாரின் மறைவுக்குப் பின் படிப்படியாக வளரத் தொடங்கியது. இந்நெறியைத் தொடக்க காலத்தில் மரபு நிலைச் சமயவாதிகள் ஏற்கவில்லை. இமாம் கஸ்ஸாலி என்பாரின் வழி காட்டுதலுக்குப் பின் ஏற்றனர். படிப் படியாக இந்த ஆன்மநெறி உலகெங்கும் பரவியது. ஆப்கானிஸ் தானத்தில் பிறந்த அறிவுச் சிங்கம் மௌலானா ஜலாலுதீன் ரூமி முதலானோர் சூஃபிய முன்னோடிகளாக விளங்கினர்.

மௌலானா ரூமி போன்ற சூஃபிகள் இறைக் காதலில் தம்மை முழுமையும் இழந்தவர்கள்; 'அவர்களின் இறைக் காதல் அலை சுவாலையை ஒத்தது' என்பர். இந்நெறியையும் இறையுணர்வையும் தம் கவிதைகளில் ரூமி,

**மறைபொருள் என்று**
**வழங்கா விடினும்**
**மறைபொருளின் கருத்து**
**வாழவே செய்யும்**

என்றும்,

**அவன்**
**கருணையையும்**
**கடுமையையும்**
**நான் விரும்புவேன்.**
**இரண்டு முரண்களையும்**
**நான் விரும்புவது**
**வியப்பானதே**

என்றும் வெளிப்படுத்துகிறார்.

இந்திய சூஃபிகளுள் அஜ்மீரில் அடக்கமாகியுள்ள காஜா முயினுத்தீன் சிஷ்தி என்பார் தலை சிறந்தவராகக் கருதப்படுகிறார். தமிழகத்திலும் சூஃபிகள் பலர் இருந்திருக்கின்றனர். அவர்களுள் மெய்ஞ்ஞானி பீர் முஹம்மது அப்பா, குணங்குடி மஸ்தான் சாகிபு, கோட்டாறு ஞானியார் சாகிபு, காலங்குடி மச்சரேகைச் சித்தர், அய்யம்பேட்டை அப்துல்கனி சாகிபு, தென்காசி ரசூல் பீவி, கீழக்கரை ஆசியா உம்மா ஆகியோர் குறிப்பிடத்தக்கோராவர்.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் சித்தர்களுக்கும் சூஃபி களுக்கும் இடையே பெரிதாக வேற்றுமை இல்லை எனலாம். ஆடம்பரத்தையும் ஆரவாரத்தையும் வெறுத்த சித்தர் பலர் தாவர உணவு உண்டனர். நல்வாழ்வுக்குப் பாடுபட்டனர். சாதி, மத, இன பேதங்களைக் கடந்து எல்லோரையும் நேசித்தனர். சூஃபிகளும் இவ்வாறுதான் வாழ்ந்திருக்கின்றனர். தமிழகத்தில் சித்தர்களும், சூஃபிகளும் தமிழ் மக்களுக்காகவே எளிய, இனிய சொற்களைக் கையாண்டு அற்புதமான புதிய ஞானப் பாடல்களைப் பாடி யுள்ளனர். இப்பாடல்களில் உருவமற்ற ஏகதெய்வ வழிபாட்டையே இருசாராரும் வலியுறுத்தி வந்திருக்கின்றனர்.

முகியித்தீன் ஆண்டவர் அப்துல் காதர் ஜீலானி அவர்களைத் தலைவராகக் கொண்ட காதிரிய்யா தரீக்காவைத் தமிழ்நாட்டில் பரவச் செய்தவருள் குறிப்பிடத்தக்கவர் நாகூர் ஷாகுல் ஹமீது ஆண்டகை ஆவார். குணங்குடியார் இத்தரீக்காவைச் சேர்ந்தவர். சூஃபித்துவத்தையும், சூஃபியையும், தமிழகத்தில் மிகச்சிறந்த சூஃபியாகத் திகழ்ந்த குணங்குடியாரையும் பற்றிய இரா.குமரவேலனின் தெளிவான விளக்கம் கவனிக்கத் தக்கது.

> "சூஃபியம் அன்பு அருள் உண்மை பக்தி என்னும் தூண்களால் கட்டப்பட்ட மாளிகை. சூஃபி இரக்கமே வடிவானவன். உண்மை அவன் உள்ளத்தில் உறையும்; மனித நேயம் அவன் குருதியில் பாயும். சூஃபி எப்போதும் தூய வழியிலேயே நடந்து செல்வான். அந்த வழி அவனைப் பரம்பொருளோடு (அல்லாவோடு) ஒன்றச் செய்யும். சூஃபி உள்ளத்தில் எழும் எண்ணற்ற வினாக்களுக்கு விடைதேடி அலைந்து இறுதியில் ஒளிபெற்று, 'தான்' என்னும் ஆணவத்தை அழித்துத் தெளிவு பெறுவான். சூஃபி குரு நெறியில் எப்போதும் வழாது செல்பவன். குருவழியே தன் ஒருவழி என்று நடப்பவன். குரு சீடன் நெறியிலேயே இந்நெறி வளர்ந்து வருகிறது. சூஃபி அன்பால் இறைவனுக்கு அடிமையாகிறான்; அவனிடம் பித்தா கிறான். ஞான வாக்குகளைக் கவிதையாகவும் உபதேசமாகவும் வெளிப்படுத்துகிறான். சூஃபி எந்தப் பக்கம் திரும்பினாலும் பரம்பொருள் அங்கே இருக்கிறான் என்னும் திருமறைக் கொள்கையை உறுதியாக நம்புகிறவன். சூஃபி இந்த உலகில்

வாழும்போதே இறைவனோடு ஒன்றும் நிலையை அடைய முடியும் என்று கருதுபவன். அதற்காகவே துறவு நெறி சார்ந்து நிற்பான். சூஃபி தன் மென்மையான இதயத்தை உறுதியான கம்பளி ஆடையால் மூடி மறைத் திருப்பான். ஒளி பொருந்திய தன் முகத்தைத் தாடி மீசைகளால் ஒளித்திருப்பான். ஆனால் உள்ளே அறிவும் இரக்கமும் கொழுந்து விட்டெரியும். சூஃபி சாதி சமயம் கடந்த சன்மார்க்கவாதி. அவன் சமயத்துக் குள்ளும் இருப்பான். சமயத்துக்கு வெளியேயும் இருப்பான். சமயங்கள் அவனுக்கு விலங்கிட முடியாது. சமயங்கள் அவனை விலக்கிடவும் முடியாது. சூஃபி ஏழை எளியவர்களுக்கு நெருக்க மானவன். அதனால், அவன் வாக்கில் நாட்டுப்புற எளிமை இருக்கும். பாமர மக்களின் வழக்குச் சொற்களும், பழமொழி களும் அதில் கட்டிப் புரளும். மறைபொருட் சொற்களும் பரிபாஷைகளும் பல்கிவரும். சூஃபி கால்போன வழிப் பயணம் செய்பவன். ஆனால், அவன் பயணம் ஆன்மீகப் பயணம். அதுவோ ஏழு படிகளைக் கடந்து இறையோடு ஒன்றுபடும் பயணம். அதிலேயே அவன் நாட்டம் இருக்கும். 'பனா'* அல்லது 'பகா'* அடைவதே அவன் பயணத்தின் இறுதிநிலை, முடிவிடம். சூஃபிக்கான இத்தனைப் பண்புகளையும் பெற்ற ஒரு ஞான நெறிச் செல்வரே 'சுல்தான் அப்துல் காதிர்' என்னும் நம் குணங்குடி மஸ்தான் அவர்கள் என்று போற்றி மகிழலாம்" (07.08.2008 அன்று ஜமால் முகம்மது கல்லூரியில் படிக்கப்பட்ட அச்சில் வராத ஆய்வுக் கட்டுரை).

**மஸ்தான்**

'மஸ்தானா' என்ற பாரசீகச் சொல்லுக்கு ஏதேனும் ஒன்றில் இரண்டறக் கலந்தவர், வெறிபிடித்தவர் என்னும் பொருள்கள் உள்ளன. மது, போதை, வெறி என்பன சூஃபி நெறியில் ஆனந்த பரவச நிலையைக் குறிக்கின்றன. இறைக்காதலில் மூழ்கித் தம்மை இழந்த ஞானியரை 'வெறியர்' என்றும் 'மஸ்தான்' என்றும் அழைப்பது சூஃபித்துவ மரபு. இங்ஙனம் வாழ்ந்தமையால் குணங்குடியார்மஸ் தான் எனப்பட்டார். இவர் பெற்ற மஸ்தான் எனும் பெயரும் இவர் ஒரு சூஃபி ஞானி என்பதைத் தெளிவுறுத்துகிறது.

"'மஸ்தான்' அல்லது போதை கொண்டவர் என்பவர் பரம் பொருளின் காதலர்; ஏகத்துவக் கடலில் மூழ்கியவர்; அவருக்கு மறை பொருள்கள் தெரியும்; ஆனால் தம்மைச் சுற்றியுள்ள இவ்வுலகச் சூழலை அவர் உணரார்; அவர் காதலியின் (பரம்பொருளின்) தோற்றத்தை உண்பவர்; ஆனால் அத்தோற்றம் புலனுணர்வு உலகத் தொடர்பற்றது" (Laleh Bakhtiar, "Sufi expressions of the mystic quest", Thames and Hudson, London, p.113).

**ஞானகுரு**

ஸூஃபி ஞான மார்க்கத்தில் ஈடுபடுவோருக்குக் குரு தேவை. அக்குரு 'செய்கு' என்றும், 'பீர்' என்றும் அழைக்கப்படுகிறார். தாம் கண்டறிந்த நல்ல வழிமுறையைக் குரு சீடருக்குக் காட்டுவார். இதுதான் 'தரீக்கத்' எனப்படுகிறது. குணங்குடியார் அப்துல் காதர் ஜீலானி என்பாரைக் குருவாகக் கொண்ட ஷாம் சாகிபிடம் தீட்சை பெற்றார். இக்குருவுக்குக் குருவான முகியித்தீன் ஆண்டகை அவர்களைத் தம் முன்னிலைக் குருவாகக் கொண்டு குணங்குடியார் பாடியுள்ளார்.

**குணங்குடி வாழு முகியித்தீ னாமென்**
**குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம்**

(ஆநந்தப் பத்து, குரு வணக்கம்)

என்று பாடும் குணங்குடியார் இறைவனின் அருளைப் பெறும் பொருட்டு முகியித்தீன் ஆண்டவர் அப்துல் காதர் ஜீலானி அவர்களிடம் குறை இரக்கிறார். இறைவனின் அருளைப் பெறுவதற்குத் தம் குருவின் அருளைப் பெறுவது; அவர் வாயிலாக நபிகளாரின் அருளைப் பெறுவது; இவ்விருவரின் வழியாக இறைவனின் அருளைப் பெறுவது என்னும் வழியைப் பின்பற்றுகிறார். அதனால்தான் முகியித்தீன் சதகத்தில் முகியித்தீனிடம்,

**மாதா விலுங்கருணை யுள்ளநீர் பின்தொடர**
**வள்ளல்இற சூல்வ ருகவே**
**வளருமருள் நிறைகுணங் குடிவாழும் என்னிருகண்**
**மணியே முகியித் தீனே** (மு.ச.1)

என்று தம் மனக் கருத்தைப் பதிவு செய்கிறார். இச்சதகம் முழுவதும் நூறு தொடர்களிலும், 'வற்றா அருட்செல்வம் உள்ள நீர்' (மு.ச.5), 'மாறிலா நற்கருணையுள்ள நீர்' (மு.ச.6), 'மருமலர் மணக்கோலம் உள்ள நீர்' (மு.ச.7), 'வாரா நெறிக் கருணை உள்ள நீர்' (மு.ச.14), 'மண்டலமும் விண்டலமும் உள்ள நீர்' (மு.ச. 17), 'மங்காத திங்களொளி உள்ள நீர்' (மு.ச.21), 'வாராரும் அருள் மாரி உள்ள நீர்' (மு.ச.24), 'வாயூறு தேனின் மொழி உள்ள நீர்' (மு.ச.27), 'வண்ணத் திருக்கருணை உள்ள நீர்' (மு.ச.28) என்னும் அழகு மிக்க தொடர்களால் தம் குரு பக்தியின் வெளிப்பாடாக ஒரு மணிமண்டபத்தையே சமைத்து விடுகிறார்.

எல்லாவற்றுக்கும் மேலாகத் தம் குருநாதரின் சித்து விளையாட்டுக்களை யெல்லாம் ஒரு பாடலில் தொகுத்துக் காட்டுகிறார்.

**அண்டகோ டிகளுமோர் பந்தெனக் கைக்குள்**
**அடக்கிவிளை யாட வல்லீர்**
**அகிலமோ ரேழினையும் ஆடுங் கறங்குபோல்**
**ஆட்டிவிளை யாட வல்லீர்**
**மண்டலத் தண்டரை யழைத்தரு கிருத்தியே**
**வைத்துவிளை யாட வல்லீர்**
**மண்ணகமும் விண்ணகமும் அணுவைத் தொளைத்ததின்**
**மாட்டிவிளை யாட வல்லீர்**
**கண்டித்த கடுகிலெழு கடலைப் புகட்டிக்**
**கலக்கிவிளை யாட வல்லீர்**
**கருதரிய சித்தெலாம் வல்லநீ ரடிமையென்**
**கண்முன் வரு சித்தில்லையோ** *(ஆநந்தப் பத்து. 3)*

என்னும் பாடலடிகளில் தம் குருவை ஒரு மாபெரும் சித்தராகக் கண்டு சித்தம் மகிழும் குணங்குடியார்,

**மாதவர்க் கரசான மன்னர்க்கு மன்னாக**
**வந்தமக ராஜ னியே**
**மண்டிசையும் விண்டிசையும் எண்டிசையு நின்றசையும்**
**வாசனாம் போஜ னியே**
**ஆதிநீ மகுரூக்கு றகுமானு நீயெனக்**
**கானமகு பூபு நீயே**
**அக்கா னியத்திலே சொக்கும்இறு சாதுதந்து**
**அருள் செய்ய வந்த நீயே** *(ஆநந்தப் பத்து. 5)*

என்னும் பாடலில் மாதவர்க்கு அரசு, மன்னர்க்கு மன்னனான மகராஜன், எத்திசையும் நின்றிலங்கும் செல்வன், உலகிற்கெல்லாம் முதல்வன், அன்பன், பேரருளாளன், சத்தியத்தையும் நேர்வழியையும் காட்டுபவன் என்பதுடன் மன்னிய தவத்தினர்க்கு அருள் தந்த குரு நீ, மாதா நீ, பிதா நீ, 'மட்டறு பவக்கடல் தொலைக்குமொரு கவிழா மரக்கலமும் நீ' எனவும் எல்லாமாகவும் பார்த்துப் பரவச மடைகிறார்.

அன்புடன் என்னைப் பெற்ற அப்பனும் அருள் தந்த ஆண்டவனு மான உன்னையன்றி என்னை ஆள்வார் எவர் ஐயனே, எந்தையே, எம்பிரானே! இம்மையிலும், மறுமையிலும் சுகதுக்கமற்று யான் ஈடேற அருள் புரிய வேண்டும் எனக் குணங்குடியார் மேலும் தம் குருவிடம் வேண்டுகிறார்.

தம் குருவிடம் அளப்பரிய பற்றும் தீராக் காதலும் கொண்டு விளங்குபவர்கள் உண்மையான சூஃபிகள். தம் குரு மீது எல்லையற்ற நம்பிக்கை கொண்டிருந்த போதும் ஏக இறைவனையும், அவனின் திருத்தூதர் நபிகளாரையும் உண்மையான சூஃபிகள் மறக்கமாட்டார்கள். அதனால்தான் குணங்குடியார் தம் குருவாயிலாக இறைவனையும், நபிகளாரையும் காண்கிறார்.

குரு இல்லாத நிலையில் ஒருவன் சீரும் சிறப்பும் பெற்று வாழ முடியாது. சீடர் தவறும் இடங்களில் குரு திருத்துவார். அதுபோல இறைவனாகிய குருவை மக்கள் சென்றடைந்தால் அவர்களும் நல்வழிப் படுத்தப்படுவர். இல்லாவிட்டால் நன்னெறிப்படுத்த ஆள் இல்லாமல் மனம் போன போக்கிற் சென்று அழிந்து போக நேரும். இதனை உணர்ந்த குணங்குடியார்,

> **குருவற்ற சீடன்என ஆகாத வண்ணம்நற்**
> **குணமேற்றி அருள்பு ரியவும்** *(அ.ச. 32)*

என வேண்டுகிறார்.

**போலி சூஃபிகள்**

இஸ்லாமியச் சட்டதிட்டங்களை முறைப்படிக் கடைப் பிடிக்கும் சூஃபிகள் தொழுகையை வலியுறுத்துகின்றனர். இவ்வாறு உணர்த்தாத குருமார்கள் போலியானவர்கள். தொழுகையின் இன்றியமையாமையை, 'தொழுதெழாப் பாவி' (மு.ச. 19), 'தொழுந்

துறைகளற்ற பாவி' (மு.ச.61) என்றெல்லாம் சுட்டிக் காட்டுகின்ற குணங்குடியார்,

**சந்யாச மென்றபொய் வேடந் தரித்தவர் (மு.ச. 51)**
**செபமாலை கைக்கொண்டு வாய்முணு முணுத்தும்உப**
**தேசிநா னென்ற வம்பன் (மு.ச. 51)**
**பீருநான் என்னவுப தேசங்கள் கூறிவிலை**
**பேசித் திரிந்த வம்பன் (மு.ச. 60)**
**ஏதமில் லாதகுரு அடிசென்னி மீதெடுத்து**
**ஏந்துவது மெக்கா லமோ (மு.ச. 89)**

என்னும் தொடர்களில் போலிக் குருமார்களை அடையாளம் காட்டு கிறார். அவர்களின் முகத்திரையையும் கிழித்தெறிகிறார்.

**வரிசை நபிக்கே முதலிடம்**

தம்முடைய குருநாதரைப் போற்றவும், போலிக் குருமார்களைத் தூற்றவும் செய்யும் குணங்குடியார் நபிகளாரை,

**நாதமுன் னிற்கவே நாதனொளி பெற்றநபி**
**நாயகம் முன்னிற் கவே (மு.ச. 1)**
**எங்கே யிருக்கினு மங்குவந் துதவிதரும்**
**எங்கள்மகு மூது மாகி (மு.ச. 30)**
**தூய மகுமூதுநபி பாதமல ரைச்சென்னி**
**சூட்டறிவுஇல் மோட்டு வம்பன் (மு.ச.60)**

என்றெல்லாம் பல பாடல்களில் புகழ்வதுடன், முகியித்தீன் சதகம் முழுவதும் 'வள்ளல் இறசூல் வருகவே' எனப் பாடி வரிசை நபிக்கே முதலிடம் தருகிறார்.

**மெய்த்தவம்**

ஸூஃபிகள் செய்யும் தவமும், துறவும் உண்மையானதாக இருக்கும். ஏனெனில் அவர்கள் எல்லாவற்றையும் துறந்தவர்கள். இருப்பினும் அவர்கள் தங்களை உலக ஆசாபாசங்கள் எதுவும் கெடுத்துவிடக் கூடாது என்பதற்காக முன்னெச்சரிக்கையாக இறைவனிடம் வேண்டுவர்.

**மெய்த்தவசு மூட்டவும் பொய்த்தவசை யோட்டவும்**
**மெய்ஞ்ஞான அருள்பு ரியவும் (அ.ச. 14)**

**பொய்யுலக வாழ்வுபிற ருக்கிடவும் எற்குமெய்ப்**
**பொருள்தந்து ளருள்பு ரியவும் (அ.ச. 30)**

எனக் குணங்குடியாரும் வேண்டுகிறார்.

**மெய்ஞ்ஞானம்**

சூஃபித்துவம் எனப்படும் இஸ்லாமிய மெய்ஞ்ஞான வழியில் செல்பவர், தாம் என்பதைக் குணங்குடியார் தம் பாடல்களில் பல இடங்களில் மீண்டும் மீண்டும் பதிவு செய்கிறார். 'கடல்மடை திறந்தென அருள்மடை திறந்தடிமை கண் குளிர்வதெக்காலமோ, கங்கற்ற பேரின்ப வெள்ளத்தின் மூழ்கியென் கலிதீர்வ தெக்கா லமோ' (மு.ச. 86) என்றெல்லாம் நினைந்து ஏங்கும் குணங்குடியார்,

**சொல்லுமெய்ஞ் ஞானச் சுகக்கடலை யுண்டியான்**
**சும்மா விருக்க வருள்வாய் (ஆநந்தப் பத்து. 7)**

எனத் தம் இறைவனிடம் இரந்து கேட்கிறார்.

**கட்டையைச் சுட்டுக் கருக்குமெய்ஞ் ஞானமாங்**
**கனல்மூட்டி யருள்பு ரியவும் (அ.ச. 22)**

**அஞ்ஞான மூடந் துறக்கவு மெய்ஞ்ஞான**
**ஆநந்த மருள்பு ரியவும் (அ.ச. 24)**

**கொள்ளிவைத்து உடலைக் கொளுத்துமுன் முச்சுடர்க்**
**கொள்ளிவைத் தருள்பு ரியவும் (அ.ச. 35)**

எனப் பல இடங்களில் இஸ்லாமிய மெய்ஞ்ஞான குருவான இறைவனிடமும் தம்மை ஆற்றுப்படுத்திய முகியித்தீன் எனும் குருவிடமும் மெய்ஞ்ஞானம் வேண்டுகிறார்.

**இலை உணவு**

சித்தர்களைப் போன்று இலை உணவு உண்ணும் வழக்கத்தை சூஃபியான குணங்குடியாரும் கொண்டிருந்தார். தம் நா இச்சைகளை அடக்கி இலை உணவு உண்ண அருள வேண்டும் என,

**இலைசருகு கந்தமூ லங்களால் என்கும்பி**
**எரியொழிவ தெக்கா லமோ (மு.ச. 88)**

**இலைசருகு பக்ஷணம் பண்ணிர காந்தமோடு**
**இருந்திடற் கருள்பு ரியவும் (அ.ச. 14)**

**காய்ந்தசரு கிலைபுனற் காய்கனிக ளுண்டுண்டு**
**காடுறைய வருள்பு ரியவும் (அ.ச. 22)**

எனும் பாடல்களில் தம் வேண்டுதலை முன்வைக்கிறார்.

**தன்னையறிதல்**

மெய்ஞ்ஞானத்தின் அடிப்படையும் முதல்நிலையும் 'தன்னையறிதல்' ஆகும். தன்னையறிந்தவன்தான் பேரின்பத்தின் இறுதி இலக்கான இறைவனை அடைய முடியும். அதனால் ஞானியர் தன்னையறிதலை உணர்த்துவர்.

**தன்னை யறிந்தால் தலைவன் தனையறிந்தது**
**என்னும் மொழியே இதங்காண் நிராமயமே (நிரா. 70)**

**தன்னை யறிந்தால் தனக்கொருகே டில்லைஎனச்**
**சொன்ன மொழியே சுகங்காண் நிராமயமே (நிரா. 109)**

**தன்னை யறிந்து தவம்புரியாத் தன்மையினாற்**
**கன்னெஞ்ச னானேனென் கண்ணே றகுமானே (றகு. கண்.96)**

எனத் தன்னை அறிதலை வலியுறுத்தும் குணங்குடியார், தாம் தன்னை அறிந்ததால்தான், தனிப்பெரும் இறைவனை அடைந்த தாகக் கூறுகிறார். இதனைக் கீர்த்தனையில்,

**என்னை அறிந்தேனே – இனி**
**ஏகாந்தமானேனே (18)**

என்று பாடுகிறார்.

**இறைவனே தாய் தந்தை**

இவ்வுலக வாழ்வு பொய்யானது; இங்கிருக்கும் உறவுகளும் நிரந்தர மானவையல்ல என்கிற எண்ணமுடைய சூஃபிகள் இவ்வுலகத்து உறவுகளையெல்லாம் இறைவன் மீது ஏற்றிக் கூறுகின்றனர். பேரின்ப உறவான இறைவனோடு இணைத்துப் பார்க்கின்றனர். இதனைக் கருத்தில் கொண்டு, 'தம்மைத் தழுவித் தற்காத்துச் சீராட்டிச் செல்வப்பால் கொடுத்துப் படுக்க வைக்க வரவேண்டும்' எனப் பரம்பொருளை வேண்டுகிறார்.

**தாயனைய இன்பந் தனைத்தந்து தந்துகை**
**தழுவிநின் றருள் புரியவும்**
**தந்தைதா யுந்தானே யாகவு மிருந்தெனைத்**
**தற்காத்து னருள்பு ரியவும்**

**சேயென் றிரங்கியணை காலியின் கன்றெனச்**
**சீராட அருள்பு ரியவும்**
**செங்கீரை யாடுசிறு மதலைபோற் கொஞ்சி நான்**
**செல்வமிட அருள்பு ரியவும்**
**பாயுமடை கால்கண்டு கரைபுரள வருமதிப்**
**பால்கொடுத் தருள்பு ரியவும்**
**பக்குவத் தோடுமவு னத்தொட்டி லுக்குட்**
**படுக்கவைத் தருள்பு ரியவும் (அ.ச. 1)**

*'தீப்பந்தத்தில் இட்ட மெழுகு போல உலக பந்தங்களில் கரைந்து நான் தவித்திடாமல் அருள்புரிய வேண்டும்' என்கிறார்.*

**பந்தமதி லிட்டமெழு கென்ன நெஞ்சுருகிப்**
**பதைத்திடா தருள்பு ரியவும் (அ.ச. 2)**

*இறைவன் தம்மை எப்படியெல்லாம் ஆதரிக்க வேண்டும் என்பதை,*

**தாயாயும் என்தந்தை தானாயும் நின்றுநீ**
**தானாக அருள்பு ரியவும் (அ.ச. 3)**
**கன்னலின் அமுதெனவு மின்பங்கொடுத்தெனது**
**கலிதீர்த்து னருள்பு ரியவும்**
**அன்னையே யுன்னையே நம்பினேன் ஆதரித்து**
**ஆட்கொண்டு னருள்பு ரியவும்**
**ஆருமெனை யாதரிப் பாரிலைப் பாரினில்**
**அதுவறிந் தருள்பு ரியவும் (அ.ச. 10)**

*என்று உருக்கமிக்க அடிகளில் குறிப்பிடுகிறார். 'ஆதரிப்பார் யாருமில்லை' என்பது உண்மையான ஆதரவு இறைவனே எனும் வெளிச்சத்தைத் தருகிறது. உண்மையான அன்னை, ஈடு இணையற்ற ஏகனே என்பதைக் குணங்குடியார் உணர்கிறார்.*

**தவம்**

*சூஃபிகளின் இறைவழிபாட்டில் இடம்பெறும் 'தவம்' என்பது இறை நினைவில் மூழ்கி இருத்தலாகும். தவமிருந்தால் மனத்தை ஒரு நிலைப்படுத்தி இறை நினைவில் மூழ்கலாம் என்பது இவர்களின் நம்பிக்கை. குணங்குடியாரும் இதே கருத்தினை யுடையவர் என்பதை,*

**மலைநுழைவு புக்கவும் மனவாசி சொக்கவும்**
**மாதவம் அருள்பு ரியவும் (அ.ச. 33)**

**முத்தனே நற்றவஞ் சித்திக்க வும்முத்தி**
**மோக்கமொன் றருள்பு ரியவும் (அ.ச.34)**
**என்றுமா தவமெய்தும் என்றிடையும் ஏழையேற்கு**
**இடையறா தருள்பு ரியவும் (அ.ச. 66)**
**நாவுருசி தேடுதற் காவிகெட்ட லையாது**
**நற்றவம தருள்பு ரியவும் (அ.ச. 78)**

எனும் அடிகளில் பதிவு செய்கிறார்.

**முத்தி**

முத்தி எனும் சொல் வீடுபேறு, மோட்சம், சொர்க்கம் எனும் பொருள்களில் வழங்கப்படுகிறது. முத்தி நிலையை அடைய வேண்டுமெனக் குணங்குடியார் விழைகிறார். அதை,

**சித்தம்வைத் தத்தனே சித்திதரு முத்திசித்**
**தித்திடற் கருள்பு ரியவும் (அ.ச. 23)**
**பத்திமார்க் கந்தரும் முத்திமோ கந்தரும்**
**பருவமொன் றருள்பு ரியவும் (அ.ச.24)**
**முத்தனே நற்றவஞ் சித்திக்க வும்முத்தி**
**மோக்கமொன் றருள்பு ரியவும் (அ.ச. 34)**
**முத்திக்கு வித்தாய் முளைத்தெழுஞ் சோதியும்**
**முதிர்ந்திடற் கருள்பு ரியவும் (அ.ச.70)**
**எத்தாத முத்திநெறி யேற்றவு மற்றெவையும்**
**எய்தாம லருள்பு ரியவும் (அ.ச.86)**

எனப் பல இடங்களில் வெளிப்படுத்துகிறார்.

**ஆசையை அறுத்தல்**

'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என உணர்ந்த புத்தர் ஆசையை விட்டொழிக்க வேண்டினார். ஸூஃபிகளும் இதே நிலைப் பாட்டைத்தான் கொண்டிருக்கின்றனர். ஆசை பெருகப் பெருக உயிருக்கு நேரும் துன்பங்களும் பெருகும். ஆசை குறையக் குறைய உயிருக்கு நேரும் துன்பமும் குறையும். ஆசையை விட்டொழிக்கும் போது துன்பமில்லாத இன்பநிலையைப் பெறலாம். இதனைக் குணங்குடியார் நயமாக எடுத்துரைக்கிறார்.

கடுமையான குளிர் காலத்தில் குளிருக்காக ஆடையை மிகுதிப் படுத்த மிகுதிப் படுத்த குளிரும் மிகுதியாக இருக்கும்.

ஆடையைக் குறைக்கக் குறைக்கக் குளிரும் குறையும். ஆடையை அறவே அகற்றினால் குளிரும் அறவே இருக்காது; குளிருக்கேற்ப உடல் பழகிக் கொள்ளும். இதனால் உடலுக்குப் பாதிப்பு ஏற்படுவதுமில்லை. அது போன்றே ஆசைகளைக் கடினமாக முயன்று அகற்ற வேண்டும். அவ்வாறு அகற்றினால் மாயையாகிய குளிரால் மனிதரை ஒன்றும் செய்ய இயலாது. அதேபோல் ஆசையை அறுத்தொழித்திட வேண்டும் என்னும் அற்புதமான தத்துவத்தைக் குணங்குடியார்,

**மெத்தத் துணிபோர்க்க மெத்தமெத் தக்குளிருஞ்**
**சற்றுதுணி போர்த்துவரச் சற்றுகுளிர் – இற்றதுணி**
**இல்லைக் குளிருமிலை யில்லையிது தாலுளமே**
**செல்லக் குணங்குடியார் சீர்** **(குறைமிரங்கி யுரைத்தல். 7)**

என்று எளிமையாகத் தெரிவிக்கிறார்.

ஆசைகளை விட்டொழித்த துறவிகளான சூஃபிகள் தங்களை எவ்வாசையும் தீண்டிவிடக் கூடாது என்பதில் கவனமாக இருக்கின்றனர். ஆசையின் கொடூர விளைவுகளைப் பேரழிவுக்கான உருவகங்களின் துணைகொண்டு நெஞ்சிற் பதியுமாறு எடுத்துரைக்கிறார் குணங்குடியார். ஆசைக் கடல் அலை, ஆசாபாச வலை, வெள்ளம் பெருக்கெடுத்த ஆறு, கரை காணாது திசைமாறி உழலும் கப்பல், காமக்கடல் புலால் என்னும் பூவை, கதகதவென எரியும் பணத்தீ, பட்டாடைகள் எனும் எமன்கை வலை - இவ்வுருவகங்கள் ஆசையை விலக்கி நீங்கும் சூஃபியின் கடுந்தவ முயற்சிகளைக் கூர்மையாகத் தெரிவிக்கின்றன.

**ஆசைக் கடலின் அலைவாய்ப்பட் டேயலைந்து**
**மோசப் படுதல் முறையோ நிராமயமே** **(நிரா. 245)**

**ஆசாப சாசவலை யுள்ளகப் படுவனோ**
**அல்லது வெளிப்ப படுவனோ**
**அகிலவாழ் வென்றிடும் ஆற்றில்வீழ்ந் திடுவனோ**
**அப்புறம் நடந்தி டுவனோ**
**காசாசை கொண்டுகதி கெட்டுநின் றிடுவனோ**
**கதியாசை கொண்டி டுவனோ**
**கரையற்ற கப்பலென் னக்கலங் கிடுவனோ**
**கரையேறி நின்றி டுவனோ** **(மு.ச. 36)**
**பொல்லாத காமக் கடற்புலா லென்னுமோர்**
**பூவைகைப் பட்டு ழல்வனோ**

**கதகதென் றெரியும் பணத்தீ மிதித்தெனது**
**கால்கொப்பு ளித்து உழல்வனோ**
**கட்டுபட் டாடைகள் எனும் நமன் கைவலைக்**
**கட்டுண்டு நின்று ழல்வனோ** (மு.ச.37)

*மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய எவ்வாசையும் தீண்டி விடக் கூடாது எனவும், ஆசைக் கடலைக் கடக்க வேண்டும் எனவும் தம் வேண்டுதலைத் தெளிவாக முன் வைக்கிறார்.*

**மண்ணாசை யேகவும் பெண்ணாசை வேகவும்**
**மண்ணாமு னருள்பு ரியவும்** (அ.ச.36)
**நஞ்சான மூவாசை நஞ்சாக வந்தேகம்**
**நையாது னருள்பு ரியவும்** (அ.ச. 37)

*பெண்ணாசை மட்டுமன்றிப் பிற ஆசைகளும் மனிதனை அலைக் கழிக்கின்றன. இறைவனை அடையத் தடையாகவும் அவை இருக் கின்றன என்பதைக் குணங்குடியார்,*

**காசை விரும்பிக் கலங்கிநின்று உன்பாத**
**ஆசை விரும்பாது அலைந்தேன்** (பரா.92)

*எனும் அடிகளில் சுட்டிக்காட்டுகிறார்.*

**பெண்ணாசை மறுப்பு**

*இஸ்லாமும் சூஃபித்துவமும் திருமணத்தைத் தடை செய்ய வில்லை. திருமணத்துடன் கூடிய துறவையே ஏராளமான சூஃபிகள் மேற்கொண்டிருந்தனர். ஆயினும் இறைவனை அடைவதற்குப் பெண்ணாசை தடையாக இருக்குமோ என்று கருதிய சூஃபிகள் பெண்ணாசையை மறுத்தனர். குணங்குடியாரும் தமிழ்நாட்டுச் சித்தர்களைப் போன்று பெண்ணாசையை வெறுத்த சூஃபியாவார். 'பெண்ணாசை யென்றபேய் கொண்டு செத்திடுவனோ, பேரின்ப முற்றிடுவனோ' (மு.ச. 38), 'ஐயோ எனக்கு உதவும் ஆதரவை விட்டு விட்டுத் தையலரைத் தேடித் தவித்தேன்' (7), 'மையான கண்ணியர் வலைக்குள் அகப்பட்ட மாபாவி தீபாவி யான்' (ஆநந்தப் பத்து. 4), 'கோலத் திருவடிவு கோதையர்கள் ஆசையினால் ஆலைக் கரும்புபோல் ஆனேன்' (28) என்றெல்லாம் ஆன்ம ஈடேற்றத்துக்குத் தடை என்று தாம் கருதும் பெண்ணாசைத் துயரங்களைப் பன்முறையும் பாடுகிறார். இன்னொரு பாடலில்*

*பெண்ணாசையால் வரும் பெருங்கேடுகளை,*

**நாடிக் குருவடி தேடி நடக்கின்ற**
**நற்செய லைக்கசப் பாக்குவாள் – எங்கும்**
**ஓடித் திரிந்தே யலைந்து பணங்கள்**
**ஒருக்காலே தேடென்று தாக்குவாள் – அவன்**
**தேடும் பொருள்தனைக் காணிலுமக்கெதிர்**
**தேசத்தி லாரென்று தூக்குவாள் – இன்னும்**
**ஆடென்றும் மாடென்றும் வீடென்றுந் தேடென்றும்**
**ஆண்டவனைமறப் பாக்குவாள் – பின்பு**
**ஈடொன் றிலாநினை வாக்குவாள் – அந்தக்**
**கேடிகளாசைவைத் தையை யோவையத்தில்**
**பெண்கொண்ட பேர்பட்ட பாட்டையும் கேட்டையும்**
**பேசுவோமே நெஞ்சமே (கீர்த். 3:3)**

*என்றும் பட்டியலிடுகின்றார்.*

*இதோடு நின்றுவிடவில்லை. இறையருளைப் பெறுவதற்குத் தடையாக இருக்கும் பெண்களைப் பழித்துப் பாடுவது மட்டுமன்றி ஆண்களின் குணங்களும் கடிந்து பேசப்படும் இடங்களும் இருக்கின்றன. இன்னொரு கீர்த்தனையில் ஆண்களால் பெண்களுக்கு வரும் கேடுகளையும் சுட்டிக்காட்டுகிறார். அதில் 'பொன்னாசை காட்டிப் புருடருமையொரு புண்யமுஞ் செய்யாமற் கெடுப்பர்'; 'பெண்ணாலே கெட்டோமென் றுங்களைத் திட்டாத பேரை யுலகத்திற் கண்டிலேன்' என்று ஆண்கள் பெண்களைத் திட்டுவதை எடுத்துரைக்கிறார். அதனால் 'தாய்மார்களே! பாவி சொல்வதைத்தான் சற்றுந் தள்ளாமற் கேட்டுக் கொள்வீர்' என்றும் வேண்டுகிறார்.*

**புதுப்பானை தன்னையுங் கரிப்பானை யாக்குவார்**
**பொன்னான மேனியும் போக்குவார் – சோதி**
**மதிப்போ லிவர்முகம் வறவோடு போலாக**
**வாலைப் பருவத்தைப் போக்குவார் – இன்னும்**
**முதுகிற் கூனுமாக்கிக் கோலுங்கை கொடுத்துங்கள்**
**மூர்க்கமெல்லா மறப் போக்குவார் – இவள்**
**கதிகெட்ட கிழநாரி யென்று புறந்திண்ணையிற்**
**கடத்திவைத் துயிரையும் போக்குவார் – அந்தச்**
**சதிகேட ருறவைத்தா னீக்கினால் – பர**
**கதிதரு குணங்குடி வாய்க்குமே (கீர்த். 19:3)**

என்ற கீர்த்தனையில் ஆண்களைச் சதிகேடர் என்கிறார். இவர்கள் உறவை நீக்கினால் தான் பெண்களுக்குக் குணங்குடி வாய்க்கும் எனவும் கூறுகிறார். பெண்களும் ஆன்மப் பயணம் செய்து இறைவனை அடைய வேண்டும் என்று தெளிவுறுத்தும் இக்கருத்து, ஞானத்துறவிகள் பலரும் சொல்லாத புதுக் கருத்தாகும். பெண்களுக்கும் சொர்க்கம் உண்டு எனக் குர்ஆன் உறுதியளித்திருப்பதை எதிரொலிக்கிறது இக்கருத்து.

**உறவுகளை வெறுத்தல்**

பெற்றோர் பிள்ளைகளும், உற்றார் உறவினரும் இவ்வுலக வாழ்விற்குத் தேவைப்படுகின்றனர். அதனால் மனிதன் இவ்வுறவுகளைப் பெரிதாகக் கருதுகிறான். இருந்த போதும் இந்த உறவுகளெல்லாம் பல வேளைகளில் துன்பம் தருகின்றன எனக் கூறும் குணங்குடியார், இறைவனை அடைய இவ்வுறவுகள் தடையாக இருக்கின்றன எனவும் நினைக்கிறார்.

> **உற்றாரை நம்பியிருந்து ஒருபலனும் காணாமல்**
> **செத்தால் எனக்குஅதுதான் சின்னம் பராபரமே** (பரா.86)
>
> **சாதி சனத்துடனே சார்ந்திருந்து பட்டதுயர்**
> **போதும்போ தும்போதும் போதும் பராபரமே** (பரா. 85)

என்று உறவுகளை வெறுக்கும் குணங்குடியார், உறவினர்களால் இறைவனைப் பிரிந்தேன் என மொழிவதை,

> **உற்றார்க ளாலும் உறவின்முறை யோராலும்**
> **பெற்றோர்க ளாலும்உனைப் பிரிந்தேன் பராபரமே** (பரா. 34)

என்பது புலப்படுத்துகிறது.

எல்லா ஆசைகளையும் களைவதற்கு அடிப்படையாக அமைவது புலனடக்கம். மனிதன் தூய்மையாவதற்கு ஆசையை அடக்குவதும், ஐம்புலனடக்கமும் அடிப்படையாகும். புலனடக்கத் திற்கு இறைவன் வழிகாட்ட வேண்டும் என,

> **அடக்கஅரி தாம்ஆய ஐம்பொறியைக் கட்டிப்**
> **படிக்கப் படிப்புஎனக்குப் பகராய் பராபரமே** (பரா.22)

எனும் கண்ணியில் வேண்டுகிறார்.

'புதல்வரெனும் முதலைகள் பிடித்துக் கடித்துப் புசிக்கக் கொடுத்து உழல்வனோ' (மு.ச. 37) என நினைந்து வருந்தும்

குணங்குடியார், பெண்ணென்னும் பேயும், பிள்ளைகளெனும் பேய்களும் தம்மை ஒருபோதும் அண்டி விடக் கூடாது என்பதை,

**பேயைப் பழித்தபெண் பேய்கொண்டிடார் கொண்ட**
**பேரொன்று மருள்பு ரியவும்**
**பிள்ளைக ளெனுங் கூளி பலகூளி யென்னைப்**
**பிடுங்கிடா தருள்பு ரியவும்** (அ.ச. 23)

என்று பதிவு செய்கிறார்.

பெற்றாரும் உற்றாரும் இறைவன் படைப்பே; மனிதனின் இவ்வுலகத் தேவைகளே எனினும் அவர்கள் மீது கொள்ளும் பற்று ஒருவனை இறைவனிடமிருந்து பிரித்துவிடக் கூடாது என்பதே குணங்குடியார் பாடல் உணர்த்தும் உட்பொருள். அவரது வெறுப்பு உண்மையில் உறவினர் மீதானதன்று; அவர்கள்பால் கொள்ளும் பற்றின் மீதானது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

**வஞ்சகம்**

சூஃபிகள் தம்முடைய சுயநலத்திற்காகப் பிறரை வஞ்சிக்கும் போக்கை வெறுக்கின்றனர். இயல்பான மனிதர்களான தங்களின் எண்ணம் இவ்வாறு சென்றுவிடக் கூடாது என்றும் இறைவனிடம் வேண்டுகின்றனர். இதனை,

**அகமகிழ்ந் திடவும்வஞ் சகம்அகன் றிடவுநின்**
**அகமுவந் தருள்பு ரியவும்** (அ.ச.5)

என்று குணங்குடியார் வெளிப்படுத்துகிறார்.

**விதி**

விதியை இஸ்லாம் நம்புகிறது. ஒவ்வொரு மனிதனுடைய தலை விதியும் முன்பே இறைவனால் நிர்ணயிக்கப்பட்டு விட்டது என்றும் கூறுகிறது. "அல்லாஹ்வின் கட்டளை (முன்பே) தீர்மானிக்கப்பெற்ற விதியாக இருக்கிறது" (33:28) என்று திருக்குர்ஆனும், "நீங்கள் (வாழ்க்கையில்) சந்திக்கவிருக்கின்ற அனைத்தையும் (ஏற்கனவே) எழுதியாயிற்று. அவற்றை எழுதிய எழுதுகோலும் கூடக் காய்ந்துவிட்டது" (நபிகளாரின் பொன் மொழிகள், ஸஹீஹுல் புகாரி, இரண்டாம் பாகம், ப.40) நவில்கின்றன. இஸ்லாம் சுட்டும் விதிக் கோட்பாட்டை சூஃபிகளும் வழிமொழிகின்றனர். விதி வசத்தால் தாம் அடைய நினைக்கும்

இறைவனோடு ஒன்றிணையும் இறுதி இலக்குக்கு இடையூறு நேர்ந்து விடுமோ என்று அஞ்சிக் குணங்குடியாரும்,

**எந்தலையி லிட்டவிதி யென்னமோ வென்னநான்**
**இடையாம லருள்பு ரியவும்** (அ.ச. 2)

என்று தீப்பேற்றிலிருந்து தம்மைக் காக்க வேண்டுகிறார்.

**கத்திக்கத் திப்பாவி செத்திடச் செய்யுமோ**
**கத்தன் திருவருள் பெற்றிடச் செய்யுமோ**
**கொத்தும்பெண் ணரவெனைக் கொத்திடச் செய்யுமோ**
**குணங்குடி வாழ்க்கைவந் தெய்திடச் செய்யுமோ**
**செத்த பிணத்தோடு சேர்ந்திடச் செய்யுமோ**
**சித்தர் கணத்தோடு சார்ந்திடச் செய்யுமோ**
**மெத்தப் பணந்தேடி மாய்ந்திடச் செய்யுமோ**
**மேலைக் குணங்குடி வாய்ந்திடச் செய்யுமோ**
**ஏதேது செய்திடுமோ பாவிவிதி ஏதேது செய்திடுமோ** (கீர்த். 12)

எனக் கீர்த்தனைப் பாடலில் விதியின் ஆற்றலைக் குறித்துப் பலவாறு எண்ணிப் பார்க்கிறார்.

**நிலையாமை**

இளமை, யாக்கை, செல்வம் ஆகியவை நிலையற்றவை. இந்த உலகம் பொய்யானது; மாயையானது; நிலையற்றது. நிலையற்ற உலகத்தை நிலையானது என நினைத்து மனிதர் வாழ்கின்றனர். சூஃபிகளும் சித்தர்களும் இத்தகைய எண்ணமுடையவர் அல்லர். குணங்குடியாரும் இத்தகைய எண்ணங்களுக்கு அப்பாற்பட்டவர். இதனை அவர் தம் பாடல்களில் பல இடங்களில் பதிவு செய்கிறார்.

உறக்கத்தில் இவ்வுடல் இறந்து விடுகிறது. அத்தகைய உடலை, தாம் உண்மையானது என எண்ணி இருந்ததாகவும், கனவிலும்கூட இந்த உடல் நிலையற்றது என்பதை அறியாத அறிவீனத்தில் இருந்ததாகவும்,

**நித்திரை தனிற்செத்த பொய்யான மெய்யுடலை**
**நிலையமென் றிடுவ தல்லால்**
**நிலையாத காயமென் றெண்ணவோர் கனவிலும்**
**நிசமாக யான றிகிலேன்** (ஆநந்தப் பத்து. 9)

எனும் பாடலில் தெரிவிக்கிறார்.

**அய்யோ உலகி லழியா வரம்பெற்று யார்இருந்தார்**
**அய்யா உனக்கந்த ஆதர வென்அதி லாசைஎன்னோ**
**பொய்யான வாழ்வும் புலையாட்டு நம்பும் புதர்அலர்க்கும்**
**ஒய்யார முள்ள குணங்குடி யார்க்கும் உறவில்லையே**

*(தவமேபெற வேண்டுமெனல். 6)*

என்ற இப்பாடலில் அழியா வரம் பெற்று இவ்வுலகுக்கு வந்து நிலையாக இருந்தவர்கள் எவருமிலர். இவ்வாழ்வு பொய்யானது. இதனை 'மெய் என்று நம்பி வாழும் மனிதர்க்கும், மெய்யான குணங்குடியார்க்கும் உறவில்லை' எனக் குணங்குடியார் தம் கருத்தினை அழுத்தமாகத் தெரிவிக்கிறார்.

உயர்ந்த உணவு வகையெல்லாம் ஊட்டி வளர்த்த உடலைப் பேணிக்காக்கும்பொருட்டு வாசனைத் திரவியங்கள் எல்லாம் பாகமுடன் பூசிப் பரிபக்குவப் படுத்தி இவ்வுலகில் உலவ விட்டாலும் இறுதியில் நாற்றமெடுத்த இந்த உடல், நாய்க்கிரையாகுமோ, காகங்களுக்கிரை யாகுமோ எனக் குணங் குடியார் கவலைப்படுகிறார்.

**பாக முடன்வளர்த்த பாழுடல்தான் நாய்க்கிரையோ**
**காகங் களுக்கிரையோ கண்ணே றகுமானே (றகு. 18)**

எனும் அடிகளில் இவ்வாழ்வு நிலையற்றது; அழியக்கூடியது என்பதைச் சிறப்பாக எடுத்தியம்புகிறார்.

'சூத்திரப்பாவை' என்று தொடங்கும் கீர்த்தனைப் பாடலில் மனிதனின் வாழ்வு நிலையற்றது என்பதையும், எந்த நேரத்திலும் உடலை விட்டு உயிர் பிரிந்து செல்லும் இயல்புடையது என்பதையும் தெளிவாகச் சுட்டிக்காட்டுகிறார்.

'பாவைக் கயிறு' என்பது பொம்மையில் கட்டப்பட்டிருக்கும் கயிறு. பொம்மலாட்டக்காரன் விளக்கு வெளிச்சத்தைக் காட்டித் தன் கையில் உள்ள பொம்மைகளைக் காட்சிக்கு ஏற்றபடி அக் கயிறு மூலம் ஆட்டி அசைத்து வேடிக்கை காட்டுவான். அப்போது பொம்மையில் கட்டப் பட்டிருக்கும் கயிறு அறுந்துவிடாமல் கவனமாகப் பார்த்துக் கொண்டே இருப்பான்.

உடம்பாகிய தோற் பாவையை இறைவன் உயிர் (ரூகூ) என்னும் கயிற்றால் ஆட்டுகிறான். அந்தக் கயிறு அறுந்து பட்டால் இவ்வுடலில் இருந்து உயிர் சென்று விடும். இவ்வாறு உடலை விட்டு உயிர் பிரிந்து செல்லும்முன் இறைவனைப் பற்றிப்

*பிடித்துக் கொள்வதற்காக சூட்சக் கயிற்றின் மீது கவனம் காட்ட வேண்டுமென்னும் பொருளில்,*

**சூத்திரப் பாவைக் கயிற்று வீழுமுன்**
**சூட்சக் கயிற்றினைப் பாரடா – அதி**
**சூட்சக் கயிற்றினைப் பாரடா (கீர்த். 6)**

*எனும் பல்லவியில் குணங்குடியார் அறிவுறுத்துகிறார். இக்கீர்த்தனையின் சரணங்களில் உலக வாழ்வு நிலையற்றது என்பதையும், எமன் வரும்போது இவ்வுலகத்துப் பொருள்களெல்லாம் வந்து உதவாது என்பதையும்,*

**மாத்திரைப் போது மெமன்வரு மப்போது**
**மற்றொன் றுதவா துதவா துதவாது (கீர்த். 6:1)**
**உற்றுற வின்முறை யார்சூழ்ந் திருந்தென்ன**
**ஊருட் சனங்களெல் லாரும் பணிந்தென்ன**
**பெற்றாரும் பெண்டீரும் பிள்ளை யிருந்தென்ன**
**பேணும் பெருஞ்செல்வ ஆணவத் தாலென்ன**
**கத்தன் பிரிந்திடிற் செத்த சவமாச்சு**
**காணாது காணாது கண்டதெல் லாம்போச்சு**
**எத்தனை பேர்நின்று கூக்குர லிட்டாலும்**
**எட்டாமற் போய்விடுங் கட்டையல் லோ (கீர்த். 6:2)**

*என உணர்த்துகிறார்.*

**ஆணவம்**

*மனிதன் தன்னைப் பெரிதாக நினைத்துக்கொண்டு பிறரைத் தாழ்வாகக் கருதி நடத்துதலே ஆணவமாகும். இது நல்ல செயல் அல்ல. இதனை, "பூமியில் செருக்காக நடக்காதீர்கள். ஏனெனில், உம்மால் பூமியைப் பிளந்து விட முடியாது; மலையளவுக்கு உயர்ந்து விடவும் முடியாது" (17:37) என்று திருக்குர்ஆனும், "ஆணவம் என்பது உண்மையை மறுப்பதும் பிறரை இழிவாக எண்ணுவதும் ஆகும்" (நூல்: முஸ்லிம்) என்று நபிமொழியும் விளக்கமளிக்கின்றன. 'மரணம் வருவதற்கு முன் மரணித்து விடுங்கள்' என்பதும் இன்னொரு நபி மொழி. சூஃபிகளின் கோட்பாடுகளுள் 'ஒவ்வொருவரும் மனதிற்கு உள் இருக்கும் 'நான்' என்னும் ஆணவத்தை அழிக்க வேண்டும்' என்பதும் ஒன்றாகும். இதனைக் குணங்குடியார் தம் பாடல்களில் மீண்டும் மீண்டும் குறிப்பிடுகிறார். 'எனது, யான் என்பதை இடம், பொருள், ஏவல் முதல் ஈடழிப்பது சமாதி' (மு.ச. 47) என்கிறார். 'நாசச்*

*சரீரத்தை நான் நான் எனக் குளறும் நாசம் பிடித்த பாவி' (மு.ச. 63) என்று திட்டுவதுடன், 'மெய்யாக நான் நான் எனக் குளறும் வெட்கந் தனக்க மூவனோ' (மு.ச. 77) என்று அழவும் செய்கிறார்.*

**என்னைப் பழித்தநான் என்பதனை யென்னைவிட்டு**
**எடுத்தெறிய வருள்பு ரியவும் (அ.ச. 29)**
**தான்செத் திருந்துலக முழுதுமர சாளுமோர்**
**தத்துவ மருள்பு ரியவும்**
**தான்சாக வும்மருந்து உண்பாரி யாரியான்**
**தான்சாக வருள்பு ரியவும்**
**நான்சாமுன் நான்சாக நாடினேன் நான்சாமுன்**
**நான்சாக வருள்பு ரியவும்**
**நான்வருமுன் நான்சாக நாள்வந்து நான்சாக**
**நாள்வருமு னருள்பு ரியவும் (அ.ச.93)**
**நானாக நின்றநான் நானாக நின்றுநான்**
**நானாக வருள்பு ரியவும் (அ.ச. 96)**
**நான்சாமு னான்செத்து நாடோறு முன்சமுகம்**
**நான்சார வருள்பு ரியவும் (அ.ச. 100)**

*எனும் தொடர்களில் 'நான்' என்கின்ற ஆணவத்தை மனிதன் உயிருடன் இருக்கும் போதே அழிக்க வேண்டும் என்றும் அதற்கு அருள் புரிய வேண்டும் என்றும் வேண்டுகிறார். 'நான்' அற்ற ஒரு நான் ஆக வேண்டும் எனும் சொற்களை ஞானியின் தளத்தில் நின்று புரிந்து கொள்ள வேண்டும்.*

**வெறிநாயைக் கைப்பிடித்து காட்டிற் புகலாமோ!**

*இதயம் திறக்கவும் எதையும் துறக்கவும் ஏகாந்தம் அருள் புரியவேண்டும் குணங்குடியார்,*

**வேட்டை பெரிதென்றே வெறிநாயைக் கைப்பிடித்துக்**
**காட்டிற் புகலாமோ கண்ணே றகுமானே (றகு. கண். 22)**

*எனும் கண்ணியில் அருமையாக ஞானக் கருத்தினைப் பதிவு செய்கிறார்.*

*வேட்டைக்குச் செல்வோர் தம்முடன் வேட்டை நாயைக் கொண்டு செல்லலாம். மாறாக வெறிநாயைக் கொண்டு செல்லக் கூடாது. வெறிநாய், கொண்டு செல்பவன் மீதே பாய்ந்து விடும். அதே போல் மனிதர்கள் இறையருளைப் பெறுவதற்கு அன்பு, உண்மை, நேர்மை, மெய்த்தவம், அருள், தொண்டு ஆகிய அரும் பண்புகளை*

இணையச் செய்யாமல், அழுக்காறு, ஆசை, வெகுளி, ஆணவம் என்னும் ஐம்புலன்களின் வழி வரும் வெறிக் குணங்களுக்கு இடமளித்து, வெறி நாயைக் கொண்டு வேட்டைமேற் செல்வார் போலச் சென்று தம்மையே அழித்துக் கொள்கிறார்களே என்று குணங்குடியார் இத்தொடரில் வெளிப்படையாகக் கூறுகிறார்.

**தடுத்தாள வேண்டல்**

எந்தச் சூழலிலும் தாங்கள் வழிகேட்டில் சென்றுவிடக் கூடாது என்பதில் சூஃபிகள் உறுதியாக இருக்கின்றனர். தங்கள் பாவங்களை விலக்கி, அரவணைத்து அருகில் வைத்துக் கொள்ள வேண்டும் எனச் சூஃபிகள் வேண்டுகின்றனர். இதனைக் குணங் குடியார்,

**திக்கற்ற பாவியைப் பக்கத்தில் வைத்துரட்**
**சித்துநல் லருள்பு ரியவும்** (அ.ச. 8)
**பாவியடி யேன்செய்த பாவங்க ளெல்லாம்**
**பறந்தோட அருள்பு ரியவும்** (அ.ச. 13)
**தீராத வல்வினைகள் தீர்ந்துதிரு வடியினிற்**
**சேர்ந்திடற் கருள்பு ரியவும்** (அ.ச. 22)
**நம்பினே னையனே நட்டாற்றி லென்னைக்கை**
**நழுவிடா தருள்பு ரியவும்** (அ.ச. 13)

என்னும் பாடல்களில் புலப்படுத்துகிறார்.

அகத்தீசன் சதகத்தில் பக்தி நலம் மிளிரப் பாடியுள்ள குணங் குடியார் அதில் உலகில் உள்ள மனிதரும், பிற பொருள்களும் தமக்கு உதவாத நிலையைப் பதிவு செய்கிறார். இறைவனின் அருள் ஒன்றையே உறுதுணையாக நினைத்துக் கொண்டு,

**காகமாய் நின்றுகத றிக்கதறி யழுமெனைக்**
**கையணைத் தருள்பு ரியவும்** (அ.ச. 9)

எனும் அடிகளில் தம்மைக் கதறிக்கதறி அழுகின்ற காகத்தோடு, ஒப்புமைப் படுத்தி உரைக்கின்றார்.

அந்தக் காகம் எது என்பதையும், அது கதறிக் கதறி அழுவதற் கான காரணத்தையும் குணங்குடியார் இன்னொரு பாடலில் எடுத்துரைக்கிறார்.

ஒரு நள்ளிரவு; கும்மிருட்டு; ஆர்ப்பரித்துப் பொங்கும் அலை கடலில் மழை போல் பனிபெய்கிறது. அந்த அலை கடலில்

அலை கின்ற நெஞ்சின் சலன எண்ணங்களைப் போன்று ஆடி ஆடிச் செல் கின்றது ஒரு பாய்மரக்கப்பல். அக்கப்பல் மாலையில் கரையை விட்டுப் புறப்பட்டு இப்போது கண்களுக்கெட்டாத தொலைவில் அசைந்து அசைந்து செல்கின்றது. அந்தக் கப்பலில் இருந்த கம்பத்தில் குளிர் தாள இயலாமல் நடுங்கிய நிலையில் காகம் ஒன்று பரிதாபமாக அமர்ந்திருக்கிறது. அக்காகத்தைக் கப்பலின் மாலுமி அடித்து விரட்டினான். அச்சத்தோடு அக்காகம் அங்கிருந்து விரைந்து பறந்தது; எங்குப் பார்த்தாலும் இருள்; கண்கள் தெரியவில்லை; வெருண்டு கரைந்தவாறு எங்கெங்கோ குளிரில் நடுங்கிய வண்ணம் அக்காகம் அலைந்து திரிந்து கொண்டே இருக்கிறது. இதனைத் தான் குணங் குடியார்,

> **ஏகப் பெருவெளியில் இருட்கடலில் கம்பமற்ற**
> **காகம் அதுவானேன் கண்ணே றகுமானே!** (றகு. கண். 7)

என்று பாடுகிறார். அந்தக் காகத்தின் அவல நிலையைப் போன்று தான் இவ்வுலகில் தாமும் கரைசேர இயலாமல் கண்ணீரில் மல்கி நிற்ப தாகவும், இது போன்று தான் மனித உயிர்களும் நிற்கின்றன என்றும் இயம்புகிறார்.

இவ்வுலகமாகிய கடலில் இருந்து உயிராகிய காகம் கரையேறு வதற்கு இறைவன் அருள்பாலிக்க வேண்டும் என்னும் பொருளில் குணங்குடியார்,

> **காகமாய் நின்றுகத றிக்கதறி யழுமெனைக்**
> **கையணைத் தருள்பு ரியவும்** (அ.ச. 9)

என நெஞ்சுருகிக் குறிப்பிடுகிறார். இச்சிந்தனை குலசேகர ஆழ்வாரின் பெருமாள் திருமொழியில் முன்பே வந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

> **வெங்கண் திண் களிறடர்த்தாய்! விற்றுவக்கோட்டம்மானே!**
> **எங்குப்போய் உய்கேன்உன் னிணையடியே யடையலல்லால்**
> **எங்கும்போய்க் கரைகாணா தெறிகடல்வாய் மீண்டேயும்**
> **வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே** *(ஐந்தாம்*
> *திருமொழி. 5)*

என்ற பாடலில் 'வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே' என்று வெளிப்படுகிறது.

**நாயக நாயகி பாவம்**

இறைவனை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் கருதிப் பாடுவது பக்தி இலக்கிய மரபு. ஆனால் சூஃபிகள் இறைவனை நாயகியாகவும் தம்மை நாயகனாகவும் கருதுவர். இது மௌலானா ஜலால் தீன் ரூமி, உமர்கய்யாம் ஆகியோரின் பாடல்களில் வெளிப்படுகின்றது. தமிழ் இலக்கியத்தில் முதன் முறையாக நாயக நாயகி பாவத்தில் இறைவனைப் பெண்ணாகக் கருதி மடைமாற்றம் செய்து பாடியவர் குணங்குடியாரே என்பது குறிப்பிடத்தக்கது. இவருக்குப் பின்னர்தான் மகாகவி பாரதியார் கண்ணனைக் காதலியாகவும் தன்னைக் காதலனாகவும் கருதிப் பாடுகிறார். இருப்பினும் சித்தர் பாடல்களில் இறைவனை 'வாலை' என்றும், 'மனோன்மணி' என்றும் அழைக்கும் மரபு இருந்திருக்கிறது. இச்சொற்களைப் பாரதியும் பயன்படுத்துகிறார்.

**எனக்குமுன்னே சித்தர்பல ரிருந்தா ரப்பா**
**யானும்வந்தே னொருசித்த னிந்த நாட்டில்**
**மனத்தினிலே நின்றிதனை யெழுது கின்றாள்**
**மனோன் மணியென் மாசக்தி வையத்தேவி**

என்ற பாடலில் 'மனோன்மணி' எனும் சொல்லை ஆள்கிறார்.

"சைவ நெறியில் இறைவனை அடையும் மார்க்கங்களாகச் சன் மார்க்கம், சகமார்க்கம், சத்புத்திர மார்க்கம், தாசமார்க்கம் என நான்கைக் கூறுவர். இம்முறையில் 'சூஃபித்துவம்' நாயக மார்க்கமாகும்" (குணங் குடியார் பாடற்கோவை, ப. xiii) எனக் கூறும் அப்துல் ரகுமான் இறைவனைப் பெண்ணாகக் கருதுவதற்குரிய காரணத்தையும், "சூஃபிகள் பரம்பொருளைப் பெண்ணாகப் பாவிப்பதற்குப் பல காரணங்கள் உள. அழகு என்பது பரிபூரணம்; தெய்வீகப் பண்புகளின் வெளிப்பாடு. அழகின் உச்ச அளவு பெண்ணிடமே அமைந்திருக்கிறது. மேலும் பெண்மை படைக்கும் ஆற்றல் பெற்றது. தன் அழகால் ஈர்த்துக் காதல் கிளர்ச்சியைத் தூண்டி இணைப்புக்குத் துடிக்க வைப்பது. ஆண்மை கவரப்படுவது; ஏங்குவது; துடிப்பது; காதலை வெளிப்படுத்துவது. இதனால் சூஃபிகள் இறைவனைக் காதலியாகப் பாவித்தே பாடுவர். காதல் மற்ற உறவுகளையும் உதறச் செய்யும் பேருணர்வு; தியாகம் செய்யத் தூண்டும் புனித உணர்வு. இறைவனிடம் தொடர்பு கொள்ள இதைவிடச் சிறந்த உறவு வேறென்ன இருக்க முடியும்?" (குணங்குடியார் பாடற்கோவை, ப. xiv) எனக் கூறுகிறார். குணங்குடியாரும் இந்த சூஃபிகளின்

நெறிமுறைப் படியே பாடுகிறார்.

**வேதாந்த வேதமெல்லாம் விட்டேறியே கடந்து**
**காதலித்து நின்றேனென் கண்ணே றகுமானே (88)**

என்று றகுமான் கண்ணியில் பாடும் குணங்குடியார் இறைவனைக் 'கட்டழகி' என்கிறார். 'கண்ணாட்டி' என்றும் மகிழ்வோடு விளிக்கிறார். 'மனோன்மணிக் கண்ணி' முழுமையுமே இறைவனைக் காதலியாகப் பாவித்து நாயகநாயகி பாவனையில் பாடுகிறார்.

'மனோன்மணி' என்னும் சொல் 'மனத்துக்கு உகந்த மணி' எனும் பொருளில் எல்லாம் வல்ல ஏக இறைவனையே குறிக்கிறது. ஆழ்ந்த அன்பு கொண்டு இறையாகிய காதலி மனோன்மணியுடன் குணங்குடியார் ஒன்றிணைந்து விடுகிறார்.

'நாட்டியப் பெண்கள் நர்த்தனம் ஆடிக்கொண்டிருக்க நான் உன்னைப் பிரியா மணம் புணர, என் கண்கள் உறங்காத கனவு கண்டேன்' என்கிறார். மெய் தழுவவும் இருவர் மெய்யோடு மெய் நெருங்கவும் கைதழுவவும் கனவு கண்டதாகவும் கூறுகிறார். தம்மையும் மீறிக் 'கண்ணே, என் கண்மணியே, கண் குளிர்ந்த கட்டழகுப் பெண்ணே, அமிர்தப் பிழம்பே, பெண்ணே, மயிலினமே, பேரனமே' என்றெல்லாம் அழைத்து மகிழும் குணங்குடியார், 'கூந்தலுக்கு நெய் தோய்த்துக் குளிர் மஞ்சள் நீராட்டிச் சிங்காரித்து வைப்பேன்' என்பதுடன் 'கட்டு ஆடை வர்க்கம், பட்டு ஆடை வர்க்கம், தங்கக் கொலுசு, சிலம்பு, தண்டை, ரத்ன பாடகம' ஆகியனவும் வாங்கி வந்து அலங்கரித்து அகங்களிப்பேன்; 'உன் சன்னிதானத்தில் சுவர்ண மலர் தூவிச் சரணம் சரணம் எனத் தொழுது கற்பூரம் ஏற்றி ஆரத்தி எடுத்து முக்காலமும் பூசை செய்து எக்காலமும் பொங்கல் இடுவேன்.'

**சாதந்தளி கைசமைத்துச் சாம்பிராணித் தூபமிட்டுப்**
**பாதந் தொழுதிட்டுப் படைப்பேன் மனோன்மணியே (34)**

**பச்சைப் பருப்புமுதல் பருப்பிற்பத்து வகைகடைவேன்**
**வச்சநறு நெய்உருக்கி வார்ப்பேன் மனோன்மணியே (35)**

**முட்டை பொரிப்பேன் முழுக்கோழி யும்பொரிப்பேன்**
**தட்டைப் பிங்கானில் தருவேன் மனோன்மணியே (36)**

**ஆட்டுக் கறியுங்கொள்வேன் அதிலனந்தம் வகைசமைப்பேன்**
**கூட்டுக் கறியும்பண்ணிக் கொடுப்பேன் மனோன்மணியே (37)**

**குட்டிக் கறிதானுங் குழம்புபண்ணித் தாளித்தோர்**
**சட்டிக் கறியேனுந் தருவேன் மனோன்மணியே (38)**

எனப் பரவசநிலையில் குணங்குடியார் உயர்ந்தன படைக்கிறார்.

இவ்வாறு படைப்பதன் நோக்கம் தாம் விரும்பும் உயர்ந்த உணவு வகைகளையெல்லாம் தாம் விரும்புவோருக்குப் படைத்து அவர்களின் அன்பைப் பெற விழைவதைப் போன்று இறைவன் விரும்புவனவற்றை யெல்லாம் இறைவனுக்குப் படைத்து அதன் மூலமாக அவன் அன்பையும் அருளையும் பெற்றுத் தம்மை இறைவனில் ஒன்றிணையச் செய்தலே யாகும். உலகத்துப் பொருளில் இருந்து தான் விடுபட்டு 'பனாபில் பகா' எனும் 'அழியாப் பரம் பொருளில் தான் அழிந்து விடுவது' என்கின்ற சூஃபிகளின் குறிக்கோளையே இது நிலை நாட்டுகிறது.

இறைவனை அடைவதற்குப் பல்வேறு வணக்க வழிபாட்டு முறைகள் இருக்கின்றன. தொழுகையில் பல்வேறு வகைத் தொழுகைகள் இருக்கின்றன. இவற்றையெல்லாம் குணங்குடியார் உணவு வகைகளாக உருவகப்படுத்துகிறார்.

'சாதந் தளிகை சமைத்து, பச்சைப் பருப்பு முதல் பருப்பிற் பத்து வகை கடைவேன், வச்ச நறு நெய்யுருக்கி வார்ப்பேன், முட்டை பொரிப்பேன், முழுக் கோழியும் பொரிப்பேன், தட்டைப் பீங்கானில் தருவேன், ஆட்டுக் கறியும் கொள்வேன் அதில் அனந்தம் வகை சமைப்பேன், கூட்டுக் கறியும் பண்ணிக் கொடுப்பேன், குட்டிக் கறியேனும் சட்டிக் கறியேனும் குழம்பு பண்ணித் தாளித்துத் தருவேன்' என்றெல்லாம் குணங்குடியார் பாடுவது பல்வேறு இறை வணக்க வழிபாட்டு முறைகளைக் குறியீட்டு முறையில் குறிப்பதாகும்.

'தூய்மையான தட்டைப் பீங்கான் போன்று தம் உடலை இறைவணக்கத்திற்காகச் சுத்தம் செய்து முட்டை போன்ற உலகம் முழுவதையுமே உலகியல் முழுவதையுமே முழுக்கோழி போன்ற தம் உடல் மூலமாகத் துறந்து படைப்பேன்' என்கிறார். முழுக் கோழியைப் பொரிப்பது என்பதற்கு நாஇச்சைகளை அடக்கி மோன நிலையில் இருப்பதைக் குறிப்பதாகவும் பொருள் கொள்ளலாம். குஞ்சு முட்டைக்குள் அடங்கி ஒடுங்கி அசைவற்றுக் கிடப்பதைப் போன்று ஐம்பொறிகளும் செயலற்று இறைவன்பால் ஒடுங்க வேண்டும் எனக் குணங்குடியார் குறிப்பிடுகிறார். இதனையே அவர் 'தூங்காமல் தூங்குதல்' என்கிறார்.

"முட்டை முந்தியதோ, கோழி முந்தியதோ என்ற வாதம் இறைவன் உண்டு என்பதையும் அவன் படைப்பு ஆற்றலையும் மெய்ப்பிக்கும். வாழ்வின் தொடக்கம் முதல் முடிவுவரை

யாவற்றையும் இறைச் சன்னி தானத்து ஒப்படைத்துத் தன்னையே ஐக்கியப் படுத்திக் கொள்ளும் முனைப்பை, முட்டை - கோழி எனும் குறியீட்டால் மஸ்தான் சாகிப் உணர்த்துகிறார்" என்பார் எஸ்.எம்.சுலைமான் (உ.அலிபாவா, ஞானக் கடல் குணங்குடியார், பக். 263-264).

ஆடுகின்ற கறி தான் மனித உடம்பு. அதையே ஆட்டுக் கறி என்கிறார். 'ஆட்டுக் கறி போன்ற தம் உடம்பின் வாயிலாக அனந்தம் (பல) வகைத் தொழுகை முதலான பல வகை வணக்க வழிபாடுகளைத் தனியாகவோ பலரோடு இணைந்து கூட்டாகவோ செய்வேன்' எனும் குறிப்பை அந்த உணவுப் படையல்கள் புலப்படுத்துகின்றன. இது தனியாக ஒவ்வொருவரும் தொழும் தனித் தொழுகையையும், பலரோடு இணைந்து கூட்டாகத் தொழும் ஜமாத் தொழுகையையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

குணங்குடியார் இறைவனில் ஒன்ற நினைந்து சிறு தொழுகையும் தொழுவார். சில நேரங்களில் தம்மை மறந்து பல நாட்கள் இடை விடாமல் தொழும் வழக்கத்தையும் கொண்டிருந்தார். இதனையே அவர் 'குட்டிக் கறி தானும் தருவேன், குழம்பு பண்ணித் தாளித்தோர் சட்டிக் கறியேனும் தருவேன்' எனக் கூறுகிறார். இப்பகுதியில் குணங்குடியார் உடல், பொருள், ஆவி வழி செலுத்துகிற அத்தனை வணக்க வழிபாடுகளையும் இறைவனில் கலக்கும் பொருட்டுச் செய்வேன் என்கிறார்.

**அடிக்குஆயி ரம்பொன்விலை யானாலும் ஈந்துகுணங்**
**குடிக்குள்மா ளிகைகட்டிக் கொடுப்பேன் மனோன்மணியே (40)**

என மனோன்மணியிடம் வாக்குறுதியளிக்கிறார்.

குணங்கள் குடி இருக்கும் மனதிற்குள் மனமாளிகை கட்டுவதாகக் குணங்குடியார் சிலேடைப் பொருளில் பாடுகிறார். 'அம்மாளிகைக்கு மாணிக்க விளக்கு வைப்பேன் என்கிறார். மணி மண்டபம் அமைப்பேன், சிங்காசன மேடை அமைப்பேன், பாதத்தில் வீழ்ந்து பணிவேன்' எனப் பலவாறு பரவும் குணங்குடியார்,

**என்னைவிட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ உன்றனுக்கே**
**உன்னைவிட்டால் பெண்ணெனக்கும் உண்டோ மனோன்மணியே (73)**

என்று மனோன்மணியிடம் கேட்கிறார்.

உனக்கு என்னைவிட்டால் எத்தனையோ மாப்பிள்ளைமார் உண்டு; ஆனால், எனக்கோ, உன்னை விட்டால் வேறு பெண்

உண்டோ என்பதன் உட்பொருள், 'இறைவனுக்கு எத்தனையோ பக்தர்கள் இருப்பார்கள்; ஆனால் மனிதனுக்கு இறைவன் ஒருவன் மட்டும் தான் இருக்கிறான்' என்பதாகும்.

இதில் தம்முடைய இஸ்லாத்தின் உயிர்க்கோட்பாடான ஓரிறைக் கோட்பாட்டின் உட்பொருளையே எளிதாக உரைத்து விடுகிறார்; தம்முடைய ஏகதெய்வக் கொள்கையையும் உறுதிப் படுத்திவிடுகிறார்.

தம்மை ஈன்றெடுத்த பரம்பொருளைத் தாய் எனக் குறிப்பிடும் குணங்குடியார் நந்தீஸ்வரக் கண்ணியில் அந்தப் பரம்பொருளைத் தமக்கு மணம் முடித்துத் தர வேண்டும் என்னும் பொருளில்,

**மாயை மணமுடித்து மயக்காது எனையீன்ற**
**தாயை மணமுடித்துத் தருவாய் நந்தீஸ்வரனே (48)**

என்று பாடுகிறார்.

இறைவனைப் பெண்ணாகப் பாவித்துப் பாடும் நிலையில் உயர்ந்த உட்பொருளைக் கொண்டு பாடியிருப்பது குணங் குடியாரின் இறைக் காதலைப் புலப்படுத்துவதற்குத் தக்க சான்றாதாரமாக விளங்குகிறது.

**பரிபாஷை**

பரிபாஷை என்பது இரகசிய மொழியாகும். சில துறைகளில் சில காரணங்களுக்காகப் பரிபாஷையைப் பயன்படுத்துவர். ஆன்மீகத் துறையினரும் பரிபாஷையைப் பயன்படுத்துகின்றனர். ஆன்மீக யோக விஷயங்கள் அனுபவத்தால் மட்டுமே உணரக் கூடியவை. அவற்றை வெறுஞ் சொற்களால் விளக்க முடியாது. அவற்றை உணர்த்தப் பரிபாஷை பயன்படும். குறிப்பிட்ட துறைக்கு அந்நியர்கள் அல்லது அத்துறையை மேற்கொள்ளும் பக்குவம் அற்றவர்கள் ஒன்றை அறிந்தால் தீமை உண்டாகும் என்ற காரணத்துக்காகவும் பரிபாஷை பயன்படுத்தப்படுகிறது. ஆன்மீகம் மற்றும் யோகத்துறையினரும் இவ்விரண்டு காரணங்களுக்காகவும் பரிபாஷையைப் பயன்படுத்துகின்றனர். சூஃபி ஞானிகளும், தமிழ் நாட்டுச் சித்தர்களும் இங்ஙனம் பரிபாஷையைப் பயன்படுத்துகின்றனர். குணங்குடியாரும் இம்மரபைப் பின்பற்றுகிறார்.

"பரிபாஷைச் சொற்களுக்கு நேரான பொருள் கொள்ளக் கூடாது என்பதை அறிவுடையோர் உணர்வர். வைத்திய பரிபாஷையில் பயன் படுத்தப்படும் 'அரி' என்ற சொல்லுக்குத் 'திருமால்' எனப் பொருள் கொள்வது அறியாமை மட்டுமல்ல ஆபத்துமாகும். அதற்குக் 'கடுக்காய்' என்ற பொருள்தான் உண்மையானது. இதனை உணராத சிலர் ஞானியரின் பரிபாஷைகளுக்கு வெளிப்படைப் பொருள் கொண்டு அவர்களைத் தவறாகக் கணித்ததுண்டு. ஸூஃபி ஞானிகள் பலருக்கு ஏற்பட்ட இத்தகைய ஆபத்து குணங்குடியாருக்கும் ஏற்பட்டது.

**பாடுகின்ற சித்தருடைய நூல்களெல்லாம்**
**பரிபாஷை தெரியாது**

என்பர் அகத்தியர். ஒரு துறையினுடைய பரிபாஷை தெரியாது அத் துறையில் இறங்குவது அல்லது அத்துறையினரை மதிப்பிடுவது ஆபத் தானது" (குணங்குடியார் பாடற்கோவை, ப. xv) எனக் குறிப்பிடுகிறார் அப்துல்ரகுமான்.

**யோக பரிபாஷை சொற்கள்**

சிவம், சக்தி, உமை, மனோன்மணி, அம்பிகை, வாலை, பரை, கேசரி, சாம்பவி, தட்சிணாமூர்த்தி, நந்தி, துளவ மணி மார்பன், சிற்றம்பலம், சிவராஜ யோகம், ஓமம், ஓங்காரம், பிரணவப்பதி, மூர்த்தி, கணபதி, அட்டாங்க யோகம், எமன், நவநாதசித்தி, நவசூத்திரம், சுழிமுனை, வாசி, சோமன்மதிவட்டம், அங்க், வங்க், சிங்க், சோமப்பால், காமப்பால், வாமப்பால், ஓசை மணி மண்டபம், தண்டிகை, மாளிகை, சாளரம், முச்சுடர், மும்மலம், மும்மண்டலம், முக்குணம், மூவாசை, ஐந்துகள்வர், ஐம்புலவேடர், பஞ்சமாபாதகர், எட்டு, நான்கு, பன்னிரண்டு, ஐம்பத் தோரட்சரம், தொண்ணூற்றாறு தத்துவம் ஆகிய பலசொற்களைக் குணங்குடியார் பயன்படுத்துகிறார். இவை யோக பரிபாஷை சொற்களாகும். இவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ள யோகம் பற்றிய அடிப்படை அறிவு தேவை.

**குண்டலி சக்தி**

மனித உடலின் உட்புறத்தில் குதம் - மூலாதாரம்; குய்யம் - சுவாதிட்டானம்; உந்தி - மணி பூரகம்; இதயம் - அநாதகம்; அடிநா - விசுத்தி; நெற்றி - ஆஞ்ஞை; உச்சித் துவாரம் - பிரமரந்திரம் எனப்படும் ஆதாரங்கள் இருப்பதாக யோக நூல்கள்

கூறுகின்றன. அவற்றைப் போன்று மனித உடலுள் எழுபத்து இரண்டாயிரம் நாடி நரம்புகளும் இருக்கின்றன. அவற்றுள் முக்கியமான இருபத்து நான்கு நாடிகளைக் 'குண்டலிசக்தி' என்கின்றனர். "இந்தக் குண்டலி சக்தி பாம்பைப் போல் சுற்றிக் கொண்டு சுவாதிட்டானத்திற்கும் மணி பூரகத்திற்கும் இடையிலே உறங்கிக் கிடக்கும். இந்தக் குண்டலியைப் பிராணாயாமத்தால் எழுப்புகிறவன் யோகத்தின் பயனை அடைகிறான். இடப்பக்கம் ஓடும் சுவாசம் இடகலை எனப்படும்; வலப்பக்கம் ஓடும் சுவாசம் பிங்கலை எனப்படும்; நடுவே ஓடும் சுவாசம் சுழுமுனை எனப்படும். இவை முறையே சந்திர, சூரிய, அக்கினி நாடிகள் எனப்படும். யோக முறைப்படி பிராணாயாமம் செய்தால் குண்டலி வெப்பமடைந்து, விழித்து அடிபட்ட பாம்பைப் போல் நிமிர்ச்சி அடைந்து சுழுமுனையுள் பிரவேசிக்கும்; சுழுமுனையின் மேற்பகுதியில் அமைந்திருக்கும் பிரமரந்திரத்தில் அமிர்தம் ஒழுகும் சோமவட்டம் இருக்கிறது. மேலே பாயும் குண்டலி இந்த சோம வட்டத்தைத் தாக்கி அமிர்தம் ஒழுகச் செய்யும். இந்த அமிர்தம் உண்பவன் உச்ச நிலையடைந்து பரம்பொருள் அனுபவம் கொள்கிறான்" (அப்துல் ரகுமான், குணங்குடியார் பாடற் கோவை, பக். xv-xvi).

இந்தக் குண்டலியைச் சித்தர்கள் மனோன்மணி, வாலை, அம்பிகை, ஆத்தாள், உமை, சக்தி, பரை என்பனவாறு அழைப்பர். இம்முறையைப் பின்பற்றிக் குணங்குடியார்,

**ஆத்தாளை யெனையீன்ற வாலைஆ நந்தியை**
**அணைந்திடற் கருள்பு ரியவும்**
**அம்பிகை மனோன்மணிக் குண்டலித் தாய்பதமும்**
**அர்ச்சிக்க அருள்பு ரியவும்**
**பார்த்தாளை யாவையுங் காத்தாளை யென்றும்**
**பணிந்திடற் கருள்பு ரியவும்**
**பரையாளை மாநல்ல சிறையாளை யென்வசம்**
**பண்ணிவைத் தருள்பு ரியவும்**
**சேர்த்தாளை வான்கருணை பூத்தாளை யொத்தபடி**
**சென்றாட வருள்பு ரியவும்**
**சிறியாளை மெத்தவும் பெரியாளை யறியவுஞ்**
**சிறியவெற் கருள்பு ரியவும்** **(அ.ச. 71)**

என்று பாடுகிறார். குண்டலியை ஆத்தாள், எனை ஈன்ற வாலை ஆநந்தி, அம்பிகை, மனோன்மணி, பரையாள், மாநல்ல சிறையாள்,

வான் கருணை பூத்தாள் என்றெல்லாம் அழைத்து மகிழ்கிறார் குணங் குடியார். அடுத்த பாடலில் 'பத்துவயதுடைய சிறு பெண்ணான என் தாய்' (அ.ச. 72) என்றும் குண்டலியைக் குறிப்பிடுகிறார். குண்டலி முக்கியமான பத்து நாடிகளில் அமைந்திருப்பதால் சித்தர்கள் இவ்வாறு கூறுகின்றனர்.

**சிவயோக நித்திரை**

சிவயோகம் சிவனோடு ஒன்றிணையும் நிலையைக் குறிப்பிடும். மற்றெதனோடும் கூடாது பரம்பொருளோடு கூடும் யோகம் சிவயோகமாகும். இதுவே இஸ்லாம் குறிப்பிடும் ஓரிறைக் கொள்கையாகும். இதனை,

> **தூங்காது தூங்கிசிவ யோகநித் திரைவந்து**
> **தூங்கிடற் கருள்பு ரியவும் (அ.ச.83)**

எனும் அடியில், குணங்குடியார் குறிப்பிடுகிறார். 'நீ இறப்பதற்கு முன் நீ இறந்து விடு' என்று இஸ்லாம் சுட்டும் நிலையையும் இது குறிப்பிடுகிறது.

**கற்பூர தத்துவம்**

'கற்பூர தத்துவம்' சைவ சித்தாந்தத் தத்துவமாகும். இத்தத்துவம், கற்பூரம் ஒரு பொருளாக இருந்து சுடராக மாறி ஒன்றுமில்லாமல் இறுதியில் மறைந்து போவதை மனித வாழ்வுடன் ஒப்பிடுகிறது.

> **தீபம் பொருந்துகர்ப் பூரமென வுடலம்**
> **திகழ்ந்திடற் கருள்பு ரியவும் (அ.ச. 92)**

என்று குணங்குடியார் இதனைப் பாடுகிறார். தீயிலிட்டுத் தம்மைக் கருக்கும் முன் ஞானத் தீயில் தம் உள்ளத்தைப் புடமிட விரும்புகிறார். இதைத்தான் 'தீயிலிட்டென்னைக் கருக்கும் முன் என்னகம் தீயிலிட்டருள் புரியவும்' (அ.ச. 92) என வேண்டுகிறார்.

**தட்சிணாமூர்த்தி**

தட்சிணாமூர்த்தி என்பது சித்தர் மரபில் ஞான குருவைக் குறிக்கிறது. தட்சிணாமூர்த்தி நால்வருக்குக் குறிப்பால் ஞானம் உணர்த்தினராதலின் குறிப்பால் ஞானமுணர்த்தும் குரு தட்சிணாமூர்த்தி எனப் படுவார். நந்தியும் இவ்வாறே குருவை உணர்த்துகிறது. குணங்குடியார் இதனை,

> **தெட்சணா மூர்த்தமாய் நின்றுதரி சனைதந்து**
> **தீக்ஷைவைத் தருள்பு ரியவும் (அ.ச. 61)**

என்று குறிப்பிடுகிறார். அவர் 'தட்சிணாமூர்த்தி' என்னும் ஞான குருவிடம் தீட்சை பெற விழைகிறார்.

**ஈசன்**

'ஈசன்' என்பதும் ஞான குருவைக் குறிக்கிறது. 'ஈசனடி சென்றிடுவேனோ' (மு.ச.36) என்று சுட்டும் குணங்குடியார் ஈசன் எனும் இச்சொல்லை 'அகத்தீசன் சதகம்' என்னும் நூலின் பெயரிலும்,

**மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே**
**மவுனதே சிகநா தனே**

என நூல் முழுமையும் வரும் மகுடத் தொடரிலும்,

**ஈசனே யன்பர்க்கு நேசனே நின்கருணை**
**இயற்கையோ டருள்பு ரியவும்** (அ.ச. 6)

எனப் பல இடங்களிலும் பயன்படுத்துகிறார்.

**துளவமணி மார்பன்**

'துளவமணி மார்பன்' என்பது மேலோட்டத்தில் திருமாலைக் குறிப்பது. குணங்குடியார் தம் ஞானகுருவை இப்பெயரால் குறிக்கிறார்.

**அளகேச னேதுளவ மணிமார்ப னேயுனை**
**அறிந்திடற் கருள்பு ரியவும்** (அ.ச. 9)

'அளகேசன்' என்பதற்குப் பெருஞ் செல்வன்; குபேரன் என்னும் பொருள்கள் உள்ளன. இச்சொற்கள் எல்லாமே மக்கள் வழக்கில் பல தெய்வ வழிபாட்டுச் சடங்குகளுக்குரிய தெய்வங்களின் பெயர்களாயினும் சித்தர்களுக்கும் சூஃபிகளுக்கும் இவை ஒரே பொதுவான பொருளைக் குறிக்கும் குறியீடுகளேயாகும்.

**பராசக்தி**

'பராசக்தி' என்பது மூல சக்தியாகும். இதனை,

**சத்தியத் தொடுபரா சக்திசமு கத்திற்**
**சரண்புகற் கருள்பு ரியவும்** (அ.ச.72)

என்று குணங்குடியார் பதிவு செய்கிறார்.

**பசு, பாசம்**

சைவ சமயம் பதி, பசு, பாசம் எனும் மூன்றைச் சுட்டுகிறது. இவற்றில் பதி இறைவனையும், பசு மனித உயிரையும், பாசம்

ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களையும் குறிக்கின்றன. பசு பதியை அடைய வேண்டுமெனில் பாசத்தை நீக்க வேண்டும் என்பது சைவசித்தாந்தம். இவை எல்லா ஆன்ம ஞானிகளுக்கும் பொதுவானவை. இந்த அடிப்படையில் இவற்றைக் குணங் குடியார்,

**பசுபாச பாசமும் பாவையர்கள் நேசமும்**
**பாழாக வருள்பு ரியவும்** (அ.ச.24)

**பசுபாச நேசப் பெரும்பாவம் அனலிட்ட**
**பஞ்சாக வருள்பு ரியவும்** (அ.ச. 54)

**மலமத்த னையுமற்ற தவராஜ சிங்கமே**
**வரவேண்டு மென்ற னருகே** (அ.ச.74)

என்று சுட்டிக் காட்டுகிறார்.

**காயாபுரிக் கோட்டை**

உடம்பைக் காயம் என்பர்; பரிபாஷையில் குணங்குடியார் உடம்பைக் காயாபுரிக் கோட்டை என்கிறார்.

**கண்டத்தை வென்றுகா யாபுரிக் கோட்டையென்**
**கைப்படற் கருள்பு ரியவும்** (அ.ச.82)

என்பதில் இவ்வுடம்பை ஆசாபாசங்களில் இருந்து அடக்கி வைக்க அருள வேண்டும் என்கின்ற தம் விழைவை வெளிப்படுத்துகிறார்.

**பஞ்சசுத்தி**

'பஞ்சசுத்தி' என்னும் சொற்றொடர் சைவ சித்தாந்தத்துடன் நெருங்கிய தொடர்புடையது. சிவஞான சித்தியாரிலும் (820) இச்சொல் இடம்பெற்றுள்ளது. பஞ்சசுத்தியில் பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்னும் ஐவகைச் சுத்தக் கிரியைகள் இருக்கின்றன. பூசைக்கு இன்றியமையாத ஆத்மசுத்தி, ஸ்தானசுத்தி, மந்திரசுத்தி, திரவியசுத்தி, தேவசுத்தி என்பனவற்றையும் 'பஞ்சசுத்தி' என்பர். இதனை இப்பொருளில் தாயுமானவர் கையாள்கிறார். இந்த இரு பஞ்சசுத்தி முறையும் மனிதர்களைத் தூய்மையாக வைத்திருக்கும் முறைகளையே சுட்டுகின்றன. இதே பொருளில் நிராமயக் கண்ணியில்,

**பஞ்சசுத்தி செய்த பழவடியார் என்னவுன்னை**
**அஞ்சலி செய்தே யடைந்தேன் நிராமயமே** (162)

எனக் குணங்குடியார் குறிப்பிடுகிறார்.

**பஞ்சாட்சரம்**

'அல்லாஹு' என்னும் சொல்லில் உள்ள அலலஅஹ எனும் ஐந்தெழுத்துக்களைக் குணங்குடியார் 'பஞ்சாட்சரம்' என்கிறார். சைவநெறியில் 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்தைப் பஞ்சாட்சர மாகக் கொள்வர்.

**பஞ்சாட் சரத்தையும் துஞ்சாச் சரத்தொடு**
**பழக்கிவைத்து அருள்பு ரியவும்** (அ.ச.77)

என்று பாடுகிறார் குணங்குடியார். இதில் வாயுவை உட்கொள்ளும் பூரகத்தில் 'அல்லா' என்றும், வெளிவிடும் இரேசகத்தில் 'ஹு' என்றும் கூறுதலை இவர் சரத்தொடு பழகுதல் என்கிறார். இதனை 'பாஸே அன்ஃபா' எனும் சுவாசத்தைக் காத்தல் என்று குறிப்பிடுகிறார் அப்துல் ரகுமான் (குணங்குடியார் பாடற்கோவை, ப. 133).

**பஞ்சாக்கரம்**

சைவ சமயம் சுட்டும் 'நமசிவாய' எனும் ஐந்தெழுத்தையே 'பஞ் சாக்கரம்' எனவும் குறிப்பிடுவர். இச்சொல்லைக் குணங்குடியார்,

**எண்சா ணுயரத் திருக்கும் பனைமி னிறக்கியுண்ணும்**
**பஞ்சாக் கரமெனும் பாரிய கள்ளினைப் பாய்ந்தெடுத்துத்**
**தஞ்சாவூ ராளு மகராசன் பாதந் தனைப் பணிந்தால்**
**கெஞ்சாக் குணங்குடி கொள்வர் யிதுபுத்தி கேள்நெஞ்சமே**

(தவமே பெற வேண்டுமெனல். 8)

எனும் பாடலில் கையாள்கிறார். இப்பாடலில் பஞ்சாக்கரமெனும் பாரிய கள்ளினைப் பாய்ந்தெடுத்துத் தஞ்சாவூர் ஆளும் மகராசன் பாதத்தைப் பணிந்தால் நற்குணங்களைத் தம்பால் குடி வைத்திருக்கும் இறைவனின் குணங்குடிப் பதம் வாய்க்கும் நெஞ் சமே என்கிறார். இதில் உள்ள தஞ்சாவூர் என்னும் சொல்லைத் தஞ்சு + ஆவூர் எனப் பிரித்தால் அது இறுதியில் புகலிடமாகும் வீட்டுலகத்தை - சொர்க்கலோகத்தைக் குறிக்கும். தன் + சாவூர் எனப் பிரித்தால் தான் என்கின்ற சர்வமும் ஆணவமும் இல்லாத ஊர் என்றும் பொருள்படும். இப்பொருள்களிலேயே குணங்குடியார் இச்சொல்லைக் கையாள்கிறார்.

**நவசூத்திரம்**

உடலில் வாய் - 1, கண் - 2, மூக்கு - 2, செவி - 2, எருவாய் - 1, கருவாய் - 1 ஆகிய ஒன்பது துவாரங்கள் இருக்கின்றன. இதனை ஒன்பது வாயில்கள் என்பர். இந்த ஒன்பது வாயில்களை வைத்துக் கட்டப்பட்ட கோட்டை தான் மனிதனின் உடம்பு என்றும் கூறுவர். இந்த ஒன்பது துவாரங்களையும் உணர்வால் தொடர்பு கொள்வதே 'நவசூத்திரம்' எனவும் சுட்டுவர். இவ் ஒன்பதையும் ஒதுக்கிவிட்டு மனம் அல்லாஹ்வைப் பற்றி எண்ணாமல் கவலைப்படுவது ஏன் என்னும் வினாவை றகுமான் கண்ணியில்,

**நவசூத்தி ரத்தைவிட்டு நன்நினைவுஎண் ணாதுமனம்**
**கவலைப் படுவதுஎன்ன கண்ணே றகுமானே (90)**

என முன்வைக்கிறார்.

**ஐந்து கள்வர்**

உடம்பிலுள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளைக் குறிப்பிட ஐம்புல வேடர், அஞ்சுபுல வேடர், ஐந்து கள்வர் எனும் சொற்களைக் கையாள்கிறார் குணங்குடியார். 'அஞ்சுபுல வேடர்' என்னும் சொல்லை,

**அஞ்சாத அஞ்சுபுல வேடர்களு மடியனேற்கு**
**அஞ்சிடற் கருள்பு ரியவும் (91)**

என்று அகத்தீசன் சதகத்திலும், 'ஐந்து கள்வர்' எனும் சொல்லை,

**அடைத்த மனக்காட்டை ஆளுமைந்து கள்வரையும்**
**கடத்த முடிவதில்லை கண்ணே றகுமானே (23)**

என்று றகுமான் கண்ணியிலும் குறிப்பிடுகிறார்.

**எமன்**

இவ்வுலகத்து உயிர்களையெல்லாம் பறிக்கக் கூடியவன் எமதர்மன் என்று இந்து சமயம் சுட்டுகிறது; குணங்குடியார் 'எமன்' என்னும் சொல்லை அப்படியே தம் பாடல்களில் பயன் படுத்துகிறார். பற்றற்ற ஞானியரும் வாழ்வின் உண்மையை உணர்ந்தவரும் சாவுக்கு அஞ்சார். 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்' எனத் திருநாவுக்கரசரும், 'காலா உனைநான் சிறுபுல்லென மதிக்கிறேன் - என்றன் காலருகே வாடா சற்றே மிதிக்கிறேன்' என்று பாரதியும் பாடியுள்ளனர். குணங்குடியாரும்

தம் பாடல்களில் பல இடங்களில் எமனைப் பழித்துப் பேசுகிறார். கீர்த்தனைகளில் 'எமக்குப் பயந்து எமன் நின்று கெஞ்சவும்' (7:3), என்றும், 'காலனையும் காலைக் கொண்டுதை போடவும்' (15:8) என்றும், 'வஞ்ச நமனைக் காலாலுதைத்து' (22:1) என்றும் பலவாறு எமனைப் பழிக்கிறார். உண்மையில் இவை பழித்தல் அல்ல. இவற்றின் உட்பொருள் மரணமிலாப் பெருவாழ்வு எய்தியவர்கள் -மரணம் வரு முன் மரணமுற்ற ஞானிகள் மரணத்தைக் கண்டு அஞ்சுவதில்லை என்பதே.

**பிற சொற்கள்**

திருடுதல், கொலை செய்தல், கள்ளுண்ணல், கற்பழித்தல், சூதாடுதல் ஆகிய பஞ்சமாபாதகங்கள்; சாத்துவீகம், ராஜசம், தாமசம் எனும் முக்குணங்கள் ஆகியவை குணங்குடியார் பாடல் களில் குறிப்பிடப்படுகின்றன.

குன்று - புருவ நடுவில் உள்ள ஆஞ்ஞை (அ.ச. 4); குகை - புருவ நடுவில் யகாரம்; மூல அறை - மூலாதாரம் (அ.ச. 45); மேலூரு வீதி - முப்பாழிடம்; முச்சந்தி - சூரிய சந்திர அக்கினி மண்டலங்கள்; மேல்சந்து - பிரமரந்திரவழி; கொல்லன் உலை - மூலாக்கினி (அ.ச.47), பனையில் ஊறு கள் - சந்திர அமிர்தம்; புலைச்சேரி - உலகம் (அ.ச. 67); மணி மண்டபம் - பிரமரந்திரம் (அ.ச.82); கருக்குருவி - உயிர்; கூடு - பரமாணுவால் ஆகிய உடல் (அ.ச. 91); நெற்றிவிழி(மு.ச.4), அனுபூதி (மு.ச. 7); சோமசுந்தரவாரி (மு.ச.2), பிரணவ சொரூபக் கொழுந்து (மு.ச.1), கர்ப்பூரதீபம் (மு.ச. 1), சிவஞானம் (மு.ச. 1), சிவகாமி (நந். 12), நாதாந்த மூர்த்தி (மு.ச.3), சாம்பவி (நந்.9,15), ராஜராஜேஸ்வரி, அம்பாள், உமையாள், மனோன்மணி, சிற்றம்பலம், பஞ்சமாபாதகம் என்பன போன்ற ஏராளமான சொற்களைப் படிமங்களாகவும் பரிபாஷைகளாகவும் குணங்குடியார் கையாள்கிறார்.

**குணங்குடி**

ஈசன், சிவம், சிவன், நிராமயம், மௌனதேசிகன், குருபரன், அல்லாஹு, பரிபூரணம், பராபரம், றகுமான் என்றெல்லாம் பரம் பொருளான இறைவனைப் பலரும் சுட்ட, குணங்குடியார் மட்டும் "குணங்குடியான்" என அழைத்து மகிழ்கிறார். நற்குணம் குடி கொண்டவன் இறைவன்; அவன் வாழுமிடம் தான் குணங்குடி என்கிறார். இறைவனைக் காணக் குணங்குடிக்குச்

செல்ல வேண்டுமெனவும் விரும்புகிறார். குணத்தைக் குடியாகக் கொண்டிருக்கும் எல்லாம் வல்ல இறைவனைத் தாம் முழுமையாக நம்பிக் கொண்டிருப்பதாகவும், அவன் செயலுக்குத் தலை வணங்கி உட்படுவதாகவும் மனம் நெகிழ்ந்து,

**யானேஉனை நம்பினேன் – குணங்குடி**
**யானே என் ஆண்டவனே (கீர்த். 8)**

எனப் பாடுகிறார்.

**கல்லிலோ மண்ணிலோ விண்ணிலோ அடிமையிரு**
**கண்ணிலோ கண்ணீ ரிலோ**
**கரையிலோ கடலிலோ வுடலிலோ வுயிரிலோ**
**கதியான பூமித னிலோ**
**அல்லிலோ பகலிலோ நல்லபத இல்லிலோ**
**அறிவிலோ வுருமீ திலோ**
**அறிவிலோ அறியொணா மறையிலோ மறைகள்முதல்**
**ஆகம புராணத் திலோ**
**செல்வமிகு துரைராச ரேதேவ ரீர்க்குநிலை**
**திவ்விய குணங்கு டியிலோ**
**தெரியாம லிடையுமடி யேனுமுமை நம்பினேன்**
**சேர்ந்தணைந் தாளு தற்கே (மு.ச. 33)**
**நற்குணங் குடிமீது வீடுதர என்றன்ஐய**
**நாதனரு ளுந்தே டுமோ (மு.ச. 35)**

எனக் குணங்குடியில் வீடுதர வேண்டுகிறார். 'குணங்குடியார்' என்பதற்கு 'சிபத்' என்னும் இறைப் பண்புகளைத் தம்பால் குடி வைத்தார் என்பதும் பொருளாகும். நற்குணம் ஓங்கத் துர்க்குணம் போக வேண்டுமென,

**குணங்குடி யார்நற் குணங்குடி யோங்கக்**
**கொடுகொடேன் றடிக்கடி குணங்கும்**
**குணங்குடி யார்துற் குணங்குடி போகக்**
**குணமெலாந் திரண்டருள் பரப்பிக்**
**குணங்குடி யேறிக் குறைவற நிறைந்து**
**குணங்கட லான மெய்ஞ் ஞானக்**
**குணங்குடி வாழும்அகத் தீசனாம்என்**
**குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம்** (அ.ச. குருவணக்கம்)

எனும் பாடலில் வேண்டுகிறார். 'எங்கள் குணங்குடி ஆண்டவன் பாதத்தை என்றிந்தப் பாவிகண் கண்டிடுமோ' (கீர்த். 9), 'ஆண்டவன்

என் செய்வானோ '(கீர்த். 10), 'எங்கள் குணங்குடியானை என்றைக்கோ காண்பேன்' (கீர்த்.17), 'போவோம் குணங்குடிக்கு எல்லோரும்' (கீர்த். 21), 'அதிமோகத் திருநடனம் புரிந்தானெங்கள் ஐயன் குணங்குடியான்' (கீர்த்.22) எனப் பல இடங்களிலும் குணங்குடியார் குணங்குடியின் பெருமை பேசுகிறார். குணங்குடியார் தம்முடைய ஞானப்பாக்களை ஒவ்வொரு சொல்லுக்கும் எழுத்துக்கும் உள்ளார்ந்த மெய்ப்பொருள் தொனிக்குமாறு இறைவழிபாட்டை மையமிட்டே அமைத்துள்ளார்.

இவ்வாறு இறைவழிபாட்டில் மூழ்கித் திளைத்திருக்கும் ஸூஃபிகள் இறைவழிபாடு தொடர்பான சொற்களை இரகசிய மொழியான பரிபாஷைகளில் இறைவனுக்கும் தமக்கும் புரியும் வகையில் மட்டுமே பேசினர்.

ஞானநெறியில் ஈடுபட்டு அனைத்தையும் கடந்த அத்துவித நிலையை அடைய விரும்பும் உண்மையான ஸூஃபிகள் எல்லா இடங்களிலும், எல்லாப் பொருள்களிலும் இறைவனையே காண்பார்கள். ஞானநெறிக்கு இட்டுச் செல்லும் குருவிடம் அபார அன்பு கொண்டு இறைவனின் அரும்பெரும் நற்பண்புகளையும், அவனின் மகா வல்லமை யையும், தாய், தந்தையனைய உலகத்து உறவுகளையும் அக்குரு மீதே ஏற்றிப் பார்ப்பார்கள். மெய்த்தவத்தையும் மெய்ஞ் ஞானத்தையும் அருள வேண்டுவார்கள். மெய்ஞ்ஞானத்தின் முதல் நிலையான தன்னை யறிதலை வலியுறுத்துவார்கள். முத்தி நிலையை அடைய ஆசையை அறுத்தெறிய வேண்டும் என்பார்கள். பேரின்பத்தை அடைவதற்குத் தடையாக இருக்கும் பெண்ணாசையையும், பிற உறவுப்பற்றுகளையும் உதறித் தள்ளுவார்கள். உண்மையைச் ஸூஃபிகள் உயிர் மூச்சாகக் கொள்வதுடன் வஞ்சகம், பொய் போன்ற செயல்களில் ஈடுபடக் கூடாது என்பதில் உறுதியாக இருப்பார்கள். இறைவனை அடைவதற்குத் தம்முடைய விதி தடையாக இருந்து விடுமோ எனக் கருதி அஞ்சி அஞ்சி வாழ்வார்கள். நில்லா உலகத்தை நிலையாகக் கருதி நிலையான பேரின்பத்தை இழந்து விடக் கூடாது என்பதில் ஸூஃபிகள் கவனமாக இருப்பார்கள்.

ஆணவம் தம்மிடம் அணுவளவேனும் அண்டி விடக் கூடாது என்று விரும்பும் ஸூஃபிகள் எந்த வழிகேட்டிலும் தாம் சென்று விடக் கூடாது என இறைவனிடம் அனல் மெழுகாய் உருகி அழுவார்கள். மனிதர்கள் உலகியலில் அனைத்து உறவுகளையும்

துறந்தேனும் பெண் மீது கொண்ட காதலால் பெண்ணிடம் ஐக்கியமடைய நினைப்பார்கள். ஆனால் சூஃபிகளோ இறைவனைப் பெண்ணாகப் பாவித்துப் பேரின்பக் காதல் போதையில் மூழ்கித் திளைக்க விரும்பி எல்லா உறவுகளையும் துறந்து இறைவனில் இறுகப் பிணைந்து விடப் பேராவல் கொள்வார்கள்.

சமயத் தர்க்கம் பேசிச் சண்டையிடும் நெறிபிறழ்ந்த காலமாக இருந்தாலும் சூஃபிகள் சமய எல்லைகளைக் கடந்து எல்லா மனிதரையும், எல்லாச் சமயக் கடவுளையும் ஒன்றென்றே நேசிப்பார்கள்.

இறைவனில் மூழ்கி அவனை அழைப்பதற்குத் தம் உள்ளம் விரும்பிய பரியாயச் சொற்களைக் குறியீடுகளாகப் பயன்படுத்துவார்கள். எளிய இனிய எல்லோர்க்கும் புரியும் வகையில் தங்கள் சொல், செயல், வாழ்வு என அனைத்தையும் சூஃபிகள் அமைத்துக் கொள்வார்கள். இவர்கள் எதைப் பற்றிச் சிந்தித்தாலும் அவை எல்லாவற்றிலும் சூஃபித்துவத்தின் மணம் வீசும். அழியாப் பேரின்பம் காண விழைவது தான் இவர்களின் முழுமையான நோக்கம்.

இறைவனில் ஒன்றிணைவதை முழு நோக்கமாகக் கொண்ட ஞான வள்ளல் குணங்குடியார் தம் வாழ்வையும் இலக்கியத்தையும் சூஃபித்துவ வாழ்வாகவும், சூஃபித்துவ இலக்கியமாகவும் அமைத்துக் கொண்டு ஒப்பற்ற பெருவாழ்வு வாழ்ந்தார். இவ்வாறு வாழ்ந்த தம் வாழ்வியல் அனுபவங்களையும் இறையியல் கருத்துக்களையும் தமிழ்ச் சமூகம் பயன்பெறும் வண்ணம் ஞானப்பாக்கள் வடிவில் அள்ளி அள்ளித் தந்தார். தம் வாழ்வின் வழி சமத்துவத்தையும் சகோதரத்துவத்தையும் கற்றுத் தந்த ஞான மகானாகவும் ஞானக் கருவூலமாகவும் அவர் விளங்கினார்.

☯

## 4. படைப்பு உத்திகள்

எளிமையும், இனிமையும் வாய்ந்த குணங்குடியார் பாடல்கள் தமிழ் இலக்கிய உலகில் பல படிநிலைகளில் சிறந்து விளங்குகின்றன. இவை சொல்லாட்சிச் சிறப்பும் ஒலிநயமும் பாமரரையும் படிக்கத் தூண்டும் வளமும் மிக்கவை. படிப்பார் மனங்களைக் கவரும் பல்வேறு உத்திமுறைகளைக் கையாண்டு பாடியுள்ள குணங்குடியாரின் பாட்டுத் திறம் வையத்தைப் பாலித்திட வைக்கும் பான்மையது.

### பகுப்பு முறை

குணங்குடியாரின் ஒட்டு மொத்தப் பாடல்கள் குறித்துக் கருத்துரைக்கும் சி.நயினார் முகம்மது, "இவற்றை மூன்று பெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம்: 1. சூஃபித்துவக் கருத்து விளக்கம், 2. இந்திய நாட்டுச் சித்தர்களின் யோகநெறி வழிப்பட்ட அணுகுமுறை, 3. நாட்டுப் புறப் பாடல் போக்கும் இசையும் கூடிய ஆன்மப் பயண அனுபவ வெளியீடு. இதனை மொழிநடை அடிப்படையிலும் மூன்று கூறுகளாகப் பிரிக்கலாம். முதற்பகுதியில் இஸ்லாமிய ஞான வழியை விளக்குவதற்கு இன்றியமையாத அறபி மொழிச் சொல்லாட்சி, இடைப் பகுதியில் சூஃபி வழியைத் தமிழ் நாட்டுச் சூழலுக்கேற்ப விளக்கும் சித்தர் மொழிநடை, இறுதிப் பகுதியில் ஆன்ம அனுபவத்தை உணர்வு பூர்வமாக வெளியிடும் வழக்குச் சொற்கள் விரவிய இசை வடிவங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன" (மஸ்தான் சாகிபும் தாயுமானவரும் - ஓர் ஒப்புநோக்கு, ப. 103) என்று குறிப்பிடுகிறார்.

### கற்பனை

கண்கள் ஒரு பொருளைக் காணாத நிலையிலும் அப்பொருளை மனத்திரையில் நினைவிற்குக் கொண்டு வருவதும், உள்ளதை உள்ளவாறு கூறாமல், உள்ளம் மகிழுமாறு வெளிப் படுத்துவதும் கற்பனையாகும். குணங்குடியார் தம்முடைய இறை அனுபவங்களை படிமக் கற்பனையாக வெளிப்படுத்துகிறார். இறைவனைப் பெண்ணாகக் குறியீடு செய்து குணங்குடியார்

மனோன்மணிக் கண்ணி பாடுவது இதற்குச் சிறந்த சான்றாகும். இது போன்று பல பாடல்களிலும் தாம் உணர்வதைக் காட்சிப் படுத்திக் காட்டுகிறார்.

**சொல்லாட்சி**

அழகு மிக்க சொற்களைக் கையாளும் கைவண்ணம் மிக்கவன் கவிஞன். அவன் கருத்தாழத்தை வெளிப்படுத்தும் உணர்வில் வெளியிடும் சொற்கள், எளிய சொற்களாயினும், எல்லோரும் அறிந்த சொற்களாயினும், பேச்சு வழக்குச் சொல்லாயினும், கொச்சை வழக்காயினும் புத்துணர்வு பெற்று விடுகின்றன. அவ்வகையில் தேர்ந்த, கருத்துச் செறிவு மிக்க சொற்களையும், தொடர்களையும் குணங்குடியார் கையாள்கிறார். சித்தர் நடையும், ஞூஃபி நடையும் கலந்த பரிபாஷை சொற்களை நூல் முழுவதும் மீண்டும் மீண்டும் பயன்படுத்துகிறார். இது தவிர இன்ன பிற உத்திமுறைகளையும் தம் பாடல்களில் ஆளுகிறார்.

**மரபுத் தொடர்கள்**

குணங்குடியாரின் மொழிநடை தனித்துவமானது. சொல்ல வரும் கருத்தைத் தம் சொல்லாட்சித் திறத்தால் திறம்படக் கூறும் இவர்,

> **அல்லும் பகலும் அடிமைமனம் தேம்புதற்குக்**
> **கல்லும் கரைந்திடுமென் கண்ணே றகுமானே (21)**

என்று றகுமான் கண்ணியில் 'அல்லும் பகலும்' என்ற மரபுத் தொடரைக் கையாள்கிறார். இதேபோல் 'நெல்லில் பதர்', 'விட்ட குறை தொட்ட குறை', 'சண்டியிலும் சகசண்டி' போன்ற மரபுத் தொடர்களையும் கருத்துக்களை விளக்கும் பொருட்டு எடுத்தாள்கிறார். இறைவனை நினைத்துக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குவதை விண்ணிலிருந்து பெருகி வந்த கங்கையாகக் குறிப்பிடுகிறார்.

**வழக்குத் தொடர்கள்**

கருத்துப் புலப்பட்டு எளிமை கருதிப் புலவர்கள் பேச்சு வழக்குத் தொடர்களையும் சொற்களையும் பயன்படுத்துவர். இவை மக்களை ஈர்க்கும் ஆற்றல் உடையவை.

**கத்திக்கத்தித் தொண்டையுங் கட்டிச் செத்தேனே**
**காணும் எங்கள் குணங்குடிச் சித்தனே (14)**

என்ற பிசுமில்லாகி கீர்த்தனையில் கத்தி கத்தி எனும் வழக்குச் சொற்களை இயல்பாகப் பயன்படுத்துகிறார்.

**தாடிமீ சைகள்நரைத் தும்தவ மிலார்உறவு**
**'சை'என்பது எக்கா லமோ**
**சண்டைநின் றிடுவதும் மண்டைபிண் டுடைவதும்**
**'சள்' என்பது எக்கா லமோ (மு.ச. 82)**

எனும் அடிகளில் பேச்சு வழக்கில் உள்ள 'சை,' 'சள்' எனும் எளிய உணர்ச்சிச் சொற்களைக் கையாண்டு பாடல் புனைந்துள்ளார்.

**சீநாயே ஓடென் றடித்துத் துரத்துஞ்**
**சிரிப்பினைப் பட்ட முவனோ**
**நாயினும் கடைகெட்ட நாயினும் கடைகெட்ட**
**நாய்போல் அலைந்த முவனோ (மு.ச. 73)**

என்ற முகியித்தீன் சதகப் பாடலடியில் 'சீநாயே ஓடென்று அடித்துத் துரத்தும்' எனும் பேச்சு வழக்குத் தொடரினை ஆள்கிறார். இவை தவிர கோடானு கோடி, காசு பணம், இரணம், ஈடுசோடு, உரன்முறை, ஏவல்விலக்கு, லொடலொட்டை, சண்டாளன், ஓட்டாண்டி, கஞ்சி, சமுசாரி, சும்மா, சூதானம், சொந்தம், சோம்பேறி, டம்பஜம்பம், வறவோடு, நாற்றக்கருவாடு, சல்லிக்குணம், கெட்ட புல்லர்கள், சகசண்டி, கொலை பாவி, மல்லாடுதல் போன்ற வழக்குச் சொற்களையும், மடையன், மட்டிப் பயல், புழுக்கப் பயல், வெங்கம் பயல், ஐயையோ, எச்சில்தனம், கடைமயிர் தான், படுசுட்டி, போக்கிரி, கெசபோக்கிலி, நாரி, துப்புக்கெட்டு, பழஞ் செருப்பு ஆகிய கொச்சைச் சொற்களையும் பயன்படுத்தி எல்லோரையும் பாடி மகிழத் தூண்டுகிறார். அத்தன், அப்பன், ஐயன், ஆச்சி, மைச்சினிச்சி போன்ற வழக்கில் உள்ள உறவுச் சொற்களையும், சிலேடைப் பொருளாக இருந்த போதும் தொண்டி, அறந்தாங்கி, தஞ்சாவூர், கலகம் ஆகிய ஊர்ப் பெயர்களையும், நாகூர் என்ற ஊர்ப் பெயரையும் பயன்படுத்துகிறார்.

சைவ அடியார்கள் இறைவனின் அருளை இரந்து நாயேன், கடையேன், அடியேன் எனப் பாடுவர். அதே போல்

குணங்குடியாரும் தம்மை நீசன், பாவி, அறியாச் சிறியேன், தொழும்பன், புலையன், முட்டாள், வட்டன், கற்குணத்தான் எனவெல்லாம் கூறிக்கொள்கிறார். ஒருபொருட் பன்மொழிகளையும் குணங்குடியார் தம் பாடல்களில் அமைத்துள்ளார். கூறுதல் எனும் பொருளில் அறைதல், இசைத்தல், இயம்புதல், செப்புதல், சொல்லருள் செய்தல், பகர்தல், பேசல், நவில்தல் எனும் பல சொற்கள் இடம் பெற்றுள்ளன. உடலை உடலம், புழுக்கூடு, கூடு, காயாபுரிக் கோட்டை எனப் பல சொற்களால் குறிக்கிறார்.

பேச்சு வழக்கிலுள்ள கதகத, களகள, தளதள, சதசத, மடமட, குமுகுமு போன்ற இரட்டைக் கிளவித் தொடர்களையும் பல பாடல் களில் ஆள்கிறார்.

**சொல்லடுக்குத் தொடர்**

சொல்ல வரும் கருத்துக்கு அழகு சேர்க்கும் வண்ணம் குணங் குடியார் சொற்களைக் கையாள்கிறார். சொற்களைப் பாடல்களில் அடுக்கி ஆள்கிறார். இது பாடலுக்கு ஓசை நயத்தைக் கூட்டுவதுடன், படிப்பாரை மனங்கொள்ள வைக்கும் பாங்கினவாயும் அமைந்துள்ளன.

**நோக்குநோக் கொண்ணாத நோக்குநோக் காநின்ற**
**நோக்கெனது முன்னிற் கவே** (மு.ச. 4)

**தீபாவி தீபாவி தீபாவி தீபாவி**
**திவ்யகுண மற்ற பாவி** (மு.ச. 65)

**மெய்யான பொய்யுடலை மெய்யென்று மெய்யான**
**மெய்யறிவு கெட்ட பாவி** (மு.ச. 66)

**அனியாயம் அனியாயம் அனியாயம் என்கொடுமை**
**அனியாயம் என்றழு வனோ** (மு.ச. 71)

**எக்காலம் எக்காலம் எக்காலம் எக்காலம்**
**என்றழுவ தெக்கா லமோ** (மு.ச. 90)

**அபயம் எனைக்காப்பது அண்ணலே உன்னுபயம்**
**உபயம் உபயம் முனதுபயம் நிராமயமே** (நிரா. 71)

எனப் பல பாடல்களில் சொல்லடுக்குத் தொடர்களையும் சொற் பொருட் பின்வரு நிலைகளையும் குணங்குடியார் ஏராளமாகக் கையாள்கிறார். மேலும் நிராமயக் கண்ணியில் 'உன்னி உன்னி'

(29), 'எண்ணி எண்ணி' (32,54,89), 'தொழுது தொழுது' (36), 'ஆணையிட்டேன் ஆணையிட்டேன்' (74) போன்ற பல அடுக்குத் தொடர்களையும் ஆள்கிறார்.

**உணர்ச்சித் தொடர்**

எளிய சொற்களில் ஆழ்ந்த கருத்துக்களை இயம்பும் குணங்குடியார் பல்வேறு உணர்வு நிலைகளையும் தம் பாடல்களில் படம் பிடித்துக் காட்டுகிறார். வீரவுணர்வை 'மீசையுள்ள ஆண் பிள்ளைச் சிங்கங்கள் என்கூட வெளியிலே வாருங்கள் காணும்' (20) எனும் கீர்த்தனைப் பாடலடி மூலம் வெளியிடுகிறார்.

**கருத்துக்களை நிரல்படுத்துதல்**

பல்வேறு கருத்துக்களைக் குணங்குடியார் ஒரே தொடரில் நிரல் படுத்திக் கூறுகிறார். நாடு உண்டு, நகர் உண்டு, நல்லோர்களும் உண்டு, நாதனும் உண்டு, ஓடும் எனக்கு உண்டு என்னும் ஐந்து கருத்துக்களை,

**நாடு நகருண்டு நல்லோர் களுமுண்டு நாதனுமுண்டு**
**ஓடு மெனக்குண்டென் றெண்ணியுன் கையி லுடல்பசித்தால்**
(தவமேபெற வேண்டுமெனல். 13)

என ஒரே தொடரில் அடுக்கியாளும் குணங்குடியார் கருத்துக்களை அழுத்தம் திருத்தமாகச் சுட்டுவதற்கு உண்டு என்னும் சொல்லையே மீண்டும் மீண்டும் பயன்படுத்துகிறார். இவ்வாறு சொல்வது வடிவச் சிறப்பையும் தருகிறது.

**வினாத் தொடர்**

குணங்குடியார் தம் பாடல்களில் வினாக்களைத் தொடுத்துக் கருத்துக்களை விளக்குகிறார். பல பாடல்களில் பல்வேறு முறைகளில் பல்வேறு வினாக்களைத் தொடுக்கும் இவர்,

**எந்தவித மாயினு மிணங்கவிலை யென்மனம்**
**இணங்கவிலை யென்ற முவனோ** (72)

என முகியித்தீன் சதகத்திலும்,

**பொய்யே மிகுந்த புதர்ப்பாவிப் பையல்யான்**
**அய்யோவென் றேயழுதுன் னடிபணிவ தெக்காலம்** (12)

என எக்காலக் கண்ணிப் பாடல்கள் முழுவதிலேயும்,

**எனக்கோர் நிகருமில்லை இல்லாரில், வல்லாரில்**
**உனக்கோர் நிகரொருவர் உண்டோ நிராமயமே** (127)

என்று நிராமயக் கண்ணியிலும் வினாக்களை முன்வைக்கிறார்.

**பிறமொழிச் சொற்கள்**

குணங்குடியார் பாடல்களில் அறபு, உருது, பாரசீகச் சொற்களும், வட சொற்களும் ஏராளமாகக் காணக் கிடக்கின்றன. தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராத்தி மொழிச் சொற்களும் இருக்கின்றன.

'உண்மைப் பொருளானவன்' எனும் பொருள்படும் 'ஹக்அன்' என்ற அறபுச் சொல்லை 'அக்கன்' என்று பயன்படுத்துகிறார். 'அகது' (ஒருவன்), 'அல்லாகூ' (இறைவன்), 'அல்லல்லாகூ' (இறைவன்). 'அலிபு' (முதன்மையும் மூலமுமான நிலை), 'அறுவாகு (உயிர்கள்), 'இல்லல்லா' (அல்லாவைத் தவிர), 'இறசூல்' (இறைத்தூதர்), 'உலமாக்கள்' (மார்க்க அறிஞர்கள்), 'ஒலி' (இறைநேசர்), 'கதீம்' (பூர்வீகமானவன்), 'கபறு' (மண்ணறை - அடக்கவிடம்), 'கபூல்' (ஏற்றுக் கொள்ளுதல்), 'கமால்' (பரிபூரணத் தன்மை), 'கலிமா' (இஸ்லாமிய மூலமந்திரம்), 'சேகு' (பெரியவர்), 'தீன்' (மார்க்கம்), 'பிசுமில்' (திருநாமம்), 'ஜமால்' (அழகு), 'ஜலால்' (கண்ணியம்) போன்ற அறபுச் சொற்களைக் கையாள்கிறார்.

'சறுதாறு' (தலைவன்), 'சுமாறு' (அளவு), 'பாத்துஷா' (அரசர், தலைவர்), 'பீங்கான்' (தட்டைப் பாத்திரம், உண்கலம்), 'பீறு' (குரு) முதலிய பாரசீகச் சொற்கள் இடம்பெறுகின்றன.

'சவ்வாது' (வாசனைத் திரவியம்), 'சலுதி' (விரைந்து), 'பாறா' (காவல்), 'வதல்ஆள்' (பிரதிஆள்) ஆகிய உருதுச் சொற்கள் இருக் கின்றன.

அறபு, உருது, பாரசீகச் சொற்களிலும் மிகுதியாக வடசொற்கள் குணங்குடியார் பாடல்களில் காணப்படுகின்றன. 'செகம்,' 'திவ்யம்,' 'வேசம்,' 'பிரபஞ்சம்,' 'பிரகாசம்,' 'ஆனந்தம்' எனப் பல வட சொற்கள் இவர்தம் பாடல்களில் காணப்படுகின்றன.

வில்லங்கம் என்ற மராத்திச் சொல்லையும், சலுவுதுரை என்ற தெலுங்குச் சொல்லையும், அக்கரை என்ற கன்னடச் சொல்லையும், பறைந்தான் என்ற மலையாளச் சொல்லையும் குணங்குடியார் ஆண்டுள்ளார். உயர்ந்த தத்துவக் கருத்துக்களை அவை சொல்லப் பட்டுள்ள அறபி, வடமொழிச் சொற்களிலேயே வெளிப்படுத்தவும் அக்கருத்துக்களை மக்கள் வழக்கில் உள்ள பிறமொழிச் சொற்களால் எளிய மக்களிடம் கொண்டு செல்லவும் இம்மொழிக் கலப்புகள் பயன்படுகின்றன.

பிறமொழிச் சொற்கலப்பு இருந்தபோதும் 'விரிகருணைச் செஞ்சுடர்,' 'தவக் கனல்,' 'மாசிலாமணிமாலை,' 'வாயிற் சிறந்த மொழி,' 'செங்கீரையாடு சிறு மதலை,' 'கைக்குள் வளர் நெல்லிக்கனி,' 'வாரா நெறிக் கருணை' போன்ற தேர்ந்த தமிழ்ச் சொற்கள் மிகப்பலவும் குணங்குடியார் பாடல்களில் காணப்படுகின்றன.

**பழமொழி**

வழக்கிலிருக்கும் பழமொழிகளையும் குணங்குடியார் கருத்துப் புலப்பாட்டிற்காகக் கையாள்கிறார். 'எறும்பு ஊரக் கல்லும் தேயும்' என்னும் பழமொழியை நிராமயக் கண்ணியில்,

> **எறும்புஊர ஊர இரும்புமுதல் தேய்வதுபோல்**
> **இறும்பூரும் அன்பர்உளம் இத்தகையே நிராமயமே** *(94)*

என்று பயன்படுத்துகிறார். அகத்தீசன் சதகத்தில் 'கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைந்த கதை போல' என்னும் பழமொழியை,

> **கையில்வெண் ணெயைவைத்து நெய்க்கழூ வண்ணமென்**
> **கலிதீர்த்து னருள்பு ரியவும்** *(30)*

என்று எடுத்தாள்கிறார். இதே பழமொழியை,

> **கைக்குள்வெண் ணெயைவைத்து நெய்க்கழுத பாவிகலை**
> **கற்றுமறி வற்ற பாவி** *(69)*

என முகியித்தீன் சதகத்திலும் ஆள்கிறார். இப்பாடலில் 'கற்பக விருட்சத்தின் அடியிலே காஞ்சிரங்காய் தேடி நின்ற கதை போல,' 'கொக்குப் பிடிக்க நாய்க்குத் தெரியுமோ,' 'குருடர்கள் யானையைக் கண்ட கதை போல,' 'அமுதம் உண்கிற வாயால் விஷம்

உண்பார்களா' என நான்கு பழமொழிகளைக் கையாள்கிறார். இன்னொரு பாடலில் 'மந்திரத்தால் மாங்காய் விழாது' என்னும் பழமொழியைக் குணங் குடியார் நயம்படப் பயன்படுத்துகிறார்.

மனத்தின் பல்வேறு இயல்புகளைக் 'கள்ள மனம் துள்ளும்' என்னும் பழமொழியின் வாயிலாக விளக்குகிறார். நிலையாமையைப் புலப்படுத்த 'இன்றிருப்பார் நாளையில்லை' என்னும் பழமொழியைப் பயன்படுத்துகிறார்.

தன்னைச் சேர்ந்தவரின் குறையைக் கூறுவதை 'மல்லாந்து படுத்துக் கொண்டு மேல் உமிழ்ந்தாலும் தன் மார்பில் தான் விழும்' என்னும் பழமொழியையும், 'தன் பல்லைக் குத்தி முகர்ந்தாலும் நாறும்' என்னும் பழமொழியையும் கொண்டு மனோன்மணிக் கண்ணியில் (72) எடுத்துரைக்கிறார்.

**பெண்களுக்குப் பேயுமன மிரங்கிடுமென் றெவ்வுலகும்**
**பேசக் கேட்டேன்**
**பெண்களுக்குப் பேயுமன மிரங்கியொரு பேச்சேனும்**
**பேசக் கேளேன்** (கீர்த். 18)

என்ற பாடலில் 'பெண்ணென்றால் பேயும் இரங்கும்' எனும் பழமொழியைச் சுட்டுகிறார். இங்ஙனம் நூல் முழுதும் பல பழமொழிகளைக் கையாண்டுள்ளார்.

**உவமை நயம்**

படிப்பார்க்குப் பொருளை எளிதில் புலப்படுத்தும் வண்ணம் புலவர்கள் உவமைகளை அதிகம் கையாள்வர். இது பொருளைப் புலப் படுத்துவதுடன் நில்லாமல் இலக்கிய நயத்தையும் கூட்டுகிறது. பெரியோர்களும் இலக்கியவாணர்களும் பழமொழிகளையும் உவமைகளையும் உருவகங்களையும் அதிகம் கையாள்கின்றனர். இதனைக் குணங்குடியாரும் நயம்படக் கையாள்கிறார்.

'மின்னலைப் போன்ற பொய்யுடலை மெய்யென்று சொல்லும் பொய்யர்கள் இனி என்னகதி பெறுவார்களோ எந்தாயே நிராமயமே' எனக் கூறும் குணங்குடியார் உடலை மின்னலைப் போன்ற பொய்யுடல் என்கிறார். இதனை,

**மின்னனைய பொய்யுடலை மெய்யென்ற பொய்யரினி**
**என்ன கதிபெறுவார் எந்தாய் நிராமயமே** *(நிரா. 181)*

எனப் புலப்படுத்துகிறார். அழியும் இயல்புடைய மனித உடலை ஊத்தைக்குழி, குட்டிச்சுவர் என்கிறார். இதனை,

**ஊத்தைப் பிணமாம் உடலை இடிசுவரை**
**ஏற்ற படிவிடுதல் ஈனம் நிராமயமே** *(நிரா. 23)*

எனப் புலப்படுத்துகிறார்.

'கொப்பவிரைக்குள் குடியிருந்த தன்மையைப் போல எந்தப் பொருளுக்கும் சித்துப் பொருளாய் இருந்தாய்' என்பதை உவமை வாயிலாக,

**கொப்புவித்தி லுள்ளே குடியிருந்த கொள்கையென**
**எப்பொருட்குஞ் சித்தா யிருந்தாய் நிராமயமே** *(நிரா. 81)*

என உரைக்கிறார்.

உள்ளம் பதைத்து உருகுவதற்கு 'உலையிலிடு மெழுகு போல' என்னும் உவமையை,

**உலையி லிடுமெழுகா யுள்ளம் பதைத்துருகிக்**
**கலங்கியதுங் கண்டிலையோ கண்ணே பராபரமே**

*(கண்மணி மாலைக் கண்ணி. 78)*

எனப் பயன்படுத்துகிறார். மனம் ஒருநிலைப் படாமல் அங்கு மிங்கும் அலைவதை,

**ஆழித் துரும்பென அங்கும் இங்கும்**
**அலைந்து திரிவதில் அஞ்ஞானந் தங்கும்**

*(ஆனந்தக் களிப்பு. 11)*

என உணர வைக்கிறார். இதே கருத்தைப் புலப்படுத்த 'சுழல் காற்றுத் துரும்பு போல' எனும் உவமையையும் கையாள்கிறார். நீள அகல ஆழம் ஆகியவற்றை அறிய இயலாத் தன்மையால் பிறவிக் கடலை மட்டறு பவக் கடல் என்று உவமிக்கிறார். பிறவி எடுத்துப் பயனற்றுப் போவதைக் 'கானில் நிலவு போல' எனக் குறிப்பிடுகிறார். 'மடம்புகு நாய் போல,' 'உடை தேங்காய்ச் சிரட்டை போல,' 'நண்டளந்திடு நாழியாவனோ,' 'அரிசி விலை உலை அறியுமோ' எனக் கருத்துக்களைப் புலப்படுத்த எல்லோரும்

அறிந்த நயம் மிக்க உவமைகளைக் கையாள்கிறார்.

**கடல்மடை திறந்தென அருள்மடை திறந்தடிமை**
**கண்குளிர்வ தெக்கா லமோ**

*(கண்மணி மாலைக் கண்ணி. 9)*

என்றெல்லாம் உவமைகளைக் கையாள்வதுடன்,

**நற்பவளக் கொம்பே நவின்றமணிப் பெட்டகமே**
**கைப்பொருட்கு மெய்ப்பொருளே கண்ணே பராபரமே** *(பரா.9)*

என ஒரே பாடலில் ஒன்றுக்கும் மேற்பட்ட உருவகங்கள் வருமாறும் பாடல் புனைந்துள்ளார்.

**யாப்பு ஆளுமை, சந்த நயம், இசை நுட்பம்**

தமிழ் இலக்கிய இலக்கணங்களை நெடிது கற்றறிந்த குணங் குடியார் பெரும் புலமை பெற்றவராக விளங்கினார் என்பதற்கு அவருடைய பாடல்கள் சான்றாதாரமாக விளங்கு கின்றன. அவருடைய இசைப் புலமையைக் கீர்த்தனைகள் எடுத்தியம்பு கின்றன. நேரிசை வெண்பா, ஆசிரியப்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கண்ணி, அந்தாதி போன்ற யாப்பு வடிவங்களைப் பயன்படுத்தி அவர் தம் பாடல்களை இயற்றியுள்ளார். அதேபோல் இசை இலக்கணத்தினின்றும் சிறிதும் பிறழவில்லை. எதுகை, மோனை, இயைபு ஆகியன குணங்குடியார் பாடல்களில் துள்ளி விளையாடுகின்றன. சந்த நயம் சிந்து பாடுகிறது. அந்தாதி அமைப்பும் காணக் கிடக்கின்றது.

குணங்குடியார் பாடல்கள் முழுவதிலும் இசையோடு பாடுவதற்குரிய கூறுகள் இருக்கின்றன. அவருடைய கீர்த்தனைப் பாடல்கள் அவரது இசை நுட்பத் திறனை வெள்ளிடை மலையாகப் புலப்படுத்துகின்றன. இசைப் பாடல்களை விருத்தப்பா, கீர்த்தனை, ஆனந்தக் களிப்பு எனும் வடிவங்களில் பாடியுள்ளார். அதிலும் விருத்தப்பாவைப் பயன்படுத்திக் கீர்த்தனைப் பாடல்களைப் பாடிப் புதுமுயற்சி செய்துள்ளார்.

இராக, தாள அமைப்புடன் இசைப் பாடலுக்கு விரைவு நடையை உண்டாக்கும் தொங்கல் அமைப்புச் சொற்களைப் பயன்படுத்தியும் பாடல்களை இயற்றியுள்ளார். இவருடைய கீர்த்தனைப் பாடல்கள் அனைத்தும் எல்லோரும் வாய்விட்டுப் பாடி மகிழும் இயல்புடையவை.

**பிற இலக்கிய ஆளுகை**

குணங்குடியார் தமக்குமுன் வாழ்ந்த மெய்ஞ்ஞானியரின் மொழி நடையையும் எடுத்தாண்டுள்ளார். இவர் குறிப்பாகத் தாயுமானவரிடம் மிகுந்த ஈடுபாடுடையவராக விளங்கினார் என்பதை அவர்தம் பாடல்களின் வழி அறிய முடிகிறது.

**எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியெண்ணி ஏழைநெஞ்சம்**
**புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே** (பரா.35)

என்று தாயுமானவர் பாடுவது, குணங்குடியாரிடம்,

**எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி இடைந்துமனம்**
**புண்ணாவ தற்கோ புகுந்தேன் நிராமயமே** (நிரா. 53)

என்று வெளிப்படுகிறது.

**எத்தனை விதங்கள்தான் கற்கிலும் கேட்கிலும்**
**என்இதயமும் ஒடுங்கவில்லை** (ஆனந்த. 9)

என்கிறார் தாயுமானவர். இதனையே குணங்குடியார்,

**எத்தனை விதங்கள்தான் கற்கிலும் கேட்கிலும்**
**என்மனம் இணங்கு திலையே** (ஆநந்தப் பத்து. 9:3)

என்று பாடுகிறார். இதே போல்,

**அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்**
**ஆனந்த பூர்த்தியாகி** (திருவருள் விலாச.1)

என்று தாயுமானவர் பாடுவது, குணங்குடியாரிடம்,

**அங்குஇங்கு எனஒண்ணா அகண்டபரி பூரணமாய்**
**எங்கு நிறைந்த இறையே நிராமயமே** (நிரா. 17)

எனக் காணப்படுகிறது.

**பார்க்கும்இட எங்கும்ஒரு நீக்கம்அற நிறைகின்ற**
**பரிபூர ணானந்தமே!** (பரிபூரண. 1)

என்று தாயுமானவர் பாடுவதை,

**பார்க்கும்இடம் எல்லாம் பரிபூ ரணமாக**
**ஏர்க்கையுடன் நின்ற இயல்பே நிராமயமே!** (நிரா.14)

என்று பாடுகிறார் குணங்குடியார். தாயுமானவர்,

**எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே**
**அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே** *(பரா. 221)*

என்பதைக் குணங்குடியார்,

**எந்த உயிரும் எமதுஉயிரென்று எண்ணியெண்ணிச்**
**சிந்தை தெளியஅருள் செய்வாய் நிராமயமே** *(நிரா. 157)*

என்கிறார்.

**தாயிருக்கப் பிள்ளை தளராது ஒருபோதும்**
**நீயிருக்க நான்தளர நேரோ பராபரமே** *(பரா. 249)*

எனத் தாயுமானவர் பாடுவது,

**தாயிருக்கப் பிள்ளை தளராது ஒருபோதும்**
**நீயிருக்க நான்தளர நேரோ நிராமயமே** *(நிரா. 64)*

எனக் குணங்குடியாரிடம் வெளிப்படுகிறது.

வள்ளுவருக்குப் பின்வந்த பாவலர் பலரும் திருக்குறளின் தாக்கமின்றி எழுதினாரில்லை. ஏனெனில் எல்லோரையும் வான் புகழ் அறக் கருத்துக்களால் ஈர்க்கும் வல்லமை அவர்தம் குறளுக்கு இருந்தது.

**மட்டறு பவக்கடல் தொலைக்குமொரு கலிமூா**
**மரக்கலமும் நீயல் லவோ** (ஆநந்தப் பத்து. 6)

என்று பிறவியைக் கடலாகக் கொண்டு அதைக் கடக்க உதவும் பெருங்கலனாக இறைவனைக் கண்டார் குணங்குடியார் இப்பாடல் வள்ளுவப் பேராசானின்,

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்** *(10)*

எனும் குறளை நினைவூட்டுகிறது.

நேற்று இருந்தவன் இன்றைக்கு இல்லை; இறந்து போனான் என்னும் நிலையாமை நிறைந்தது இவ்வுலகு. இதனை,

**நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் வுலகு** *(336)*

என்று குறள் குறிப்பிடுகிறது. குணங்குடியாரோ,

**இன்றுள்ளோர் நாளைக் கிருப்பதுபொய் என்பதையான்**
**கண்டுகொண்டேன் ஐயாஎன் கண்ணே றகுமானே** *(றகு. கண்மணி 37)*

என்று குறிப்பிடுகிறார்.

**கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக** *(391)*

எனும் குறளை,

**கற்றபடி நடக்கக் கல்லாத பாவிஎனைச்**
**சித்தந் தெளியஅருள் செய்வாய் நிராமயமே** *(நிரா. 56)*

என்று ஆள்கிறார் குணங்குடியார்.

**சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்:**
**கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்?**
**மாத்திரைக்குள் அருளும் மால்பே றரே** *(ஐந்தாம் திருமுறை)*

என்று தேவாரத்தில் திருநாவுக்கரசர் பாடுவதை,

**சாத்திரங்கள் ஓதுஞ் சழக்கர் தமக்கும்அருள்**
**மாத்திரைப்போ தேனும் வருமோ நிராமயமே** *(நிரா. 44)*

எனக் குணங்குடியார் எடுத்தாள்கிறார். மாணிக்க வாசகரின்,

**வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி**
**ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்**
**கோனாகி யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு**
**வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே**

*(திருச்சதகம், அறிவுறுத்தல், பா. 5)*

என்ற பாடலின் சாயல், குணங்குடியாரின்,

**ஊனாகி உயிராகி ஊனுயிர்க்கு உயிரான**
**உண்மையென் முன்னிற் கவே** *((முச. 10)*
**ஊனாகி ஊனிலுயி ராகியெவ் வுலகுமாய்**
**ஒன்றா யிரண்டு மாகி**
**உள்ளாகி வெளியாகி யொளியாகி யிருளாகி**
**ஊருடன் பேரு மாகிக்**
**கானாகி மலையாகி வளைகடலு மாகிமலை**
**கானக விலங்கு மாகிக்**

கங்குல்பக லாகிமதி யாகிரவி யாகிவெளி
கண்டபொரு ளெவையு மாகி
நானாகி நீயாகி அவனாகி அவளாகி
நாதமொடு பூத மாகி
நாடுமொளி புரியஅடி யேனுமுமை நம்பினேன்
நன்மைசெய் தாளு தற்கே (மு.ச. 22)

விண்ணாகி மண்ணாகி யெண்ணாகி வெகுவாகி
விரிவாகி மறைவு மாகி (மு.ச. 24)

எனும் பாடல்களில் இருக்கின்றன.

முகத்தில் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
(திருமந்திரம், ஒன்பதாம் தந்திரம்)

என்ற திருமூலரின் பாடலை,

முகக்கண் விழியொளியே முத்திதரும் உத்தமனே
அகக்கண் திறந்தோர்க்கு அறிவே பராபரமே (பரா. 54)

என்று குணங்குடியார் பதிவு செய்கிறார்.

'அறம்' செய்து வாழ்வதற்குரிய பணத்தைத் தாமும் அனுபவிக்காமல் அடுத்தவருக்கும் கொடுக்காமல் பூமியில் புதைத்து வைக்கும் வழக்கத்தை ஔவைப் பெருமாட்டி கடுமையாகச் சாடுகிறார். உடல் அழியக் கூடியது. உடலிலிருக்கும் உயிர் போனபின் பணத்தைத் துய்க்க முடியாது. ஆகவே உயிருடன் இருக்கும்போதே பணத்தை நல்வழியில் செலவு செய்ய வேண்டும். இறப்புக்குப் பின்னும் புகழை நிலைநிறுத்த வழிதேட வேண்டும் என்பதை,

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே! கேளுங்கள் – கூடுவிட்டிங்கு
ஆவிதான் போயினபின்பு யாரோ அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்

என்று ஔவையார் தம் நல்வழிப்பாடலில் குறிப்பிடுகிறார். இதே கருத்தைக் குணங்குடியார்,

ஓடி யலைந்தும்இவ் வையகம் முற்றும் உழன்றுழன்றும்
தேடி யெடுத்த திரவியம் யாவையும் செத்தபின்பு
நாடி யெடுப்பதும் உண்டோ? மறந்து நடக்குநெஞ்சே

**வாடி யிறந்துஅறஞ் செய்வாய் குணங்குடி வாய்த்திடுமே**

*(தவமேபெற வேண்டுமெனல். 1)*

என்று பதிவு செய்கிறார்.

இவற்றோடு குணங்குடியார் பாடல்களில் இடைக்காடர், பட்டினத்தார் போன்றோரது இலக்கிய ஆளுமைகளும் இருக்கின்றன.

**ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற**
**பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளுஞ்**
**சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே**
**யாருஞ் சதமல்ல நின்தாள் சதம் கச்சி ஏகம்பனே** (13)

என்ற பட்டினத்தார் திருவேகம்ப மாலை குணங்குடியாரிடம்,

**உற்றா ரிருந்தென்னப் பெற்றா ரிருந்தென் உனக்குதவி**
**சற்றா யினும்இல்லை சொன்னேன்சொன் னேன்இது சத்தியமாய்ச்**
**செற்றாலும் வைத்தடி வாங்காமல் நிற்கிற் செயம்பெறலாம்**
**கற்றார் குணங்குடி கொண்டிடு வாய்மனக் கண்மணியே**

*(தவமேபெற வேண்டுமெனல். 7)*

என்று வெளிப்படுகிறது.

மெய்ஞ்ஞானக் கருவூலமாக, மெய்ஞ்ஞானக் களஞ்சியமாக, மெய்ஞ் ஞானச் செல்வராக, மெய்ஞ்ஞானக் கடலாக விளங்கிய குணங்குடியார் ஒரு தேர்ந்த இலக்கியப் படைப்பாளியாகவும் திகழ்கிறார். அவர்தம் அருள் ஞானப் பாடல்களில் கற்பனைச் சிறப்பு, மரபுத் தொடர்கள், வழக்குத் தொடர்கள், சொல்லடுக்குகள், பழமொழிகள், பரிபாஷை, மோனை, எதுகை, இயைபு, அந்தாதித் தொடைகள், உவமை, உருவகம், வினாத் தொடர்கள், கருத்துக்களை நிரல் படுத்திக் கூறுதல், பிறமொழிச் சொற்களின் ஆளுகை, பிற இலக்கிய ஆளுகை, உண்மையை உபதேசிப்பது, மெய்ப்பொருளை விளக்குவது, முற்பகுதியில் ஒரு கருத்து - பிற்பகுதியில் அதற்கு முரணான கருத்து, உரையாடல் அமைப்பு, திரும்பத் திரும்பக் கூறுதல், ஒரே மாதிரியான வாக்கிய அமைப்பைக் கையாள்வது, ஒலி நயம் மிக்க சொல்லாட்சி போன்ற பல உத்திகள் இருக்கின்றன. இவை குணங்குடியாரின் இலக்கியப் படைப்பாளுமைச் சிறப்பை வெளிக்காட்டுகின்றன.

☯

## 5. ஞானக்களஞ்சியம்

ஞானநெறியைப் பின்பற்றியவர்கள் சமயங்களுக்குள் வாழ்ந்தாலும் தம்முடைய மனங்களை மதங்கடந்த மானுட நேயமுடையவையாக வைத்திருந்தனர். தமிழ்நாட்டுச் சித்தர் பலரும் தங்களின் சிந்தையை இவ்வாறே செதுக்கியிருந்தனர். ஏக தெய்வக் கொள்கை என்றைக்கோ தமிழகத்தில் காலூன்றி இருக்கிறது. இதில் பண்பட்டுப் பக்குவமடைந்த ஞானியர் காலந்தோறும் இருந்திருக்கின்றனர்.

அய்யன் திருவள்ளுவரும் இறைவனை, 'ஆதி பகவன்,' 'வாலறிவன்,' 'மலர்மிசை ஏகினான்,' 'வேண்டுதல் வேண்டாமை இலான்,' 'பொறி வாயில் ஐந்தவித்தான்,' 'தனக்குவமை இல்லாதான்,' 'அறவாழி அந்தணன்,' 'எண்குணத்தான்' எனப் பொது நிலையிலேயே பாடுகிறார்.

'புதிய கவி ஊற்றாகப் பொங்கிப் பீறிட்டு எழுந்த' (சிற்பி) கம்பரும் தம் இராமாயணக் கடவுள் வாழ்த்தில்,

**உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்**
**நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா**
**அலகுஇலா விளையாட்டு உடையார் அவர்**
**தலைவர்; அன்னவர்க்கே சரண் நாங்களே**

எனப் பொதுநிலையிலேயே பாடுகிறார்.

எல்லாம் செய்ய வல்ல கடவுளைப் 'பொங்குபல சமயமெனும் நதிகள் எல்லாம் புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கி ஓங்கும் கங்குகரை காணாத கடலே, எங்கும் கண்ணாகக் காண்கின்ற கதியே, அன்பர் தங்க நிழல் பரப்பி மயற் சோடையெல்லாம் தணிக்கின்ற தருவே, பூந்தடமே, ஞானச் செங்குமுத மலரவரு மதியே' (திருவருட்பா மூன்றாம் திருமுறை. 28) என்றெல்லாம் அழைத்துப் போற்றும் இராமலிங்கர்,

**சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே**
**சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே**
**ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்**

என உலக மக்களை அழைத்து அவர்கள் குறைகளை உணர்த்து கிறார். 'அலைந்தலைந்து வீணேநீர் அழிதல்அழ கலவே' என அவர்களுக்கு அறிவுறுத்துகிறார். இவ்வாறு அறிவுறுத்தி சன்மார்க்க நெறி தழைத்தோங்குவதற்கு வித்திடுகிறார். அந்நெறியின் தலைவர் 'ஒருத்தர்' என்று குறிப்பிடுகிறார்.

**நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே நிறுத்த**
**நிருத்தமிடும் தனித்தலைவர் ஒருத்தர் அவர்**
**வீதியிலே அருட்சோதி விளையாடல் தாமே புரிய**
**மேவுகின்ற தருணம்அது கூவுகின்றேன் உமையே**

(திருவருட்பா ஆறாம் திருமுறை. 182)

என மக்களை ஏக இறைவனின் பக்கம் கூவி அழைக்கிறார்.

'தெய்வம் பலப்பல சொல்லிப் பகைத் தீயை வளர்ப்பவர் மூடர்,' 'உய்வதனைத்திலும் ஒன்றாய் என்றும் ஓர் பொருளானது தெய்வம்,' 'யாரும் பணிந்திடும் தெய்வம் பொருள் யாவினும் நின்றிடும் தெய்வம் பாருக்குள்ளே தெய்வம் ஒன்று இதில் பற்பல சண்டைகள் வேண்டாம்' என்று சமரசம் பேசும் மகாகவி பாரதியார், புதிய ஆத்தி சூடியின் பரம்பொருள் வாழ்த்தில்,

**ஆத்தி சூடி யிளம்பிறை யணிந்து**
**மோனத் திருக்கு முழுவெண் மேனியான்**
**கருநிறங் கொண்டுபாற் கடல்மிசைக் கிடப்போன்**
**மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்**
**ஏசுவின் தந்தை யெனப்பல மதத்தினர்**
**உருவகத் தாலே யுணர்ந்துண ராது**
**பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்**
**ஒன்றே**

என்று உணர்த்துகிறார். பின்னர்,

**.........அதனியல் ஒளியுறு மறிவாம்**
**அதனிலை கண்டார் அல்லலை யகற்றினார்**
**அதனருள் வாழ்த்தி யமரவாழ் வெய்துவோம்**

என்று எல்லோரும் அமர வாழ்வு எய்த வேண்டும் என்கிற தம்முடைய தன்னலமற்ற எண்ணத்தை வெளியிடுகிறார். விநாயகர் நான்மணி மாலையிலும் தம்முடைய கருத்தை உறுதியாகவும் தெளிவாகவும் பாரதியார் எடுத்துரைக்கிறார்.

**கடமை யாவன தன்னைக் கட்டுதல்,**
**பிறர்துயர் தீர்த்தல், பிறர்நலம் வேண்டுதல்**

**விநாயக தேவனாய், வேலுடைக் குமரனாய்**
**நாரா யணனாய், நதிச்சடை முடியனாய்**
**பிறநாட் டிருப்போர் பெயர்பல கூறி**
**அல்லா யெஹோவா எனத்தொழு தன்புறும்**
**தேவருந் தானாய், திருமகள், பாரதி**
**உமையெனுந் தேவிய ருகந்தவான் பொருளாய்**
**உலகெலாம் காக்கும் ஒருவனைப் போற்றுதல்**

எனத் தெளிவுறுத்தும் பாரதியார், தன்னைக் கட்டுதல், பிறர் துயர் தீர்த்தல், பிறர்நலம் வேண்டுதல், ஓர் இறைவனைப் போற்றுதல் எனும் இந்நான்கும் பூமியில் எவர்க்கும் கடமையாகும் என்கிறார். இந்த நான்கைச் செய்யும் போது அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு பயன் கிட்டும் எனவும் கூறுகிறார்.

இத்தகைய கொள்கையுடையவராக விளங்கிய ஞானச் சித்தர் குணங்குடியார் தம்முடைய இறைக் கொள்கையிலும் தெளிவாக இருக்கிறார். சமுதாயத்தில் வாழும் மக்களின் குற்றங்களையெல்லாம் தம்முடைய குற்றங்கள், குறைகள் போலக்கொண்டு அவற்றிற்கெல்லாம் தாமே பொறுப்பேற்று இறைவனிடம் முறையிட்டுக் களைய வேண்டுகிறார். சமரசச் சிந்தனையிலும் இறைவனை அடைதலையே நோக்கமாகக் கொள்கிறார்.

**இறையியல் சிந்தனை**

இஸ்லாமிய மெய்ஞ்ஞானப் புலவரான குணங்குடியார் படைத்துப் பாதுகாக்கும் இறைவனுக்கு, ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்று இஸ்லாம் வலியுறுத்தும் கோட்பாட்டையே போற்றிப் பாடுகின்றார்.

எல்லாவற்றையும் படைத்துப் பாதுகாத்து எல்லா உயிர்களுக்கும் வேண்டுவனவற்றையெல்லாம் வாரி வழங்கும் வள்ளன்மைக் குணம் கொண்டவன் இறைவன். அவனே எண் திசைகளிலும் நிறைந்து காணப்படுகின்றான். எல்லார்க்கும் அமுதளிப்பது போல் கல்லினுள்ளிருக்கும் தேரைக்கும் இறைவனே அமுதளிக்கிறான் என்று குணங்குடியார் இறைவனின் காக்கும் இயல்பினைக் குறிப்பிடுகின்றார்.

இறைவனுக்குப் படைக்கும் தொழில் இயல்பானது. அடியவர்க்கு விரும்புவனவற்றை அளிப்பதில் கற்பகம்

போன்றவன் அவன். அவனைத் தவிர எவராலும் எதனாலும் மனிதர்க்கு உதவ இயலாது. இறைவன் இணையற்றவன். அவன் வல்லவர்களுக்கெல்லாம் வல்லவன். அவனையன்றி வேறு வல்லவன் இல்லை.

இறைவனுக்கு ஈடாக வேறு எவரும் எதுவும் இல்லை. தனக்கு உவமை சொல்ல முடியாத வல்லமை உடைய ஏகபராபரன் அவன். எங்கும் நிறைந்து இருப்பவன். உண்மையானவன். அவனைத் தவிர வேறு உண்மையான தெய்வம் இல்லை என்பதை உணர வேண்டுகிறார். இறைவனைத் தவிரப் புறந்தொழக் கூடாது என்னும் தம் உணர்வையும் குணங்குடியார் வெளியிடுகிறார்.

இறைவனையன்றி ஓர் அணுவும் அசையாது. அவனே பேறுகளிலெல்லாம் பெரும் பேறு. எல்லாப் பொருள்களிலும் பெரும் பொருள். சர்வ பரிபூரணப் பொருள். அவனே அனைத்தி லும் பெரியவன்.

இறைவன் வாக்கு, மனம் எல்லாவற்றையும் கடந்தவன். எதற்கும் எட்டாதவன். அறிவுக்கு அப்பாற்பட்டவன். வேதம் கடந்தவன். இரவு பகலற்றவன். பிறப்பு இறப்பு இல்லாதவன். முதலும் முடிவும் இல்லாதவன். போக்குவரவற்றவன். நேற்று இன்று நாளை என்று எல்லாக் காலத்திலும் எங்கும் நிறைந்து இருக்கக் கூடியவன்.

எல்லை நிலை சொல்ல முடியாத வல்லமை உடையவன். எங்கும் எப்போதும் நிறைந்து இருக்கும் ஞானோதயம் என்றெல்லாம் குறிப்பிடும் குணங்குடியார் எங்கும் நிறைந்த இறைவனின் இயல்பினைப் பல பாடல்களிலும் குறிப்பிடுகிறார்.

'உயிர்க்குயிராய் என் உள்ளுள் உலாவிய நீ' என்று இறைவன் தன்னில் கலந்துள்ள நிலையைக் கூறுகிறார். எல்லாப் பொருளும் தானாய் இருக்கிறான் இறைவன். அவன் அருள் ஒளி. ஏக உருவானவன். அவன் எங்கும் நிறைகின்ற பொருள். அவனையன்றி வேறு எவனும் எதுவும் இல்லை.

இறைவனின் எல்லாமுமாகிய நிலையை, எங்கும் நிறைந்த இயல்பை 'ஊனாகி, ஊனில் உயிராகி, எவ்வுலகுமாகி, ஒன்றாகி, இரண்டாகி, உள்ளாகி, வெளியாகி, ஒளியாகி, இருளாகி, ஊருடன்

பெருமாகி, கானாகி, மலையாகி, விலங்குமாகி, கங்குல் பகலாகி, மதியாகி, இரவியாகி, வெளிகண்ட பொருள் எவையுமாகி, நானாகி, நீயாகி, அவனாகி, அவளாகி, நாதமொடு பூதமுமாகி' என்று பாடுகிறார்.

இறைவனின் பல்வேறு பெரும்பண்புகளுள் மேலானதாகிய அருட் பண்பினைக் குணங்குடியார் பெரிதும் போற்றுகிறார். இறைவனை அருள் மயமாகவும், ஆனந்தம் சேர்க்கும் அருளாகவும், கங்கற்ற பேரருட் கங்கையாகவும், பேரருட் செல்வமாகவும், அருள் வெள்ளமாகவும், அருள் விரிவாகவும் வருணிக்கிறார்.

அருள் மிகுந்த இறைவன் மன்னிக்கும் பண்பாளனாகத் திகழ் கின்றான். அன்பில் சிறந்த அன்னைபோல் பிறர் மன்னிக்க முடியாத குற்றத்தையும் இறைவன் மன்னித்தருள்வான். 'எத்தனை குற்றங்கள் அடியேன் செய்திருந்தாலும், பொறுத்தருள்வது இறைவனுக்கு அழகாகும்' என்று பாடும் குணங்குடியார் மனித குலத்தின் ஆபத்தையும், அடிமைகளாகிய மக்கள் செய்யும் பாவத்தையும் நீக்கியருள வேண்டு கிறார்.

இறைவன் எல்லாம் அறிந்தவனாவான். குணங்குடியார் இறைவனை அறிவு மயமாகப் பாடுகிறார். இறைவனை இன்பப் பெருக்கு என இன்பமாகவும் கொண்டு பாடியுள்ளார். இறைவனின் ஆற்றல் பண்பையும் குணங்குடியார் போற்றிப் பாடுகிறார். இறைவன் எவ்விதக் குறையுமற்றவன்; மாசினின்றும் நீங்கிய தூய்மையாளன். நிறைவுடையவன் என்றும் எடுத்துரைக்கிறார்.

இறைவனின் தூய்மைப் பண்பை விளக்கிய குணங்குடியார் அவனின் பரிபூரணமான நிறைவுப் பண்பையும் பூரணமே, பரிபூரணானந்தமே, காரணிக்கும் பூரணமே என்றெல்லாம் பல பாடல்களில் விளக்குகிறார்.

**சமுதாயச் சிந்தனை**

இலக்கியம் காலத்தைக் காட்டும் கண்ணாடியாகவும், வரலாற்று ஆவணமாகவும், சமகாலப் பழக்க வழக்கங்களின் பதிவேடாகவும் இருக்கின்றது. இது மனித சமுதாயத்தின் நிலைப்பாடுகளை உணர்த்துவதன் மூலம் சமுதாயத்தைச்

சித்திரிக்கின்றது. ஒவ்வொரு படைப்பாளனும் சமுதாயத்தின் உறுப்பினன் என்பதைவிட ஒட்டுமொத்தப் பிரதிநிதியாகவும் திகழ்கிறான். ஆகவே படைப்பாளன் தான் வாழ்ந்த காலத்தையும் தன்னுடைய மன உணர்வுகளையும் அதில் பதிவு செய்கிறான். அவ்வகையில் சூஃபிகளும் சமுதாயப் பொறுப்புணர்வு மிக்கவர் களாகத் திகழ்ந்தார்கள். இவர்களிடம் இருக்கும் சமுதாயச் சிந்தனை அனைவரும் மனம் தூயராகிப் பாவங்களிலிருந்து விடுதலை பெற்று இறைவனை அடைதலையே நோக்கமாகக் கொண்டிலங்குகிறது.

தாம் மட்டும் இறைவனை அடையவேண்டும் என்றில்லாமல் சமுதாயத்தில் வாழ்கின்ற எல்லா மக்களும் சாதி மத இன பேதமின்றி இறைவனை அடைய வேண்டும் என்று உண்மையான சூஃபிகள் கருதுவர். குணங்குடியார் மனிதர் ஒவ்வொருவரும் செய்யும் பழிபாவங்களை யெல்லாம் தம்முடைய பழிபாவங்களாகக் கருதிப் பரம்பொருளிடம் முறையிடுகிறார். அப்பழுக்கற்ற தூய்மையான சிந்தையாளரான குணங்குடியார் இவற்றிலிருந்தெல்லாம் தம்மைக் கரையேற்ற வேண்டும் என்று கேட்பது ஒட்டு மொத்த மனித குல மேம்பாட்டுச் சிந்தனையே அன்றி வேறு இல்லை. குணங்குடியாரின் பாடல் முழுதும் எங்கு பார்த்தாலும் சூஃபித்து வத்தின் பாற்பட்ட சமுதாயச் சிந்தனையே இடம்பெற்று இருக் கின்றது.

நற்பண்பு மனிதனை உயர்த்தும்; தீய பண்பு கீழான நிலைக்குத் தள்ளும். அன்றாட வாழ்வில் மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய எல்லா நல்ல செயல்பாடுகளும் நற்பண்புகளாகும். மனிதர்களுடைய துர்க் குணங்கள் எல்லாம் போய் நற்குணங்கள் வரவேண்டும் என்று விரும்புகிறார் குணங்குடியார். சமுதாயச் சீர்கேடுகளுக்கெல்லாம் காரணமாக விளங்குவோரைக் குணங்குடியார் வம்பன் என்னும் சொல்லால் அழைக்கிறார். இவர்களை,

**கல்லாத வம்பன் அறி வில்லாத வம்பன்ஒரு**
**காசும் பெறாத வம்பன்**
**கடுவாயி லும்கொடிய வம்பன் வெருட்டிக்**
**கடிக்கும் நாயான வம்பன்**
**பொல்லாத வம்பன் உறவில்லாத வம்பன்**
**பொறாமையே கொண்ட வம்பன்** *(மு.ச. 53)*

**தந்தைதாய் தம்மனதை நோவித்த வம்பன்**
**தாரதரங் கெட்ட வம்பன்** (மு.ச. 55)

எனும் பாடலில் அடையாளம் காட்டுகிறார். இப்பாடலில் சுட்டப் பட்டிருக்கும் பண்புகளெல்லாம் மனிதர்கள் களைய வேண்டிய பண்புகளாகும். இங்ஙனம் மனிதர் களைய வேண்டிய தீய பண்புகளை முகியித்தீன் சதகத்தில் குணங்குடியார் பலபடப் பதிவு செய்கிறார்.

**அன்பும் அறமும்**

அன்பை அடிப்படையாகக் கொண்டதே உயிர் நிறைந்த இந்த உடம்பு என்பதை, 'அன்பின் வழியது உயிர்நிலை' என்கிறார் வள்ளுவர். அன்பு எல்லோரிடமும் இருக்க வேண்டிய ஒன்றாகும். குணங்குடியார் அன்பு இருந்தால் தான் இறைவனை அடைய முடியும் என்கிறார்.

மனத்தளவில் குற்றம் இல்லாதவனாய் இருந்து யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாது, இயன்ற அளவு எல்லோர்க்கும் நற்காரியங்களைச் செய்வதே அறம். அறம் செய்வதற்கு வழங்காத கையை உடையவர்களைத் திட்டுகிறார். நற்செயல்களைச் செய்வதும் அறத்தின்பாற் பட்டதே. அதனால் அச்செயல்களைச் செய்ய வேண்டும். மனிதனுக்கு எல்லாவற்றையும் விட மேலானது தேவையானது ஒழுக்கமாகும். எனவே அதனைக் கைக்கொள்ள வேண்டும் என்கிறார்.

**நன்னடத்தைகள்**

மனித வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய நன்னடத்தைகள் பல உள்ளன. அவற்றைப் பின்பற்றி வாழ்ந்தால் வாழ்வு சிறப்புறும். இவற்றுள் தன்னைப்போல் அயலானையும் நேசித்தல் சிறந்த நன்னடத் தைகளுள் ஒன்றாகும். இதனைக் குணங்குடியார் பின்பற்ற வேண்டுகிறார்.

உண்மையே மனிதனை வாழ்க்கையில் உயர்த்தும், எல்லா நிலைகளிலும் துணை நிற்கும். உண்மையைக் கடைப்பிடிக்காத கொடியவர்களைக் குணங்குடியார் கண்டிக்கிறார். உழைப்பு மனிதனைச் சிறப்படையச் செய்யும். வறுமையைப் போக்கும். அதனால் உழைப்பைப் பேண வேண்டும். ஒவ்வொரு நிலையிலும் தன்னைத் தானே உயர்த்திக் கொள்ளாமல் தாழ்மையுடனும்,

பணிவுடனும் நடந்து கொள்பவனுக்கு மேலும் மேலும் உயர்வு கிட்டும். பிறர் நலம் பேண வேண்டும். பிறரை வஞ்சித்து வாழக்கூடாது. நாவடக்கம் வேண்டும். எந்தச் சூழ்நிலையிலும் மனிதன் நீதி நேர்மைக்குப் புறம்பாகச் செயல்படக் கூடாது.

மனிதர்கள் நல்லவர்களாக இருக்க வேண்டும். அவ்வாறு இருந்தால்தான் அவர்களுக்கு எந்தத் தீங்கும் இல்லை. மனிதர்கள் தங்கள் செயல்களில் நடக்க வேண்டிய நல்வழியே நேர்வழி. மனிதர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நன்னடத்தைகளில் தலையாயது நேர்வழி என்கிறார் குணங்குடியார்.

**மனித நேயம்**

மனிதனை மனிதன் நேசித்தலே மனித நேயம். அதிகாரத்தாலும் பணத்தாலும் மேலோங்கி இருப்பவர்கள் தங்களுடன் இருக்கும் சக மனிதர்களை மதிப்பதில்லை. அதனைக் 'கததகத என்று எரியும் பணத்தீ' எனக் குணங்குடியார் கடிந்துரைக்கிறார்.

> **பிணம்பிடுங்கித் தின்னும் பேய்போற் சிலநுளையர்**
> **பணம்பிடுங்கித் தின்பதென்ன பாவம்நந் தீஸ்வரனே** *(நந். 39)*

என நந்தீஸ்வரனிடம் 'பணம் பிடுங்கித் தின்னும் இயல்புடைய மனிதர்களின் பாவத்தைத் தொலைக்க' வேண்டுகிறார்.

ஒருவன் பொறுமையைக் கைக்கொண்டால் அவன் எல்லாச் சூழ்நிலைகளிலும் வெற்றி பெறலாம். பார்க்கும் போது மனம் மகிழாமல் முகம் மட்டுமே மலரப் பழகுவது நட்பு அன்று. சமுதாயத்தில் வாழும் மக்கள் அனைவரும் ஒற்றுமையுடன் ஒருவருக்கொருவர் உறவாக இருந்தால்தான் சமுதாயம் முன்னேற்றமடையும். எந்தத் துன்பமும் இராது. பிறருக்குத் தீமை செய்யக் கூடாது. தீயோருடன் உறவு வைத்துக் கொள்ளக் கூடாது. அநியாயம் செய்து வாழ்பவர்களின் வாழ்க்கை நிரந்தரமாக இருக்காது. மனிதர்கள் பாவம் செய்தல் கூடாது என்றெல்லாம் குணங்குடியார் மனிதவாழ்க்கை மேம்பாட்டுக்கான வழிகளைக் கூறு கிறார்.

**பொய், கள், வீணுரை**

பொய் சொல்லுதல் கூடாது. பொய் சொல்லி வாழ்பவனின் வாழ்வு தாழ்வடையும். வஞ்சகம் செய்து வாழ்தல் இழிவானது. தான் என்கிற ஆணவம் மனிதனிடம் இருக்கக் கூடாது.

மற்றவர்களின் பொருட்களை ஏமாற்றி மோசடி செய்யக்கூடாது. எல்லாச் செயல்களிலும் உண்மையாக ஈடுபட வேண்டும். மாறாக நடிக்கக் கூடாது. பிறருக்குக் கெடுதலும் துரோகமும் செய்யக் கூடாது என்றும் குணங்குடியார் வலியுறுத்துகிறார்.

இறைக் காதல் போதையில் மூழ்கி இருத்தலை ஆதரிக்கும் குணங் குடியார், மனிதனை அறிவிழக்கச் செய்யும் மதுவையும், பிற போதைப் பொருட்களையும் வெறுக்கிறார். இதனை,

**கஞ்சாவின் வர்க்கமுங் கஞ்சினிம யக்கமுங்**
**கருதாது ளருள்பு ரியவும்** (அ.ச. 37)

என வேண்டுகிறார். கள் உண்பவர்களைக் 'கள் இனங்கள் உண்ணும் கழுதை காள்!' என்று இடித்துரைக்கிறார்.

வீண் பேச்சு பேசித் திரிபவனுக்கு வாழ்க்கையில் எந்தவிதமான முன்னேற்றமும் இருக்காது. வீண் பேச்சுப் பேசுவதும் தவறு; வீணர்களாக இருப்பதும் தவறு என்கிறார் அவர்.

பிறருக்கு நன்மை செய்து வாழ்வதற்குப் பதிலாகத் தீமை செய்து வாழ்வதும், பிறரது பொருளை அல்லது உழைப்பைச் சுரண்டி வாழ்வதும் நேரான பாதையல்ல. இவ்வாறு வாழ்வோரை,

**ஆருக்கு வைத்த கூழாமினுஞ் சரிகாணில்**
**அள்ளிஅடை கின்ற பாவி**
**விரிதருந் தொப்பையை விருப்பொடு வளர்க்கமேன்**
**மேலும்அலை கின்ற பாவி** (மு.ச.70)

எனக் கடிந்துரைக்கிறார்.

சமுதாயத்தில் வாழக்கூடிய மக்களுள் பெரும்பாலோர் சுயநலத் தைப் பேணுகின்றனர். தன்னலம் பாராமல் பொதுநலம் பேணி வாழக் குணங்குடியார் வலியுறுத்துகிறார். சமுதாயத்தில் வாழும் மனிதர்களை அழிக்கும் செயல்களில் சோம்பலும் ஒன்றாகும். சமூகப் பொறுப்பு மிக்க புலவர்கள் எவரும் சோம்பலைப் பழிக்கத் தவறியதில்லை. குணங்குடியாரும் சோம்பலைப் பழித்துரைக்கிறார். வீணாகப் பொழுது போக்குபவர்களையும் இவர் கண்டிக்கிறார்.

மனித உணர்வுகளுக்கு மதிப்பு அளிக்க வேண்டும். யாரையும் புண் படுத்துதல் தகாது. தன்மானத்துடன் வாழ வேண்டும். நன்றியுணர்வுடன் இருப்பதுடன் பிறர் செய்த உதவிகளை நினைத்துப் பார்க்க வேண்டும். பழி வாங்கும் உணர்வு

ஆகாது. கோபம் கொள்ளுதல் கூடாது. பொறாமை கூடாது. பிறரைத் துன்புறுத்தக் கூடாது என்பன போன்ற சமுதாய வாழ்வியல் சிந்தனைகளையும் குணங்குடியார் தம் பாடல்களில் முன்வைக்கிறார். இவ்வாறு வாழ்வோர் மட்டுமே பராபரப் பொருளான இறைவனோடு ஒன்றிணைய முடியும் என்கிற தம் உள்ளக் கருத்தையும் எடுத்துரைக்கிறார்.

**சமரசச் சிந்தனை**

சூஃபிகள் சாதி மத இன பேதங்களுக்கு அப்பாற்பட்டவர்கள்; உலகத்து உயிர்களை எல்லாம் ஒன்றாகக் கருதும் இயல்புடையவர்கள். எவ்வித பேதமுமின்றி அனைவரும் இறைவனுக்குள் ஒன்றிணைய வேண்டும் என உண்மையான சூஃபிகள் கருதுவார்கள். சாதி சமயங்களைக் கடந்த எல்லோர்க்கும் பொதுவான இவர்களின் வேணவா ஒட்டுமொத்த மனித குலத்தின் மீட்சியேயாகும். 'சாதி குலம் எங்கட்கில்லை' எனும் வால்மீகிச் சித்தரைப் போன்றும், 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனும் திருமூலரைப் போன்றும் வாழும் சூஃபிகளின் மானுட நேயம் எவரையும் விஞ்சும். சூஃபி ஞானி மௌலானா ரூமி,

**நான் கிறித்தவன் அல்லன்**
**யூதன் அல்லன்**
**பார்சி அல்லன்**
**முஸ்லீமும் அல்லன்**

எனத் தம் மதம் கடந்த நிலையை வெளியிடுகிறார்.

குணங்குடியாரும் தாம் சமயங் கடந்த சன்மார்க்கவாதி என்பதைப் புலப்படுத்துகிறார். எல்லோரையும் நேசிக்கும் பேருள்ளமுடைய குணங்குடியார் தம் குருநாதராகிய இறைவனைப் பாடும்போது,

**சாதிவரை யற்றகுரு நாதனே முத்திநிலை**
**தருவதினி எக்கா லமோ** (முச. 89)

எனக் கேட்கிறார். இந்து சமயத்துக் கோட்பாடுகளையெல்லாம் நன்குணர்ந்த குணங்குடியார் அச்சமயத்துக் கடவுளரையெல்லாம் தம் சமயத்து ஏக இறைவனாக உருவகித்து பரிபாஷையில் பாடிப் பரவுகிறார். இந்து சமயத்துக் கடவுளரின் பெயர்களைக் காரணகாரிய அடிப்படையில் மனோன்மணிக் கண்ணி, நந்தீஸ்வரக் கண்ணிகளில் எடுத்துரைக்கிறார். மனோன்மணிக் கண்ணியின்

இறுதியில் உள்ள,

**வாதிஅந்தம் கடந்தஉமை யாள்தன் பாதம்**
**அகண்டபரி பூரணமாம் ஐயர் பாதம்**
**சோதிஅந்தம் கடந்தகண பதியின் பாதம்**
**தொழுதிறைஞ்சிக் கரங்குவித்துப் போற்றிசெய்து**
**ஆதிஅந்தம் கடந்தநந்தி பாதம் என்றும்**
**வாலைமனோன் மணியம்மை பாதம் என்றும்**
**ஓதிஅந்தம் கடந்தண்டம் இரண்ட தாக**
**ஒன்றுமறி யாவறிரு ஜுரைசெய் தானே**

எனும் பாடலில் உமையாள், சிவபெருமான், கணபதி, நந்தீஸ்வரர் ஆகிய பெயர்களைச் சிலேடைப் பொருளில் பாடுகிறார். இவ்வாறு குணங்குடியார் பாடுவது அவர் ஒரு சமய ஒருமைப்பாட்டாளர் என்பதைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

குணங்குடியார் எல்லா மதங்களையும் சமரச நோக்கில் பார்க்கின்றார். மக்கள் அறியாமல் உன் தெய்வம் என் தெய்வம் என்று சண்டையிடுகின்றனர். ஆனால் எல்லாத் தெய்வங்களும் ஒன்றுதான். அவரவர் தெய்வமும் அவரவர் சமயமும் அவரவர் களுக்கு உரியது. ஆகையால் யாருடைய சமயத்தையும் யாருடைய தெய்வத்தையும் குறைத்து மதிப்பிடலாகாது என்று சமயப் பொறையை வலியுறுத்துகிறார் குணங்குடியார்.

**மண்ணான வஞ்சநெஞ் சத்தினர்க் கேறாது**
**மறைவுதரு புதையலாகி**
**மதபேதம் ஓதிமதி கெட்டவர்க் கெட்டாத**
**வான் கருணை வெள்ளம்** *(மு.ச. 28)*

என்ற பாடலில் மத பேதங்களைக் கூறிச் சமயத் தர்க்கம் புரிபவர்களை மதி கெட்டவர் என்று கடுமையாகச் சாடுகிறார். அருள் வடிவாகிய இறைவன் மதத்தின் பெயரால் பகை வளர்த்து இரத்தம் சிந்தும் வெறியர்களுக்கு அகப்பட மாட்டான் என்கிறார். மதபேதம் பேசித் திரியும் மதி கெட்டவர்க்கு எட்டாத வான் கருணை வெள்ளம்தான் இறைவன் எனவும் கூறுகிறார். மதமற்ற ஞானம் ஸூஃபிகளின் நெறி. ஸூஃபி நெறி நின்று சமரசத்தைப் பாடும் குணங்குடியார், இறைவனிடம் மத வெறியற்ற உம் மதம் வேண்டும் என்று வேண்டுகிறார். இதனை,

**மதம்அத்த னையும்அற்ற மதம்உற்று யானும்உம்**
**மதமாக அருள்பு ரியவும்** *(அ.ச. 97)*

என்று வேண்டுகிறார்.

சமயப் பொதுமை பற்றிப் பாடிய குணங்குடியார் இறைவனை அடையும் நெறிமுறைகளைப் போற்றுகிறாரே தவிர எந்தச் சமயத்துக் கடவுளரையும் குறிப்பிட்டுத் தாழ்த்திக் கூறவில்லை. பிற ச்மயத்தவர் இறைவனைக் குறிக்கப் பயன்படுத்தும் பெயர்களையும் சொற்களையும் தம்முடைய பாடல்களில் ஆளுகிறார்.

சூஃபி நெறிப் பாவலரான குணங்குடியார் தமிழ் நாட்டுச் சூழலுக் கேற்ப சூஃபி நெறியைப் போற்றிப் பாடியுள்ளார். சைவ சித்தாந்தத்தில் பதி, பசு, பாசம் எனும் மூன்று உண்மைகள் உள்ளன. இதனைக் குணங்குடியார் தமது பாடல்களில் எடுத்தாள்கிறார். இறை, ஆன்மா, உலகம் பற்றியும் கூறுகிறார்.

சைவ சமயம் கூறும் அனைத்தும் கடந்த நிலையைக் குணங்குடியார் பாடுகிறார். சூஃபிகள் இறைவனுடன் ஆன்மா கலப்பதாகக் கூறுவர். ஆனமா ஆசாபாச மாசுகளை அகற்றித் தன்னை மறந்து இறைவனில் திளைக்கும் போது இறைவனில் ஒன்றி விடுகிறது. தன்னை இழந்த நிலையில் ஆன்மா, தான் மெய்ப்பொருள் என்னும் உணர்வைப் பெறுகிறது. இவ்வுணர்வு சிறு பொழுதே தோன்றும் என்றும் தொடர்ந்து இருக்கவும் செய்யும் என்றும் குணங்குடியார் குறிப்பிடுகின்றார்.

சர்வ சமய சமரசம் பாடும் குணங்குடியார் இறைக் கோட்பாட்டிலும் இறைவன் ஒருவனே, அவன் உருவமற்றவன், நிகரற்றவன், முற்றும் அறிந்தவன், வல்லவன், அருளாளன், அன்பாளன், இன்பமானவன், கடந்தும் கலந்தும் உள்ளவன் என்று இறைவனின் தன்மைகளை விதந்து உரைக்கிறார்.

எல்லாவற்றையும் கடந்துள்ள இறைவன் அனைத்திலும் கலந்துள்ளான் என்பது சைவ சித்தாந்தமும் சூஃபி நெறியும் ஒருங்கே போற்றும் கொள்கையாகும். இதனையே குணங்குடியாரும் விளக்குகிறார். இதனுடன் எங்கும் நிறைந்துள்ள இறைப் பண்பினையும் போற்றிப் பாடுகின்றார்.

தமிழ்நாட்டில் இறை வழிபாட்டில் மலர் தூவி, மாலை சூட்டி, அர்ச்சனை நிகழ்த்துவது உருவ வழிபாட்டில் காணப்படும் மரபாகும். மலர் தூவி இறைவனை வழிபடுவது இஸ்லாமிய மரபன்று. எனினும் இத்தமிழ் மரபைக் குணங்குடியார்,

**பூத்த மலரெடுத்துன் பொன்னடியை யாளுமென்றுங்**
**காத்திருந்து பூசைசெய்வேன் கண்ணே பராபரமே**

*(கண்மணி மாலைக் கண்ணி. 82)*

எனும் கண்ணியில் போற்றிப் பாடுகின்றார். மலரில் மணம் கலந்திருப்பது போன்று இறைவன் எங்கும் கலந்திருப்பதை மலர் கொண்டு விளக்கும் பாங்கு குணங்குடியாரிடம் காணப்படுகிறது.

இறைவன் ஒருவன் என்பதை வலியுறுத்தும் குணங்குடியார் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய எல்லாத் தொழில்களையும் அவனே இயற்றுகிறான் எனும் கருத்தைத் தம் பாடல்களில் இழைபோடச் செய்கிறார்.

உலகப் படைப்புப் பற்றியும் ஆன்மா முன்னேறுவதற்குத் தடைகளாக இருப்பன பற்றியும் அவற்றைக் கடந்து முன்னேறும் வழிகளைப் பற்றியும் குணங்குடியார் கூறுவன சைவ சித்தாந்தத்துக்கும் சூஃபித் தத்துவத்துக்கும் பொதுவானவை ஆகும்.

பகை வளர்த்துப் பிரிக்கும் மதங்கள் அத்தனையையும் விட்டு விட்டு 'ஒன்றே குலம்' என 'உயிர்களையெல்லாம் இணைக்கும் உன் அன்பு மதத்தை எனக்கு அருள் புரிய வேண்டும்' என்று இறைவனை வேண்டு கிறார்.

தூய அருள் நெறி எங்கும் பரவ வேண்டும் என்றும், மதபேதமற்ற அன்புலகம் தோன்ற வேண்டும் என்றும் குணங்குடியார் வேண்டுகிறார். இதற்குத் தம் பாடல்கள் உதவ வேண்டும் என்றும் விரும்புகிறார்.

**ஏழை அடி யேன் அறிவி லாமல்உள றுந்தமிழ்க்கு**
**இரங்குவதும் எக்கா லமோ**
**தீதுமத பேதங்கள் அற்றுமே எங்குமிது**
**செல்வதுவும் எக்கா லமோ** *(மு.ச. 89)*

என்று பாடும் குணங்குடியாரின் பாடல்களைப் பிற சமயத்தைச் சார்ந்த அன்பர் பலரும் வேறுபாடு இன்றிப் படித்தனர்; படிக்கின்றனர். இதே போல் பல சமயத்தவரும் அவருக்குச் சீடராகவும் இருந்தனர். இவை யெல்லாம் அவரது ஏக்கம் ஓரளவுக்கு நிறைவேறி இருப்பதையே காட்டு கின்றன.

தமிழ் நாட்டில் வசித்து வரும் இந்து, முஸ்லீம் மக்களின் சமூக உறவுக்கு இத்தகைய பாடல்கள் பெரிதும் காரணமாகவும் பாலமாகவும் இருந்தன என்பதை யாரும் மறுக்க முடியாது.

பிற சமயக் கடவுளர் பெயர்களைக் குணங்குடியார் தம் பாடல்களில் பரிபாஷைகளாகப் பயன்படுத்துகிறார். இது அவரது சமயப் பொறையைக் காட்டுகிறது. சமரச மனப் போக்கையும் பறை சாற்றுகிறது.

வீணே அழியும் இவ்வுடல் ஒன்றுக்கும் ஆகாது. அவ்வாறு இருக்கக் குணங்குடியை அடைந்தால் இவ்வுலகப் பாவங்களில் இருந்து நீங்கி மறுமைப் பேறினைப் பெறலாம். ஆகவே எல்லோரும் குணங் குடிக்குச் செல்ல வேண்டும். அதனால் தான்,

> **பரமுத்தன் குணங்குடி தெருவில் வரும்பவனி**
> **பார்த்து வருவோம் வாருங்கள்** *(கீர்த். 1)*
>
> **போவோம் குணங்குடிக்கெல் லோரும் – புறப்படுங்கள்**
> **போவோம் குணங்குடிக்கெல் லோரும்** *(கீர்த்.21)*

என்று பாடி, சலக மனிதர்க்கும் சமரச அழைப்பு விடுக்கிறார் குணங்குடியார். அங்கு சென்றால்,

> **பாவங்கள் சோர்ந்திடும், காய்ந்திடும் – நீந்திடும்**
> **பாய்ந்திடும் ஓய்ந்திடும் தீய்ந்திடும் இக்ஷணம்** *(கீர்த். 21)*

என்கிறார்.

இறைவனை அடையத் தடையாக இருக்கும் பாவங்களில் இருந்து இந்த மனித சமுதாயமே மீட்சியடைந்து இறைவனில் ஒன்ற வேண்டும் என்கின்ற குணங்குடியாரின் எண்ணம் அவர் ஓர் ஒப்புயர்வற்ற சூஃபி ஞானி என்பதையும் மிகச் சிறந்த சமரசஞானி என்பதையும் உலகிற்கு உணர்த்துகிறது.

எல்லாவற்றிலும் சூஃபி ஞானக் கொள்கையைப் பதிவு செய்யும் குணங்குடியார், அவற்றைப் பதிவு செய்யப் பயன்படுத்தும் வடிவங்களும் செம்மையானவை; செழுமையானவை. இவை யெல்லாம் அவர் 'ஞானக் கருவூலம்,' 'ஞானக் களஞ்சியம்,' 'ஞானக் கடல்,' 'ஞானச் சித்தர்,' 'ஞான வள்ளல்' என்பதை நிலைநிறுத்து கின்றன.

குணங்குடியாரின் பாடல்கள் அனைத்தும் சூஃபி ஞானத்தின் பிழிவுகள். அவை எங்கும் எதிலும் இறைவனையே காண்கின்றன. பேதமற்ற மனித ஒருமை நிலையைச் சுட்டும் போதும், உலகியலில் உள்ள பொய்மையைச் சாடும் போதும், ஆடம்பர வாழ்வையும் செல்வ எதிர்ப்பையும் பதிவு செய்யும் போதும், பெண்ணாசை

உள்ளிட்ட பேராசைகளை மறுக்கும் போதும் அப்பாடல்களில் சூஃபித்துவமே வெளிப்படுகின்றது. சமுதாயத்தைப் பேசும் போதும், சமரசத்தைப் பேசும் போதும் சூஃபித்துவத்தைப் பேசும் குணங்குடியார் பாடல்களின் அடி நாதம் சமய சமுதாய சமரச சூஃபித்துவமே.

இங்ஙனம் சமய சமுதாய சமரச சூஃபித்துவம் பேசும் குணங்குடியாரின் வாழ்வியல் சிந்தனைகளை அறிந்து போற்றுதலும், பின்பற்றுதலும் தமிழர் தம் தலையாய கடனாகக் கருத வேண்டும். எல்லோரையும் ஒன்றிணைத்துப் பார்க்கும் பேருள்ளம் கொண்ட ஞான மகான் குணங்குடியார் தமிழ் கூறும் நல்லுலகில் வாழ்ந்து சிறந்தார் என்பது எண்ணி எண்ணிப் போற்றத் தக்கது. இவரைப் போன்ற மகான்களின் நெறிமுறைகளை ஓர்ந்து கற்றுப் பின்பற்றினால்,

**இனிய கீதை**
**இந்துக்களையும்**
**கீர்த்தி மிகு பைபிள்**
**கிறித்துவர்களையும்**
**முதிர்ந்த குர்ஆன்**
**முஸ்லிம்களையும்**
**உற்பத்தி செய்யாமல்**
**மனிதர்களை உருவாக்கும்** (அப்துல் ரகுமான்)

என்னும் ஆர்வக் கனவை நனவாக்கி விடலாம்.



## பின்னிணைப்பு 1

### குணங்குடியார் வரலாற்றுக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | சுல்தான் அப்துல் காதிர் |
| பிறப்பு | : | கி.பி. 1788 |
| ஊர் | : | குணங்குடி (இராமநாதபுரம் மாவட்டம் தொண்டிக்கும் தேவகோட்டைக்கும் அருகில் உள்ளது) |
| தந்தையார் | : | நயினார் முகம்மது (தமிழ்ப் புலமையாளர்) |
| தாயார் | : | பாத்திமா (நபிகள் நாயகத்தின் குடிவழிப் பெருமையுடையவர்) |
| தாய் மற்றும் தந்தை வழிப் பாட்டனார் | : | முல்லா ஹுஸைன் - மதுரை மின்னா நூருதீன் புலவர் |
| மார்க்கக் கல்வி பயிற்றிய ஆசிரியர் | : | கீழக்கரை ஞானக்கடல் தைக்கா சாகிபு |
| கல்வி | : | இளமையிலேயே திருக்குர்ஆனை மனனம் செய்து ஆலிம் பட்டத்தைப் பெற்றார். தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும் புலமையுடன் விளங்கினார். |
| இணை பிரியா நண்பர் | : | புலவர் நாயகம் செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் (ஷேகனாப் புலவர்) |
| துறவு | : | கி.பி. 1805 |

| | | |
|---|---|---|
| தீட்சை கொடுத்தவர் | : | திருச்சிராப்பள்ளி மௌல்வி ஷாம் சாகிபு |
| தங்கித் தவம் செய்த இடங்கள் | : | திருப்பரங்குன்றம், சதுரகிரி, புறாமலை, நாகமலை, ஆனைமலை, காடுமேடு, செடிகொடி, குப்பைமேடு, நகர்ப்புறம். |
| உணவு | : | சருகு, கிழங்கு, காய், கனி, கற்கண்டு, பால் |
| வேறு பெயர்கள் | : | குணங்குடியார், தொண்டியார், மஸ்தான் சாகிபு, ஆரிபுபில்லா (இறைஞானி), ஒலியுல்லா (இறையன்பர்), 'மஸ்தான் சாமி.' |
| தீட்சை பெற்றோர் | : | ஆற்காடு நவாப் உள்ளிட்ட பல சமயத்தவர். |
| இறுதி நாட்கள் | : | சென்னை இராயபுரம் பாவா லெப்பைத் தோட்டத்தில் தங்கித் தவம் இயற்றல், ஏழை எளியோர்க்கும் பொதுமக்களுக்கும் வேண்டியன செய்தல். |
| சிறப்புகள் | : | அட்டமா சித்து வல்ல சர்வ சமய சமரச ஞானி, இஸ்லாமியத் தாயுமானவர் |
| மரபு | : | காதிரிய்யா நெறி |
| பரிபூரணம் | : | கி.பி.1835 |
| தறுகா | : | சென்னை தண்டையார்பேட்டை இராயபுரம் பிச்சாண்டித் தெரு, எண். 50. |

☯

## பின்னிணைப்பு 2

### குணங்குடியார் பாடல்கள்*

| குரு வணக்கம் | பாடல்கள் |
|---|---|
| ஆநந்தப் பத்து 1 | 10 |
| முகியித்தீன் சதகம் 3 | 100 |
| முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம் | 4 |
| அகத்தீசன் சதகம் 1 | 100 |
| மகுமூது நபியாண்டவரைச் | |
| சுகானுபவமுறத் துதித்தல் | 1 |
| தவமேபெற வேண்டுமெனல் | 14 |
| குறையிரங்கி உரைத்தல் | 7 |
| தவராஜ மகிமை சாற்றல் | 1 |
| வானருள் பெற்றோர் | |
| மனநிலை உரைத்தல் | 1 |
| ஆனந்தக் களிப்பு (1) | 38 |
| நிராமயக் கண்ணி | 280 |
| பராபரக் கண்ணி | 100 |
| றகுமான் கண்ணி | 100 |
| எக்காலக் கண்ணி | 17 |
| கண்மணிமாலைக் கண்ணி | 100 |
| மனோன்மணிக் கண்ணி | 100 |
| நந்தீஸ்வரக் கண்ணி | 51 |
| கீர்த்தனைகள் | 22 |
| ஆனந்தக் களிப்பு (2) | 28 |
| | 5+1074 |
| மொத்தம் | 1079 |

*(ஆதாரம்: அப்துல் ரகுமான், குணங்குடியார் பாடற் கோவை)

## பின்னிணைப்பு 3

### குணங்குடியார் மீது பாடப்பெற்ற புகழ்மாலைகள்

| | பாடல்கள் |
|---|---|
| 1. சரவணப்பெருமாள் ஐயர் | |
| நான்மணி மாலை | 40+1 |
| 2. ஐயாசுவாமி முதலியார் | |
| தோத்திரப்பா | 24 |
| கீர்த்தனம் | 3 |
| 3. வேங்கடராயப்பிள்ளைக் கவிராயர் | |
| தோத்திரப்பா | 11 |
| 4. சபாபதி முதலியார் | |
| பஞ்சரத்தினம் | 5 |
| 5. செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலீம் புலவர் | |
| ஒருபா ஒருபஃது | 11 |
| தோத்திரப்பா | 10 |
| வாயுறை வாழ்த்து அடிகள் | 290 |



## பின்னிணைப்பு 4
## குணங்குடியார் பாடல் பதிப்புகள்

*(கால வரிசைப்படி)*

*(ப.ஆ. பதிப்பாசிரியர்/உ.ஆ. உரையாசிரியர்/கு.ஆ. - குறிப்பாசிரியர்)*

| | | | |
|---|---|---|---|
| 1. | செய்கு அப்துல் காதிர் | : | குணங்குடி மஸ்தான் நயினார் லெப்பை திருப்பாடற்றிரட்டு, ஆலிம் புலவர் (புலவர் நாயகம்) பதிப்பு: 1847 |
| 2. | செய்கு அப்துல் காதிர் | : | குணங்குடி மஸ்தான் நயினார் லெப்பை திருப்பாடற்றிரட்டு, ஆலிம் புலவர் (புலவர் நாயகம்) பதிப்பு: 1860 |
| 3. | நைனா முகம்மதுப் பாவலர் | : | குணங்குடி மஸ்தான் திருப்பாடற்றிரட்டு, வீராசாமி நாயுடு சற்குண வீதி அச்சுக்கூடம், சென்னை. பதிப்பு: 1870 |
| 4. | ஆறுமுக சுவாமிகள் (ப.ஆ.) | : | மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு, பரப்பிரம முத்திராசாலை, திருவொற்றியூர். முதற் பதிப்பு : 1873 இரண்டாம் பதிப்பு: 1879 |
| 5. | நாராயணசாமி முதலியார் (ப.ஆ.) | : | மஸ்தான் சாகிபு பாடல், பிரபாகர அச்சுக்கூடம், சென்னை. பதிப்பு: 1875 |
| 6. | வேலாயுத முதலியார் (ப.ஆ.) | : | மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு, கலைக்கியான விளக்க அச்சுக் கூடம், சென்னை. பதிப்பு: 1887 |

7. ஆசிரியர் பெயர் இல்லை : குணங்குடி மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு, சென்னை. பதிப்பு: 1889

8. வைத்தியலிங்கம் பிள்ளை (ப.ஆ.) : மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு தொண்டை மண்டல அச்சியந்திர சாலை, பதிப்பு: 1889

9. ஆறுமுக சுவாமிகள் (ப.ஆ.) : மஸ்தான் சாகிபு அவர்கள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு, திருவொற்றியூர். பதிப்பு: 1895

10. இராமஸ்வாமி நாயுடு : மஸ்தான் சாகிபு காஞ்சிபுரம் - பிரபன்ன திருவாய் மலர்ந்தருளிய வித்துவான் (உ.ஆ.) திருப்பாடற்றிரட்டு சுப்புராய முதலியார் அண்டு கம்பெனியார், சென்னை. பதிப்பு: 1905

11. வடிவேலு முதலியார் மா.: (உ.ஆ.) குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல் சு.துளசிங்க முதலியார் அண்டு சன்ஸ் சுந்தர விலாச அச்சுக் கூடம், பூவிருந்தவல்லி. சென்னை. பதிப்பு: 1908

12. ஷாஹுல் ஹமீது : குணங்குடி மஸ்தான் சாகிபு லெப்பை எம்.ஏ. திருவாய் மலர்ந்தருளிய மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு (அறபுத்தமிழ்) ஷாஹுல் ஹமீதியா பிரஸ், பதிப்பு: 1912 (ஹிஜ்ரி 1332)

13. செய்குத்தம்பிப் பாவலர் கா.ப. (ப.ஆ.) : குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு, சக்கரவர்த்தி அண்டு கம்பெனி, சென்னை. பதிப்பு: 1914

| | |
|---|---|
| 14. செய்குத்தம்பிப் பாவலர்: கா.ப. (ப.ஆ.) | குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு, வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை. பதிப்பு: 1919 |
| 15. துரைசாமி முதலியார் (ப.ஆ.) : | குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு, ஸ்ரீ சுப்பிரமணிய விலாச பிரஸ், சென்னை. பதிப்பு: 1923 |
| 16. நெயினா முகம்மதுப் : பாவலர் (ப.ஆ.) | குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் திருவாய் மகாவித்துவான் எம்.ஏ. மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு, பூமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை. பதிப்பு: 1925 |
| 17. இராமஸ்வாமி நாயுடு : | குணங்குடி மஸ்தான் சாகிபு காஞ்சிபுரம் (உ.ஆ.) அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு பூமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை. பதிப்பு: 1925 |
| 16. செய்குத்தம்பிப் பாவலர் : கா.ப. (ப.ஆ.) | குணங்குடி மஸ்தான் சாகிபு திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு, வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை. பதிப்பு: 1927 |
| 17. வடிவேலு முதலியார் மா. : (உ.ஆ.) | குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல் ஷாகுல் ஹமீது லெப்பை ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர (ப.ஆ.) சாலை, சென்னை. பதிப்பு: 1928 |
| 18. செய்குத்தம்பிப் பாவலர் : | குணங்குடி மஸ்தான் சாகிபு காப(ப.ஆ) அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு |

வித்தியாரத்நாகர அச்சுக்கூடம் சென்னை. பதிப்பு: 1941

19. செய்குத்தம்பிப் பாவலர் : மஸ்தான் ஸாகிபு அவர்கள் திருவாய் கா.ப. (ப.ஆ.) மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு ஹாஜி எம்.ஏ. ஷாஹுல் ஹமீது அண்டு சன்ஸ் சென்னை. பதிப்பு: 1946

20. செய்குத்தம்பிப் பாவலர் : குணங்குடி மஸ்தான் சாகிபு கா.ப. (ப.ஆ.) அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு இட்டா பார்த்தசாரதி நாயுடு சன்ஸ் சக்கரவர்த்தி பிரஸ், 189, தங்கசாலை வீதி, சென்னை. பதிப்பு: 1956

21. செய்குத்தம்பிப் பாவலர் : கா.ப. (ப.ஆ.) மஸ்தான் சாகிபு அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு ஹாஜி எம்.ஏ.ஷாஹுல் ஹமீது அண்டு சன்ஸ் சென்னை. பதிப்பு: 1964

22. ரஷீத் என்.ஏ. (உ.ஆ.) : ஞானவள்ளல் குணங்குடி மஸ்தான் சாகிபு பாடலும் உரையும் 1/33, சத்திய மூர்த்தி நகர், நந்தனம், சென்னை - 600 035. முதற்பதிப்பு: 1977

23. அப்துல் ரகுமான் : குணங்குடியார் பாடற்கோவை (ப.ஆ. மற்றும் கு.ஆ.) (குறிப்புரை) அகரம் வெளியீடு, சிவகங்கை. பதிப்பு: 1980

24. சின்னப்பன் தி.இரா. : குணங்குடி மஸ்தான் சாகிபு (ப.ஆ.) பாடல்கள் மூலமும் உரையும் (முதற் பகுதி) முல்லை நிலையம் 9, பாரதி நகர், முதல் தெரு, தி.நகர், சென்னை - 17. பதிப்பு: 1998

25. சின்னப்பன் தி.இரா. : குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் (ப.ஆ.) மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி) முல்லை நிலையம், 9, பாரதி நகர், முதல் தெரு, தி.நகர், சென்னை - 17. பதிப்பு: 1998.

26. மகுதண்ணா ராவுத்தர் ப. : குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் (ப.ஆ.) திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு ஆதி கலாநிதி அச்சுக்கூடம் சென்னை. ஆண்டு இல்லை.

27. வடிவேலு முதலியார் மா.: (உ.ஆ.) குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் (பாட்டும் உரையும்) முல்லை நிலையம்9, பாரதி நகர் முதல் தெரு, தி.நகர், சென்னை-600 017. பதிப்பு: 2004

28. ஜெகாதா : ஞானச்சித்தர் குணங்குடியார் வாழ்வும் வாக்கும் அழகு பதிப்பகம் 15/21, ஆசிரியர் சங்கக் குடியிருப்பு, இராஜாஜி நகர் விரிவு, வில்லிவாக்கம், சென்னை - 600 049.
முதற் பதிப்பு: 2005

☯

## பின்னிணைப்பு 5

### உதவிய நூல்கள்


1. அப்துல் கறீம் மு. 2005. இஸ்லாமும் தமிழும், உத்தம பாளையம்: ஆயிஷா பதிப்பகம்.
2. அப்துல் காதிர் உமரி எம்.எம். 2002. திருக்குர்ஆன் பொருள் அட்டவணை, நெல்லை ஏர்வாடி: இஸ்லாமிய ஆய்வு அண்டு வெளியீட்டு மையம்.
3. அப்துல் ரகுமான் (ப.ஆ. மற்றும் கு.ஆ.). 1980. குணங்குடியார் பாடற்கோவை, சிவகங்கை: அகரம்.
4. அப்துல் ரகீம் 2006: குணங்குடிச் சித்தர் பொன்மொழிகள், சென்னை: அநுராகம்.
5. அப்துற்-றஹீம் 1981. இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் (தொகுதி ஒன்று), இரண்டாம் பதிப்பு (முதல் பதிப்பு 1976), சென்னை: யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் அண்ட் புக் செல்லர்ஸ்.
6. ——1977. இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் (தொகுதி இரண்டு), சென்னை: யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் அண்ட் புக் செல்லர்ஸ்.
7. ——1979. இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் (தொகுதி மூன்று), சென்னை: யுனிவர்ஸல் பப்ளிகேஷன்ஸ் அண்ட் புக் செல்லர்ஸ்.
8. ——1999. முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள், மூன்றாம் பதிப்பு (முதல் பதிப்பு 1957) சென்னை: யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்.
9. அப்துஸ் ஸமது. அ.ஸ. 1996. இஸ்லாமிய இலக்கிய நோக்கு (இஸ்லாமிய இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைகள்), கல்முனை (இலங்கை): இஸ்லாமிய நூல் வெளியீட்டுப் பணியகம்.
10. அருணாசலம் ப. 1973. பக்தி இலக்கியம் ஓர் அறிமுகம், சென்னை: தமிழ்ப் புத்தகாலயம்.
11. அலிபாவா உ 2003. இஸ்லாமியச் சதக இலக்கியங்களும் தஸ்தகீர் சதகமும், சென்னை: தி பார்க்கர்.
12. ………2005அ. இஸ்லாமியச் சதகங்களின் பாடுபொருள், திருச்சிராப்பள்ளி: வளர்தமிழ்ப் பதிப்பகம்.
13. ——2005ஆ. இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் மறைமொழியும் திருநபியும், திருச்சிராப்பள்ளி: வளர்தமிழ்ப் பதிப்பகம்.
14. ………2007அ. இஸ்லாமியச் சதகச்சொல் அகராதி, திருச்சிராப்பள்ளி: வளர்தமிழ்ப் பதிப்பகம்.

15. ........2007ஆ. தமிழில் இஸ்லாமியச் சதக இலக்கியங்கள், திருச்சிராப்பள்ளி: வளர்தமிழ்ப் பதிப்பகம்.

16. ஆனந்த ரவிசாஸ்திரி க.ஆ. 2008. சித்தர்களின் சமுதாயச் சிந்தனைகள், சென்னை: பாவை பப்ளிகேஷன்ஸ்.

17. இராமலிங்கம் அரங்க. 2003: சித்தர் நோக்கில் சைவநெறி, சென்னை: அநுராகம்.

18. ........2009. சித்தர்களின் குறியீட்டுச் சொற்கள், சென்னை: அநுராகம்.

19. உவைஸ் எம்.எம். (ப.ஆ.). 1979. பிறைக்கொழுந்து, இலங்கை: மர்கசி.

20. ........1983. தமிழ் இலக்கிய அறபுச் சொல் அகராதி, மதுரை: மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

21. கணபதி டி.என். 2004. தமிழ்ச் சித்தர் மரபு, சென்னை: ரவி பப்ளிகேஷன்ஸ்.

22. கதிரைவேற்பிள்ளை நா. 1981. தமிழ்மொழி அகராதி, புதுடெல்லி: ஜெ. ஜெட்லி ஏசியன் எஜுகேஷன்ஸ் சர்வீஸஸ்.

23. கமலக்கண்ணன் பா. 2002. குணங்குடியாரின் ஞானவழி, இரண்டாம் பதிப்பு (முதல் பதிப்பு 1993), சென்னை: வானதி பதிப்பகம்.

24. கல்யாணசுந்தர முதலியார் பூவை. 1957. தாயுமான சுவாமிகள் திருப்பாடல் திரட்டு, சென்னை: ரத்தின நாயக்கர் சன்ஸ்.

25. கனி ஆர்.பி.எம். 1997. மாபெரும் தவசிலர் முஹ்யித்தீன் ஆண்டகை (முதல் பாகம்), சென்னை: பஷாரத் பப்ளிஷர்ஸ்.

26. .........1997. மாபெரும் தவசிலர் முஹ்யித்தீன் ஆண்டகை (இரண்டாம் பாகம்), சென்னை: பஷாரத் பப்ளிஷர்ஸ்.

27. .........1997. மாபெரும் தவசிலர் முஹ்யித்தீன் ஆண்டகை (மூன்றாம் பாகம்), சென்னை: பஷாரத் பப்ளிஷர்ஸ்.

28. கிரிதாரி பிரசாத் நா. 2003. திருவருட்பா திருவமுதத் திரட்டு, கோவை: ருக்மணி ஆப்செட் பிரஸ்.

29. குர்ரம் முராத் (தொ.ஆ.). 2000. பெருமானார் (ஸல்) தரும் பரிசு, சென்னை: இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்.

30. குருசாமி ம.ரா.போ. (ப.ஆ.). 1987. பாரதியார் பாடல்கள் ஆய்வுப் பதிப்பு, தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம்.

31. சாத்தையா வை. (ப.ஆ.). 1999. இசுலாமிய இலக்கியத் தேன், திருச்சிராப்பள்ளி: வைஜயந்தி பதிப்பகம்.

32. சாலி ஜே.எம். 1989. நாகூர் நாயகம் வரலாறு, தஞ்சாவூர்: காஜியார் புக் டிப்போ.

33. சிங்காரவேலு முதலியார் ஆ. 1982. அபிதான சிந்தாமணி, புதுடெல்லி: ஏசியன் எஜுகேஷன்ஸ் சர்வீஸஸ்.

34. சின்னப்பன் தி.இரா. (ப.ஆ.). 1998அ. குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் (முதல் பாகம்), சென்னை: முல்லை நிலையம்.

35. ......(ப.ஆ.). 1998ஆ. குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் (இரண்டாம் பாகம்), சென்னை: முல்லை நிலையம்.

36. சுந்தரமூர்த்தி கு. (ப.ஆ.). 1986அ. தொல்காப்பியம் பொருளதிகாரம் (தொகுதி 1), அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

37. ......1986ஆ. தொல்காப்பியம் பொருளதிகாரம் (தொகுதி 2), அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

38. நயினார் முகம்மது சி. 1993. மஸ்தான் சாகிபும் தாயுமானவரும் - ஓர் ஒப்பு நோக்கு, திருச்சிராப்பள்ளி: உமறு பதிப்பகம்.

39. நாசீர் அலி மீ.அ.மு. 1991. இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் சூஃபித்துவம், திருச்சிராப்பள்ளி: எம்.ஐ.இ.டி.சொசைட்டி.

40. பாலயோகி குணங்குடிதாசன் 1967. ஞானக் களஞ்சியம் குணங்குடி மஸ்தான் வரலாறு, சென்னை: பூமகள் கம்பெனி.

41. மணவை முஸ்தபா (தொ.ஆ.). 1979. தமிழில் சூஃபி இலக்கியங்கள், சென்னை: மீரா ஃபௌண்டேஷன்.

42. ......(தொ.ஆ.). 1980. தமிழில் இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள், சென்னை : மீரா ஃபௌண்டேஷன்.

43. ........1991. இளைஞர் இஸ்லாமியக் கலைக் களஞ்சியம், சென்னை: மீரா பப்ளிகேஷன்.

44. மதனி 1957. மஸ்தான் சாகிபு யார்?, சென்னை: தாஜ்மஹால் பதிப்பகம்.

45. மாணிக்கவாசகம் இரா. 1982. திருமந்திர ஆராய்ச்சி, சென்னை: அன்னை அபிராமி அருள் வெளியீடு.

46. முகம்மது உவைஸ் ம. 1965. ஞானச் செல்வர் குணங்குடியார், சென்னை: யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்.

47. முகம்மது உவைஸ் ம. அஜ்மல் கான் பீ.மு. 1994. இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு (தொகுதி ஒன்று), மதுரை: மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

48. முகம்மது பின் இஸ்மாயில் (தொ.ஆ.). 2001. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம் - தமிழாக்கம் - ஏழாம் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

49. .........(தொ.ஆ.). 2000. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம் - தமிழாக்கம் - ஆறாம் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

50. ____(தொ.ஆ.). 2002. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம் - தமிழாக்கம் - ஐந்தாம் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

51. ____(தொ.ஆ.). 1998. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம் - தமிழாக்கம் - நான்காம் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

52. ____(தொ.ஆ.). 1997. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம் - தமிழாக்கம் - மூன்றாம் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

53. ____(தொ.ஆ.). 2001. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம் - தமிழாக்கம் - இரண்டாம் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

54. ____(தொ.ஆ.). 2004. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம்: தமிழாக்கம் - முதல் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

55. முகமதலி சேமுமு காஜா முகைதீன் ஒ.ஆ. 1999. ஆய்வரங்கக் கோவை, சென்னை: இஸ்லாமிய இலக்கியக் கழகம்.

56. முஹம்மது அப்துல் காதிர் சாஹிப் பாக்கவி எஸ்.எஸ். (ஆ.இ.), இமாம் நவவீ (ரஹ்) அவர்களின் நாற்பது ஹதீஸ்கள் (மூலம்: மொழிபெயர்ப்பு - விளக்கவுரை), சென்னை: இஸ்லாமிய நூல்கள் மலிவுப் பதிப்பு பப்ளிஷர்ஸ்.

57. முஸ்தபா, தமீம் (ப.ஆ.). 1997. நபிகளாரின் பொன்மொழிகள் ஸஹீஹுல் புகாரி (மூலம் - தமிழாக்கம் - மூன்றாம் பாகம்), சென்னை: ரஹ்மத் பப்ளிகேஷன்ஸ்.

58. ரஷீத் என். ஏ. 1977. ஞான வள்ளல் குணங்குடி மஸ்தான் சாகிபு பாடலும் உரையும், சென்னை: ஞான வள்ளல் பதிப்பகம்.

59. லக்ஷ்மணன் கி. 2008. இந்திய தத்துவ ஞானம், ஒன்பதாம் பதிப்பு (முதல் பதிப்பு 1960), சென்னை: பழனியப்பா பிரதர்ஸ்.

60. வடிவேலு முதலியார் மா. (உ.ஆ.). 2004. குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் (உரையுடன்), சென்னை: முல்லை நிலையம்.

61. ——(உ.ஆ.). 2008. குணங்குடி மஸ்தான் சாகிபு பராபரக் கண்ணி (உரையுடன்), சென்னை: முல்லை நிலையம்.

62. வரதராசனார் மு. (உ.ஆ.). 2008. திருக்குறள் தெளிவுரை, 205ஆவது பதிப்பு (முதல் பதிப்பு 1949), சென்னை: திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

63. விமலானந்தம் மது.ச. 1987. தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் (முதல் தொகுதி), சென்னை: ஐந்திணைப் பதிப்பகம்.

.. வேங்கடசாமி ரெட்டியார் கி. 1981. நாலாயிர திவ்வியப் பிரபந்தம், இரண்டாம் பதிப்பு (முதல் பதிப்பு 1973), சென்னை: திருவேங்கடத்தான் திருமன்றம்.

65. ஹபீப் முஹம்மத் கே.வி.எஸ். (தொ.ஆ.). 1998. வேதவரிகளும் தூதர் மொழிகளும், இரண்டாம் பதிப்பு (முதல் பதிப்பு 1998), சென்னை: இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட்.

66. (ஆ.பெ.இ.) குர்ஆன் மஜீத் திருக்குர்ஆன் (மூலமும் தமிழ் உரையும்). 1990. ஆறாவது பதிப்பு (முதல் பதிப்பு 1983), சென்னை: ஹாஜி முஹம்மது ஜான் லிட்டரரி அண்ட் சாரிடபிள் டிரஸ்ட்.

67. MAHATHIR MOHAMED 2000. **ISLAM AND THE MUSLIM UMMAH** (Selected speeches of Author), Malaysia: Pelanduk Publications(M) Sdn.Bhd.S.

68. MOHAMED SAHABDEEN A.M. 1995. **The Sufi Doctrine in Tamil Literature**, Second Edition (First Edition 1986), Srilanka: Abdul Majeed Mohamed Sahabudeen Trust Foundation.

69. RAMALINGAM ARANGA. 2004. **THE WAY OF THE SIDDHARS**, Chennai: SivaGuru Pathippagam.

1 SHAMS M. 1976. **SUFISM AND SAIVISM IN TAMIL NADU A COMPARATIVE STUDY** (Thesis Submitted for The Degree of Doctor of Philosophy). Annamalai Nagar: Annamalai University.

71. SOURIRAJAN P. 1978. **A CRITICAL STUDY OF SAINT THAYUMANAVAR**, Tirupathy: Sri Venkateswara University.

72. VALIUDDIN MIR. 1959. **THE QUARANIC SUFISM**, Delhi: Motilal Banarsidas.

**சூஃபி மெய்ஞ்ஞானி குணங்குடி மஸ்தான் சாகிபு (1788-1835):** இராமநாதபுரம் மாவட்டம் குணங்குடியைச் சார்ந்த இவர் இஸ்லாமியத் தமிழ்த் தத்துவ இலக்கியப் படைப்பாளர்களுள் தலை சிறந்தவர். இஸ்லாமியத் தமிழ்ச் சித்தர், சூஃபி ஞானி, ஞானக் கடல், ஞானக் கருவூலம், ஞானக் களஞ்சியம், ஞானச் சித்தர், ஞான வள்ளல், ஞான மகான் என்றெல்லாம் போற்றப்படும் இவர் மெய்ஞ்ஞானப் பாடல்கள் பாடுவதில் வல்லவர். சர்வ சமய சமரச நோக்குடையவர். இஸ்லாமியத் தாயுமானவர். சாதி, மத, இன, மொழி பேதமின்றி எல்லோரையும் நேசித்து வாழ்ந்த இவருடைய படைப்புகள் இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் எனும் எல்லையைக் கடந்து இன்றும் எல்லோர் நெஞ்சங்களையும் ஈர்க்கும் தன்மையுடன் திகழ்கின்றன. பரிபாஷைகளும் வழக்குச் சொற்களும் பழமொழிகளும் நாயக நாயகி பாவமும் இசையுடன் கூடிய சந்த நயமும் இவருடைய பாடல்களுக்கு மெருகூட்டுகின்றன. இவரது பாடல்கள் அனைத்தும் சூஃபிஞானத்தின் பிழிவுகள். அவை எங்கும் எதிலும் இறைவனையும் சூஃபித்துவத்தையுமே காண்கின்றன. சமுதாயத்தைப் பேசும் போதும், சமரசத்தைப் பேசும் போதும் சூஃபித்துவத்தைப் பேசும் குணங்குடியார் பாடல்களின் அடிநாதம் சமய சமுதாய சமரச சூஃபித்துவமே.

உ. அலிபாவா: முதுபெரும் புகழுடைய திருச்சிராப்பள்ளி ஜமால் முகம்மது கல்லூரியில் தமிழ் உதவிப் பேராசிரியராகப் பணிபுரிந்து தற்போது திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றிவரும் இவர் தமிழ் இலக்கியத்தின் மீதும், இஸ்லாமிய இலக்கியத்தின் மீதும் ஆழ்ந்த ஈடுபாடுடையவர். 'தமிழில் இஸ்லாமியச் சதக இலக்கியங்கள்' எனும் இவரது ஆய்வு நூல் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் பேராசிரியர் நா.வானமாமலை ஆராய்ச்சி விருதினைப் பெற்றுள்ளது.



Sufi Meignani Gunangudi Masthan Sahib (Tamil)

₹ 50

ISBN : 81-260-3161-0

